# அன்பு வளர்த்த அறிவுப் பயிர்

## ஆழ்வார்களும் ஆசாரியர்களும்






பி. ஸ்ரீ

## ஆசிரியர்

பி. ஸ்ரீ. அவர்களை அறியாத தமிழர்கள் இருக்க முடியாது. விகடனில் அவர் வாரந் தவறாமல் எழுதி வந்த ராமாயணக் கட்டுரைகளை எல்லோரும் ரஸித்துப் படித்திருப்பார்கள். இலக்கியச் சுவை கெடாமல் பக்திச் சுவையையும் அதனுள் கலந்து ஊட்டி, தம் இனிய சரளமான நடையால் ரஸிகர்களை இன்பத்தில் ஆழ்த்தும் சக்தி இவர் பேனாவுக்கு உண்டு. ஆண்டாள், பெரியாழ்வார், திவ்யப் பிரபந்த சாரம், சிவநேசச் செல்வர் முதலிய பல பக்திஇலக்கியங்களுக்கு இவர் ஆசிரியர். சிவ-விஷ்ணு பேதம் இல்லாமல் சமரச நோக்கத்துடன் ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகியவர்களுடைய வாழ்க்கையில் நிகழ்ந்த அருமையான சம்பவங்களையும் அவர்களுடைய கவிதைகளைப்பற்றிய விமர்சனங்களையும் ரசமாக எழுதுவதில் இவருக்கும் ஒப்பு இவரே. பி. ஸ்ரீ. யின் ஆழ்ந்த அறிவு, இவர் எழுத்து ஒவ்வொன்றிலும் சுவையை மிகுத்துக் காட்டுகிறது.

பன்னிரு ஆழ்வார்களின் வரலாறுகள், பல இனிய அரிய விஷயங்களோடு ஒன்பது புத்தகங்களாக வெளி-வருகின்றன. இது இந்த வரிசையில் ஒன்பதாவது கடைசி நூல்.

# முன்னுரை

பூசலுக்கு இடங்கொடாமல், சமயம் வாழ்க்கையில் ஒன்றுபட்டு இசைந்தால்தான் நாட்டு மக்கள் அமைதியும் இன்பமும் பெற்று நல்வாழ்வு வாழ முடியும். இக்கருத்தை அடிப்படையாகக்கொண்டு திரு. பி. ஸ்ரீ. எழுதியுள்ள 'ஆழ்வார்களும் ஆசாரியர்களும்' என்ற நூல் என் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது.

திரு பி. ஸ்ரீ. அவர்களைத் தமிழ் உலகம் நன்றாக அறியும். மதிநிறைவு, மொழித் தேர்ச்சி, சொல்நயம் இவற்றைப் பெற்றவர் இவர்; இவர் கட்டுரைகள் எல்லோரையும் மகிழ்விப்பன. பலப்பல நூல்களை எழுதிப் புகழ் பெற்ற இவர் தெளிந்த சமரசப் பான்மையுடையவர். வைணவ சைவ நூல்களைக் கசடறக் கற்றுணர்ந்து அவற்றிடை அமைந்த ஒற்றுமைகளை யாவரும் எளிதில் உணரும் வகையில் விளக்கி வருபவர். ஆகவே இந்த நூலை எழுதுவதற்கு எல்லாத் தகுதியும் உடையவர். இந்நூலை நான் முழுமனத்துடன் வரவேற்கிறேன்.

இந்த நூலில் 16 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. முதல் 15 கட்டுரைகள் ஆழ்வார்கள் கொண்ட உயர்கொள்கைகளையும், அவைகளை ஆசாரியர்கள் - அல்லல் பலவற்றிற்கு ஆளாகியும் தளராமல் - தென்னாட்டவர்களுக்கும் வடநாட்டவர்க்கும் எடுத்துரைத்த வரலாற்றையும், ஆசாரியர்களின் பரம்பரையையும், அவர்கள் பண்பாடுகளையும், தம் மாணவர்களிடம் அவர்கள் காட்டிய அளவு கடந்த அன்பையும், மாணவர்கள் தம் ஆசிரியர்களிடத்தில் காட்டிய அளவு கடந்த பக்தியையும், பிரபந்தங்களுக்கு அமைந்துள்ள வியாக்கினங்களின் சீரையும் சிறப்பையும் எடுத்துரைக்கின்றன.

இறுதியில் உள்ள ஒன்று இன்றைய உலகின் போக்கைச் சுட்டிக் காட்டி அதனைப்பற்றியுள்ள நோயையும், அந்நோய் தீருவதற்குள்ள மருந்தையும் உணர்த்துகின்றது.

ஆழ்வார்கள் 'பக்திப் பூங்கோயில்' எழுப்பினவர்கள் என்றும், ஆசாரியர்கள் அப்பூங்கோயிலுக்கு ஞானக்கோட்டை கட்டினவர்கள் என்றும் ஒரே வாக்கியத்தில் சுருக்கிச் சொல்லியிருப்பது கவனிக்கத் தக்கது.

ஆழ்வார்களுள் முதன்மையாயிருப்பவர் நம்மாழ்வார்; அப்படியே ஆசாரியர்களுள் நாயகமாகச் சிறப்புப் பெற்றவர் ராமானுஜர். இவர்கள் செயற்கரிய செயல்களைச் செய்து பெருமை வாய்ந்தவர்கள்.

ராமனுஜர் தாம் பெரிதும் வருந்திப்பெற்ற திருமந்திரப் பொருளை உலக மக்கள் எல்லாம் இனிதே அறிந்து உய்யும் வண்ணம் வெளியிட்டு அருளிய பெருங்கொடையாளர்; உலகில் நேரும் துன்பங்களை எல்லாம் தாமே ஏற்று, எல்லோரும் இன்புற்று வாழும் நோக்கத்தோடு பெருநெறி மேற்கொண்டு ஒழுகியவர்.

ஒருவன் ஆத்ம லாபத்திற்காக உலகத்தையும் தியாகம் செய்யவேண்டும் என்ற பழைய வேதாந்தக் கொள்கையை மாற்றி, உலக மக்களுக்காக ஒருவன் தன் ஆத்ம லாபத்தையும் தியாகம் செய்யவேண்டும் என்ற பெரு நெறியை மேற்கொண்டு வாழ்ந்து வழி காட்டிய பெருந்தகை.

'' நான்ஒரு வனுமே யன்றே
நசிப்ப(து)இத் திரள்கள் எல்லாம்
ஆனவான் பேரின் பத்தை
அருந்துமே '' அந்தோ!''

என்று எண்ணித் திருமந்திரத்தை மக்களுக்கு வழங்கினர்; ஆழ்வார்கள் சமயத்திற்குப் புத்துயிர் அளித்தார்.

சாதி முதலியவற்றல் உள்ள வேறுபாடுகளை நீக்கி எல்லோரையும் தொண்டர்குலம் என்று ஒருகுலமாக்கிய பெருமை இந்த நூலில் நன்ருக விளக்கப்பட்டிருக்கிறது. ராமனுஜர் வட - தென் மொழி மறைகளை இணைக்கும் பாலமாக நின்று செந்நெறி செலுத்தினர். இவர் காலத்தில் பொங்கிய பக்தி ஊற்று, தென்னட்டிலும் வடநாட்டிலும் பெருவாரியாகப் பாய்ந்தது.

மனத்தைக் கவரக்கூடிய தலைப்புக்கள் இதில் இருக்கின்றன. இதை யாவரும் படித்துப் பயன் அடையலாம், இன்பம் பெறலாம். இந்த நூல் பாராட்டுதற்குரியது.

அண்ணமலை நகர்,
28—5—1959.

**தி. மூ. நாராயணசாமி பிள்ளை**
துணை வேந்தர்,
அண்ணமலைப் பல்கலைக் கழகம்.

# பொருளடக்கம்




பிள்ளை உறங்காவில்லிதாசரை
ராமாநுசர் ஆட்கொண்டது.

# ஆழ்வார்களும் ஆசாரியர்களும்

## 1. ராமாநுஜர் கண்டுபிடித்தது

* 'குருவின் அன்புக்கு உரியவன் ஆவேனோ?' என்ற எண்ணம் பகல் நினைவும் இராக் கனவுமாக இருந்தது சீடருக்கு. 'எத்தனை தடவை திருக்கோஷ்டியூருக்குப் போனேம்! நம்பியின் அருள் பெற்றேமில்லையே!' என்று ஒரு நாள் தொண்டர் நாதனுகிய பகவானுடைய சன்னிதிக்கு முன் தொண்டர், நெருப்பி லிட்ட மெழுகென உருகி நின்றார்.

அப்போது அங்கே திருக்கோஷ்டியூர் நம்பி என்ற நல்லா சிரியருக்கு நெருங்கிய தொடர்பு பெற்றுத் தொண்டாற்றி வந்த பாகவதர் ஒருவர் வந்து சேர்ந்தார். 'பூதூர் வள்ளல் அல்லவா?' என்று இவரைக் கண்டதும் வணக்கம் செலுத்தினார். ஆம்; மனம் உருகிப் பிரார்த்தனை செய்துகொண் டிருந்த சீடர் வேறொருவரும் இல்லை, ஸ்ரீபெரும்பூதூர் சமய உலகிற்கு அளித்த ஜீவமாணிக்க மாகிய ராமாநுஜரே யாவர்.

### தொண்டர் தூது

ராமாநுஜர் பாகவதர் முகம் நோக்கி, 'தங்கள் மூலமாக அடியேன் நமது ஆசிரியருக்கு ஒரு செய்தி அனுப்ப விரும்பு கிறேன்' என்றார். 'அது என்ன செய்தியோ?' என்று பாகவதர் விநயமாய்க் கேட்டதும் ராமாநுஜர்,

* இவ்வரலாறு வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்பரை என்ற தமிழ்ப் பிரபந்தத்தைப் பெரும்பாலும் தழுவி இங்கே எழுதப்படுகிறது.

'பொன் ஆழிக் கையாற்குப்
பூந்துழாய் முடியாற்(கு) இங்(கு)
என் ஆவி ஈடழித்தல்
தகவல' என்(று) இயம்பீரே

[பொன் ஆழிக்கையான், பூந்துழாய் முடியான்: பெருமாளைக் குறிக்கும் பெயர்கள். தகவல-தகுதியல்ல; பெருந்தகைமைக்குப் பொருத்தமல்ல.]

என்று செய்தி சொன்னார்.

'செய்தி சொன்னார்' என்று சொல்வதைக் காட்டிலும், 'சொல்லிக்கொண்டே அழுது விம்மினார்' என்றுதான் சொல்ல வேண்டும். வாய் சொல்ல முடியாத உணர்ச்சிகளையெல்லாம் அழுகையும் விம்மலும் உரைத்துப் பூர்த்தி செய்து விட்டன. பாகவதர் வெகு வேகமாகத் திருக்கோஷ்டியூருக்குப் போய் ராமாநுஜரின் இதயதாபத்தை எடுத்துக் கூறினார்.

நம்பி இரங்கினார். "உண்மையை உணர்ந்துகொள்வதில் ஆசை எவ்வளவு!" என்று நெஞ்சுருகி நின்றார். 'நன்று, நன்று' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். அருகே அகமகிழ்ந்து முகமலர்ந்து நின்றுகொண்டிருந்த பாகவதர் முகத்தை நோக்கினார். "ஒரு திங்கள் உண்ணாவிரதம் கிடந்து வரச்சொல்லும்" என்றார். பாகவதர் சற்றுத் திடுக்கிட்டு நின்றார்.

பிறகு பாகவதர் நம்பியை அடிபணிந்து ராமாநுஜர் இருந்த இடத்திற்குச் சென்றார். போகும் வழியெல்லாம் பூதூர்வள்ளலின் குருபக்தியும், அவர் சொன்ன அந்த அழகிய வாசகமும் இவர் உள்ளத்தை என்ன பாடு படுத்திவிட்டன! 'நம்பி இரங்கினார்; எனினும் உடனே இணங்கினாரில்லையே!' என்ற நினைவும் தொண்டர் உள்ளத்தை வருத்தியது.

'ஆழ்வார் தமது காதலைப் பெருமாளுக்குத் தூது சென்று வெளியிடுமாறு உரைத்த அதே கவிதை – வாக்கில் ராமாநுஜரும் தமது தாபத்தையும் தாகத்தையும் குருபக்தியையும் வெளி

யிட்டாரே! இந்த நினைப்பு ஒருபுறம்; 'இப்பேர்ப்பட்ட பக்திக் காதலருக்கு விரைந்து ஓடிப்போய் அருள்புரிவதை விட்டுக் குருமூர்த்தி பத்தியம் போடுகிறாரே!' என்ற வேதனை ஒருபுறம். ராமாநுஜரோ நோயாளிக்குப் பத்தியம் அவசியந்தானே' என்று உபவாசத்திற்கு ஒருப்பட்டார்.

பதினாறு நாள் உணவு உண்ணாத விரதத்துடன் நீர்பருகாத நோன்பையும் மேற்கொண் டிருந்தார். அடுத்த நாள் ராமாநுஜருக்கு உடல் சோர்ந்து உயிரும் போய்விட்டதோ! என்று ஐயுறும்படி மூச்சும் அடங்கி நின்றது.

இவருக்கும் நம்பிக்கும் இடையே தூதுபோய் வந்த பாகவதர்-அருகேயிருந்து தொண்டாற்றி வந்தவர்-ராமாநுஜரின் நிலை கண்டு திடுக்கிட்டு,

'கெட்டது திருமால் மார்க்கம்;
கெடுத்தனன் நம்பி'!

என்றே புலம்பத் தொடங்கினார். 'நோயைத் தீர்க்க ஏற்பட்ட பத்தியம் நோயாளியையும் தீர்த்துப் பக்தி மதத்தையும் தீர்த்து விடுமோ?' என்று அஞ்சினார்.

பிறகு, அது மூர்ச்சை நிலைதான் என்று கண்டு, ராமாநுஜரின் அந்தரங்க சீடர்களை நோக்கி, 'விழிப்பாகக் கவனித்துக்கொள்ளுங் கள்' என்று சொல்லிவிட்டு, மறுபடியும் நம்பியிடம் விரைந்து சென்றார். குருவின் அடிபணிந்து ராமாநுஜருடைய அபாய நிலையைத் தெரிவித்தார்' அழுதுகொண்டே.

என்ன அதிசயம்! அன்பும் இரக்கமும் விசேஷமாக உடைய குருமூர்த்தி இப்போது எதிர்பாராத நிலையில் சித்தத்தைக் கல்லாக்கிக் கொண்டவர்போல், "போனால், பரமபதவாஸியான ஆளவந்தாரிடம் இரகசியத்தைக் கேட்டறிவார்; இருந்தால் நானாக உரைக்கின்றேன்; இரண்டிலொன்று நிச்சயந்தான்!" என்று சொல்லிவிட்டார். பாகவதர் திகைத்தார்; திடுக்கிட்டார்; பிறகு தெளித்தார்.

'இப்படியும் ஒரு வைராக்கியமா ?' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். நம்பியின் காலில் விழுந்து,"ராமாநுஜருக்குச் சிறங்கை (சிறு அங்கை) தீர்த்தமாவது நியமிக்க வேணும்" என்று பிரார்த்தித்தார். அதற்கு நம்பி, "நீர் ஏங்க வேண்டாம்; தீர்த்தம் அருந்துவதற்கு நாம் எப்போதும் இசைகிறேம்" என்ருர்.

பாகவதர் திரும்பி வந்து நம்பியின் கட்டளையை வெளியிட்டு ராமாநுஜரைத் தீர்த்தம் பருகச் செய்தார். இவ்விதமாக ஒரு மாத உண்ணுவிரதத்தையும் ராமாநுஜர் பூர்த்தி செய்துகொண்டார்.

## தண்டும் பவித்திரமுமாக

பாகவதர் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் உண்ணு நோன்பு பூர்த்தியான செய்தியை அறிவித்ததும் நம்பி கருணை கூர்ந்து, "இனி எதிராஜர் (துறவிகளுக்கு அரசர்) தண்டும் பவித்திரமுமாக வந்து உபதேசம் பெற்றுக்கொள்ளலாம்" என்று சொன்னுர். தண்டமும் பவித்திரமும் துறவு நெறியிலே புலனடக்கத்துடன் புனித வாழ்வு வாழ்வதற்கு உரிய அறிகுறிகள். ராமாநுஜர் தாம் தனியாகவே வந்து உபதேசம் பெறவேண்டும் என்பது குருவின் கருத்து.

இவரோ அளவற்ற மகிழ்ச்சியுடன் தமது சீடர்களுள் முதலியாண்டான், கூரத்தாழ்வான் என்ற இருவரையும் தம்முடன் அழைத்துக்கொண்டு புறப்பட்டார். முதலியாண்டான் ராமாநுஜரின் சகோதரி புதல்வர். கூரேசன் என்ற கூரத்தாழ்வான் ராமாநுஜரது சீடர்களில் அந்தரங்கர்; இவருக்கு உசாத் துணையாக உதவிய நுண்ணறிவாளர்.

இம்மூவரும் திருக்கோஷ்டியூர் நம்பியை அடிவணங்கி நின்றதும், அவர் ராமாநுஜரை நோக்கி, 'மற்று ஆரும் இன்றி உம்மைத் தண்டு பவித்திரச் சார்பாகவே வரச் சொன்னேம். நீரோ அப்படிச் செய்யாமல் இன்று இந்த இருவருடன் வந்தது ஏன் ?' என்று கேட்டார். ராமாநுஜர் அமைதியாக, 'அப்படித் தானே வந்திருக்கிறேன்; அடியேன்; தண்டும் பவித்திரமுமாக!' என்று பதில் சொன்னுர்.

நம்பி சற்றுத் திகைத்தார்; பிறகு இளநகை யரும்பினர். அதற்குள்ளே ராமாநுஜர், 'பவித்திரந்தான் இவன்; அவன் தண்டு!' என்று கூரேசனையும் முதலியாண்டானையும் முறையே சுட்டிக்காட்டினர்.

தம் வாழ்க்கையைப் புனிதமாக்கியவர் என்று கூரத்தாழ் வானை முதல் முதல் காட்டிவிட்டு, ஊன்றுகோல்போல் தமக்கு உதவும் மருமகனைத் 'தண்டு' என்று குறிப்பிட்டதும், நம்பி சிரித் தார். சிரித்துக்கொண்டே கூரேசனைக் குளிரக் கடாட்சித்து, "இந்தப் பவித்திரம்போல் வேறு எந்தப் பவித்திரந்தான் புனித மாக இருக்கமுடியும்? உண்மைதான்" என்றார், பிறகு முதலியாண் டானை உவந்து நோக்கி, "அழகான தண்டு! இப்படி ஒரு தண்டு எந்தத் துறவிக்குத்தான் வாய்த்திருக்க முடியும்?" என்றார்.

## ஆணையிட்டுப் பெற்ற பொருள்

அப்பால் கோஷ்டிநம்பி ராமாநுஜரை நோக்கி, "இப்போது நான் வெளியிடப் போகும் இரகசியம் புதைபொருளான ஓர் அரும்பெரும் பொருள். ஆசாரிய பரம்பரையில் ஆசான் சீடன் என்ற வழியே வந்திருக்கும் இந்தப் பரம ரகசியத்தை இப்போது சொல்லப் போகிறேன். உம்மையும் உமது தண்டு பவித்திரங்களை யும் கடந்து இந்த இரகசியம் பரவவேண்டாம். நீர் மரணம் அடையும்போது ஒரே ஒரு சீடனைத் தேர்ந்தெடுத்து அவனுக்குத் தான் இதை உபதேசிக்க வேண்டும்" என்றார். ராமாநுஜர் கவன மாகக் கேட்டுக்கொண் டிருந்தார்.

"மற்றொருவருக்கும் சொல்வதில்லை யென்று என் தலையைத் தொட்டு ஆணையிடவேண்டும்; ஆணையை மீறினல் நரகம்'; என்று குரு சொன்னதும், ராமாநுஜர், "இதோ ஆணையிடுகிறேன்' என் தந்தையே! என் சுவாமியே!' 'என்று தாழ்ந்து அந்த இரண்டு பாதங்களையும் தொட்டு ஆணையிட்டார்.

இந்த நிலையில் இவரை,

தன்உயிர்க்(கு) இரங்கா வேதத்
தலைவராம் இளையாழ்வார்

என்று குறிப்பிடுகிறது வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்

பரை. லட்சுமணன் என்ற பெயரைப் பூர்வாசிரமத்தில் தரித்துக் கொண்டிருந்த ராமாநுஜரை, 'இளையாழ்வார்' என்றும் குறிப்பிடு வது உண்டு. 'ராமாநுஜர்' என்ற பெயரும், ராமன் தம்பியைக் குறிப்பதுதானே.

குரு இரகசியப் பொருளாகிய உண்மையை உபதேசித்தார். குருவைப் பகவானுகவே மதித்து, ராமாநுஜரும் அந்த உபதேசத் தைப் பெற்றுக்கொண்டார். குருவின் உள்ளத்திலே பொங்கிய மெய்ஞ்ஞான போதம் பள்ளமடையில் பாய்வதுபோல் சீடர் உடி ளத்தில் பாய்ந்தது. கீதாசாரியனிடம் நேரில் உபதேசம் பெற்றுக் கொண்டது போலவே தோன்றியது ராமாநுஜருக்கு. கண்களில் ஆனந்தப் பனி சோரக் குருவை நோக்கி நின்றூர்.

'பக்தி மதத்தின் பரம ரகசியம் இது என்றுல், இந்த உண்மை யைக் கொண்டு உலகத்தை ஏன் வாழ்விக்க முடியாது?' என்று ராமாநுஜர் தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார். பொருந்தும் நெறி அறியாமல் போதம் இழந்து, உண்மை வாழ்வும் இழந்து வருந்துகின்ற உயிர்களைக் குறித்து, 'ஐயோ!' என்று அழுதார்.

அழுது நின்ற அன்பரை நம்பி நோக்கி, "இனி உம்மால் கலி தீரும்; உலகம் வாழ்வு பெறும்!" என்று சொல்லி விடை கொடுத் தார். ராமாநுஜர் நிலமிசை விழுந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு, முதலியாண்டானும் கூரத்தாழ்வானும் இடமும் வலமும் நெருங்கிவரத் திருக்கோஷ்டியூர்க் கோயிலை நோக்கி விரைந்து நடந்தார்.

## ஆணை மீறிய அன்பு

திருக்கோஷ்டியூர்நம்பியிடம் ராமாநுஜர் இரகசியத்தைத் தெரிந்துகொண்டது பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற்றுக் கொண்டது போலவே தோன்றியது, பக்தர்களுக் கெல்லாம். திரு மால் அமுதம் கொண்டுவந்ததும் வானவர்கள் திரள் திரளாக ஆடிக் களித்தார்களாம். அப்படியே, 'எதிராஜர் அமிர்த உபதேசம் கொணரக் காண்கிறேம்' என்று பாகவதர்களும் ஆடிப்பாடிக் களிப்புற்றுர்களாம்.

திருக்கோஷ்டியூர்க் கோவிலில் திருவிழா நடைபெறுகின்றது. நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் பெருந் திரளாகக் கூடியிருக்கிருர்கள். ராமாநுஜர் உள்ளத்தில் மகிழ்ச்சி கடல்போலப் பொங்குகிறது. அங்கே கூடியிருந்தவர்களுக் கெல்லாம் தமக்குக் கிடைத்த உபதேச அமிர்தத்தை வாரி வழங்க விரும்புகிருர்.

'ஞானபோகம் விளைவித்து உலகை உய்விக்க வேணும்' என்ற எண்ணம் தோன்றியதும்,

**தான்அறப் பெய்து**
**மாயும் தடமுகில்**

[மாயும் தடமுகில்-மாய்ந்து போகும் பெரிய மேகம்.]

போல எழுந்து உபதேசமா மழையைப் பொழிந்துவிடுகிருர், பரமார்த்தத்தை அனைவரும் பருகி உய்யும்படி.

நம்பி கேள்விப்பட்டார்; கோபமுற்ருர். "அவர் எங்கே? விரைவில் கொண்டுவாருங்கள்" என்று கட்டளையிட்டார். இரண்டு பாகவதர்கள் ஓடிப்போய் ராமாநுஜரை அடி வணங்கி நம்பி அழைப்பதாகச் செய்தி சொன்னுர்கள். அவர்கள் பயந்து கொண்டே பேசினுர்கள். ராமாநுஜர் ஒன்றும் பேசாமல் அவர்களோடு போய் நம்பியின் திருவடிகளில் வணங்கி நின்ருர்.

நம்பி தமது உள்ளத்திலுள்ள வெப்பத்தை மறைத்துக் கொள்ளாமலே,

**"பாரினில் 'ஒருவர்க்(கு) இந்த**
**உண்மையைப் பகரேன்' என்ன**
**நீர்எனை ஆணையிட்டு நீங்கினீர்;**
**அதனைப் பாரா(து)**
**ஊரவர்க்(கு) எல்லாம் கூறி**
**உமக்கும்என் பெற்றீர்?"**

என்று கேட்டார்,

உடனே ராமாநுஜர் நம்பியை நோக்கிக் கைகூப்பிய வண்ணம்,

**"பொன்றலில் நரகம்**
**பெற்றேன், புனிதனே!"**

[பொன்றவில்-அழிவில்லாத. புனிதனே-புண்ணியமூர்த்தியாகிய குருவே.]

என்று பதில் சொன்னர்.

"அதை அறிந்தும் செய்தீரே!" என்றார் குரு விசேஷ அதிருப்தி யுடன். அப்போது ராமாநுஜர்.

"நான் ஒரு வனுமே அன்றோ
நசிப்ப(து)? இத் திரள்கள் எல்லாம்
ஆனவான் பேரின் பத்தை
அருந்துமே, அந்தோ!"

என்றார்.

குரு பேராச்சரிய மடைந்தார். கரை காணுத கடலை-ஒரு கருணைக் கடலை-நோக்குவதுபோல் ராமாநுஜரை நோக்கினர்.

"பின்னொரு நினைவும் இல்லை,
பேதையேன் நினைந்தது!"

என்று சீடர் கூறி முடித்ததும், குரு மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்து விட்டார்.

## ராமாநுஜ தரிசனம்

குரு சீடரைத் தழுவிக்கொண்டார்.

சென்றெடுத்(து) உடலும் தூய
சிந்தையும் அழுந்தப் புல்லி,
ஒன்றிய அன்பி னலே
உச்சியை வளைத்து மோந்து,
"நன்று, நன்(று) அன்ப! உன்னை
நானிலத்(து) எவர்கள் ஒப்பார்!"

என்று வாயார மனமராப் பாராட்டினர்.

வேதகாலம் தொட்டு முத்தி நெறி என்பது தனி மனித னுடைய முத்திதான், 'தன்னுயிர் தன்னைக்கொண்டு தான் பிழைத்திடுவது' தான். ஆனல் ராமாநுஜர் செய்தது என்ன?

"தன்னுயிர் தன்னைக் கொண்டு
தான்பிழைத் திடுவ தன்றி

மன்உயிர்க்(கு) இரங்கித் தன்னை
மைந்தனே! மாய்க்கப் புக்கார்
இந்நிலத்து இல்லை! இல்லை!
ஏழுல கத்தும் இல்லை!"

என்று அதிசயப்பட்டார் குரு.

ராமாநுஜரைத் தழுவிய வண்ணம், "உயிர்களுக்கெல்லாம் உடையவன் பகவான்—ரட்சிக்கும் சக்தியால். அன்பினால் நீரும் உடையவர் ஆனீர்!" என்றார்.

'தன்னுயிர் தன்னைக்கொண்டு தான் பிழைத்துப் போக வேண்டும்; ஆத்ம க்ஷேமம்தான், ஆத்மலாபந்தான் அதிமுக்கிய மானது; அதற்காக உலகத்தையும் தியாகம் செய்துவிடலாம்' என்பது வேதரிஷிகள் காலம் தொட்டுத் தத்துவப் பேரறிஞர்கள் கண்டு வந்திருக்கும் வேதாந்தப் பெருங்கொள்கை. ராமாநுஜரோ உலகத்திற்கு இரங்கித் தன்னையும் மாய்த்துக்கொள்வது (தன் ஆத்மலாபமாகிய முக்தியையும் துறந்துவிடுவது) பக்திப் பெரு நெறி என்பதை மெய்ப்பித்து விட்டா ரல்லவா?

இந்த உண்மையை, 'ராமாநுஜர் கண்டுபிடித்த உண்மை' என்று பாராட்டினார் திருக்கோஷ்டி நம்பி. எனவே, இது 'ராமாநுஜ தரிசனம்' என்றும், 'எம்பெருமானார் தரிசனம்' என்றும் பெயர் பெற வேண்டும் என்றார். தாம் சொன்ன இரகசிய உண்மை, ராமாநுஜர் கண்டுபிடித்த உண்மையினால்தான் சோபிக்கவேண்டும் என்றார்.

உண்மையில், ராமாநுஜ தரிசனம் ஆழ்வார்கள் கண்டு பிடித்த பக்திப் பேருண்மைகளை அடிப்படையாகக் கொண்டு தழைத்ததுதான். ஆழ்வார்களின் பக்திப் பயிரைத்தான் ராம நுஜர் போன்ற ஆசாரியர்களும் தங்கள் ஞானத்தால் தியாகத்தால் வளர்த்து வந்திருக்கிறார்கள்.

ஆழ்வார்கள் கண்டுபிடித்த உண்மையை ராமாநுஜர் மறுபடியும் தமது வாழ்விலே கண்டுபிடித்து, அந்த உண்மைக்குப் புத்துயிர் அளித்தார் என்றே கூறலாம்.

## 2. தியாகம் வளர்த்த பக்திப் பயிர்

'பரதகண்டம் எங்கும் போய்த் திக்விஜயம் செய்து திரும்பி விட்டீர்கள். ஸ்ரீசங்கரரைப்போல் ஒரு பாஷ்யம் செய்து, தாங்கள் கண்ட உண்மையை—நமது பக்தி மதத்தை-உறுதியான வேதாந்த அடிப்படைமீது நிலைநிறுத்த வேண்டும்?' என்று பிரார்த்தித் தார்கள், சீடர்களெல்லாம் ஒருமுகமாக. உடனே ராமானுஜர் கூரேசனைப் பேரன்போடு நோக்கி, "நான் சொல்லிக்கொண்டே வருகிறேன்; நீர் எழுதிக்கொண்டே போகவேணும்" என்று கட்டளையிட்டார்.

அவர் ஏடும் எழுத்தாணியும் எடுத்துக்கொண்டதும், ராமானுஜர் மறுபடியும் சொன்னார், "நான் சொல்லும் பாஷ்ய வாக்கியம் உமது உள்ளத்திற்கு ஒத்திருந்தாலொழிய நீர் எழுத வேண்டாம்" என்று. அவ்வளவு நம்பிக்கை குருவுக்குச் சீடருடைய புத்திக் கூர்மையிலும் நினைவாற்றலிலும்! தாம் கண்ட உண்மை யைத் தமது அந்தரங்க சீடரும் தெளிவாகக் கண்டிருக்க வேண்டும் என்ற நம்பிக்கையும் விசேஷமாக இருந்திருக்க வேண்டும்.

தமக்கு முன்னிருந்த ஆளவந்தார், நாதமுனி முதலானவர் களுடைய கருத்துக்களையும் ஆழ்வார்களின் கொள்கைகளையும் உள்ளத்திலே நிறைத்துக்கொண்டு, பக்தியும் உபாசனையுமே ஞானத்தைச் சுத்தப்படுத்தி விடுதலை அளிக்கும் என்ற ரீதியில் எதிரிடையான கொள்கைகளைக் கண்டித்துப் பிரம சூத்திரங் களென்ற வேதாந்த சூத்திரங்களுக்குப் பொருளை ராமானுஜர் வெளியிட்டுக்கொண்டே வர வர அமைதியாக எழுதிக்கொண்டே வந்தார் கூரேசனும். இப்படிப் பல தினங்கள் ஆகிவிட்டன.

## மொழியைக் கடக்கும் புகழ்

ஆனால் ஒரு நாள் ஆசாரியர் ஒரு சூத்திரத்திற்கு வியாக்கியானம் செய்யும்போது, சீடர் எழுதாமலே சும்மா இருந்துவிட்டார். 'இந்தப் பெரிய காரியத்தில் இவருக்கும் இவ்வளவு கவனக் குறைவா?' என்று நினைத்த குரு, "எழுதும்" என்று எச்சரித்து, ஏற்கனவே சொன்னதைத் திருப்பிச் சொன்னார். சீடரோ அதையும் காதில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை.

மேலே மேலே விஷயங்களைச் சொல்ல வேணுமென்று துடித்துக்கொண் டிருந்த ராமாநுஜர் என்றும் இல்லாத கோபங் கொண்டார், சீடருடைய என்றுமில்லாத பிடிவாதத்தைக் கண்டதும். இன்னது செய்கிறோமென்று அறியாமலே, "இனி நீரே பாஷ்யம் செய்யும்!" என்று போய்விட்டாராம். 'சீடரை உதைத்துப் போய்விட்டார்' என்று கூறுவதும் உண்டு.

அதைக் கண்டு திகிலடைந்த மற்றச் சீடர்களில் சிலர் கூரேசனை நோக்கி, "மகா புத்திமானான உமக்குத்தான் ஏன் இவ்வளவு அஜாக்கிரதை? குருதேவரின் கோபத்துக்கு இலக்காகி விட்டீரே!" என்று வருந்தினார்கள். வேறு சிலர், "அவர் சொன்னபடியே எழுதிக்கொண்டு போனால் என்ன? அவருக்குத் தெரியாதது நமக்குத் தெரியுமா? ஐயோ! இனி என்ன செய்யப் போகிறீர்?" என்று அனுதாபப்பட்டார்கள்.

கூரேசனோ 'இத்தனை பேர் இருக்க நமக்கு மாத்திரம் அந்தத் திருவடி கிடைத்ததே!' என்று மகிழ்ந்திருந்தார். சீடர்கள் இப்படிப் பலவிதமாக எண்ணிக்கொண் டிருந்தபோதே, ராமாநுஜர் திரும்பி வந்து, 'அந்த வாக்கியத்துக்கு நான் சொன்ன பொருள் முன்னுக்குப் பின் முரணானது என்பது உண்மைதான் உம்முடைய புத்தியே புத்தி! கோபம் என்னையே அப்படிச் செய்துவிட்டதே! இன்று சீடரத்தினமாகிய உம்மைப் பார்த்து எவ்வளவு உயர்ந்த பாடம் கற்றுக்கொண்டேன்! நீர் எப்படியாவது என்னை மன்னிக்க முடியுமா?" என்று கூரேசனை நெருங்கி மெள்ளக்

கேட்டாராம். கூரேசன் திகிலடைந்து, குழந்தைபோல விம்மி விம்மி அழுதாராம்.

இந்த விதமாகப் பூர்த்தி செய்யப்பட்ட ஸ்ரீபாஷ்யமும் வேதாந்த தீபம் முதலான நூல்களும் ஆழ்வார் கொள்கைளின் பிரசித்தி பெற்ற வேதாந்தக் கோட்டையாக நின்று நிலவுகின்றன.

இந்த வரலாற்றிலே கூரேசனுடைய புகழ் எப்படிப் பிரகாசிக்கிறது, பார்த்தீர்களா? 'எது பெரிது?—குருவின் புகழா, சீடரின் புகழ்தானா?' என்றுகூட நாம் ஆச்சரியப்படுகிறோம். எனினும் உண்மையில், கூரேசனைப்போன்ற சீடர்களின் தியாகமும் புகழும் குருமூர்த்தியின் பெருமையையும் குணாதிசயத்தையும் விசேஷமாகத் தூக்கிக் காட்டுகின்றன.

**மொழியைக் கடக்கும் பெரும்புக ழான்;வஞ்ச முக்குறும்பாம்**
**குழியைக் கடத்தும்நம் கூரத்தாழ் வான்சரண் கூடியபின்,**
**பழியைக் கடத்தும்நம் இராமா னுசன்புகழ் பாடி,அல்லா**
**வழியைக் கடத்தல் எனக்குஇனி யாதும் வருத்தமன்றே**

*[பழி-(இங்கே) பாவம்; குற்றம். அல்லா வழி–வழியில்லாத வழி.]*

என்று கூரேசனுடைய புகழை எப்படி வருணித்துப் பார்த்தாலும், வருணனைகளையும் கடந்து நிற்கிறதாம் உண்மை.

சாதாரணமாக, 'முக்குறும்பு' என்று சொல்லக் கூடியவை காமம், வெகுளி, மயக்கம் என்பன. இவற்றை நரகத்தின் மூன்று பிரதான வாசல்கள் என்று கூறுவதும் உண்டு; ஆனால் இவை பகிரங்கமான வாசல்கள். இவற்றைக் காட்டிலும் அபாயகரமானவை **ஜாதி கர்வம், ஐசுவரிய கர்வம், வித்யா கர்வம்** என்று வைஷ்ண ஆசாரியர்கள் சொல்லுகிறார்கள்; சாதியும் செல்வமும் கல்வியும் நல்லவைபோலத் தோன்றி அல்லல் விளைப்பதால்.

இப்படி நமது வாழ்க்கையாகிய பாதையில் மறைந்திருந்து மதியை வஞ்சித்துக் கெடுக்கக் கூடிய மூன்று குழிகளாகிய முக்குறும்பையும் அறவே ஒழித்தவர் கூரேசன். தாம் அந்தப் படுகுழிகளைக் கடந்து முன்னேறியதோடு பிறரும் விழுந்துவிடாமல்

கடக்குமாறு தமது ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் ஒரு பாலம் போட்டாராம், இந்த நுண் அறிஞர்.

'இவர் திருவடிகளை நம்பி, அந்தப் பாலத்தைக் கொண்டு அக்கரை அடைந்ததும் இனி ராமாநுஜருடைய புகழைப் பாடிக் கொண்டே எல்லாப் பழி பாவங்களையும் தாண்டி வழியல்லாத வழிகளையும் கடந்து ஆழ்வார்களுடைய ராஜமார்க்கத்தில் சேர்ந்து விடுவது எளிது' என்கிறார் திருவரங்கத்து அமுதனார்.

தமக்குக் கிடைத்த இத்தகைய வழிகாட்டியே (கூரேசன்) ராமாநுஜருக்கும் உசாத்துணையாக உதவினார் என்பதை உள்ளத்திற் கொண்டுஇவரை, 'மொழியைக் கடக்கும் பெரும் புகழான்' என்று அமுதனார் குறிப்பிட்டதாகக் கருதலாம்.

கூரேசன் காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள கூரம் என்ற ஊரைச் சேர்ந்தவர். இவரது சிறந்த புதல்வர் பராசரபட்டர் என்ற பேரறிஞர். பராசரபட்டரைப் பட்டர் என்றே சிறப்பித்துப் பேசுவது உண்டு. ஸ்ரீராமபிள்ளை என்றும் இவருக்கு ஒரு புதல்வர் உண்டு.

'இராமாநுச நூற்றந்தாதி' இயற்றிய திருவரங்கத்து அமுதனார் கூரேசனது பிரசித்தமான சீடர்.

## மருமகன் புகழ்

ராமாநுஜரின் மருமகனான முதலியாண்டானுக்கும் தியாகப் புகழ் உண்டு. இவரும் கூரேசனைப்போல் ராமாநுஜருக்காகவும் ராமாநுஜ தரிசனமாகிய சித்தாந்தத்திற்காகவுமே உயிர் வாழ்ந்தார் என்று சொல்ல வேண்டும்.

தாம் ராமாநுஜருக்கு உறவினர் என்ற பெருமையையும் துறந்து, வைஷ்ணவர்களை யெல்லாம் அபேதமாகக் கருதித் தொண்டுசெய்து வந்ததால், இவர், 'ஸ்ரீவைஷ்ணவதாசர்' என்று பேரும் புகழும் பெற்றுவிட்டார். இவரையும் கூரேசனைப்போல் ராமாநுஜர் தமக்கு இன்றியமையாதவராக மதித்திருந்தார். இவரை, 'ராமாநுஜ பாதுகை' என்றும் சொல்வது உண்டு.

கூரேசனைத் தமது வாழ்க்கையைப் பரிசுத்தமாக்கிப் பவித்திரம் என்று கருதிய ராமானுஜர், முதலியாண்டானை, 'நான் துறக்க முடியாத திரிதண்டம்!' என்று மதித்து, அப்படியே தமது ஆசிரியர்களில் ஒருவராகிய திருக்கோஷ்டிநம்பிக்கும் அறிமுகப் படுத்தினு ரல்லவா ? முதலியாண்டன் தோள்மீது தமது கையை வைத்துக்கொண்டு ராமானுஜர் காவிரியாற்றில் நீராடப் போவதுண்டு என்பர்.

## மடத்தை இடித்தவர்

யக்ஞமூர்த்தி என்ற வேதாந்தி ராமானுஜரை எதிர்த்துப் பதினேழு நாள் வாதஞ் செய்து பிறகு சீடரானுர். அருளாளப் பெருமானுர் என்பது இவர் வைஷ்ணவரான பின் கிடைத்த பெயர். எம்பெருமானுர் என்பது ராமானுஜரின் பெயர்களில் ஒன்று. 'அருளாளப் பெருமாள்' என்ருல் ராமானுஜருடைய இஷ்ட தெய்வமான வரதராஜப்பெருமாள்.

வரதராஜனுடைய அருளே யக்ஞமூர்த்தியைத் தமக்கு ஞான புத்திர ராக்கியதென்று நம்பிய ராமானுஜர் அந்த மகா வித்வானுக்குப் பெருமாள் பெபரோடு தம்முடைய பெயரையும் சூட்டிக் கௌரவித்தார். இவருக்குப் பிரத்திபேகமாக ஒரு மடமும் கொடுக்கப்பட் டிருந்தது.

இப்படியிருக்கையில் ஒரு நாள் ஸ்ரீரங்கத்திற்கு வந்த இரண்டு யாத்திரிகர்கள் வீதியில் நின்றுகொண்டு, "எம்பெருமானுருடைய மடம் எங்கே ?" என்று விசாரித்தார்கள். வீதியிலிருந்த சிலர், "எந்த எம்பெருமானுர் ?" என்று கேட்டதும், யாத்திரிகர்கள், "எத்தனை எம்பெருமானுர்கள் இருக்க முடியும் ? எங்களை ஏன் இப்படிப் பரிகசிக்கிறீர்கள் ?" என்று வருந்தினுர்கள்.

அப்போது அந்த வீதியில் உள்ளவர்கள், "ஐயோ, நாங்கள் பரிகாசம் பண்ணவில்லையே! இங்கே அருளாளப் பெருமாள் எம்பெருமானுர் என்ற ஒரு பெரியவர் மடமும் இருக்கிறது" என்று பதில் சொன்னுர்கள். யாத்திரிகர்களோ, எம்பெருமானுர் என்ற

ராமாநுஜர் மடத்தைத்தான் விசாரிக்கிறோம்'' என்று சொல்லிக் கடைசியாக அங்கே போய்ச் சேர்ந்தார்கள்.

இதைக் கேள்விப்பட்ட அருளாளப் பெருமாள் எம்பெருமானர் உடனே தம்முடைய மடத்தை இடித்துத் தள்ளும்படி ஏற்பாடு செய்துவிட்டாராம். 'நம்மையும் ராமாநுஜருக்கு எதிர்த் தட்டாக வைத்துச் சிலர் பேச இடம் ஏற்பட்டதே!' என்று. நடந்ததை எல்லாம் அறிந்துகொண்ட ராமாநுஜர் இந்தச் சீடரின் தியாக புத்தியை வியந்து அரை க்ஷணமேனும் தம்மை விட்டுப் பிரியாதபடி இவரைத் தம்முடைய மடத்திலேயே வைத்துக்கொண்டார்.

## குருவின் குருவையும் கண்டித்தவர்

ராமாநுஜர் வழக்கம்போல் சில வீடுகளில் பிக்ஷை அன்னம் வாங்கி வரும்போது, ஒரு வீட்டுப் பெண் முகவாட்டத்துடனே பிக்ஷையிட்டுச் சடக்கென்று திரும்பிக் கண்களைக் கசக்கிக்கொண்டே போனதைக் கவனித்தார். 'இதில் ஏதோ அபாயம் இருக்கிறது? என்று ஊகித்துப் பிறகு சோதித்துப் பார்த்ததில், 'அது விஷம் கலந்த உணவு' என்பது தெரியவந்தது.

இவருடைய சீர்திருத்தக் கொள்கைகளை வெறுத்த ஒருவன் தன்னுடைய மனைவியை அப்படிச் செய்யும்படி நிர்ப்பந்தித்தான் என்பதும் பின்னுல் தெரியவந்தது. அந்தப் பாவி மனம் திருந்தி நல்வழிப்பட வேணுமென்று ராமாநுஜர் சில நாளளவும் உபவாசம் செய்தாராம்.

இந்தச் செய்தியைத் திருக்கோஷ்டியூர்நம்பி கேட்டுப் பதை பதைத்து உடனே ஸ்ரீரங்கத்துக்குப் பிரயாணப்பட்டுக் காவேரியை அடைந்ததும், ராமாநுஜர் சில சீடர்களோடு எதிர்கொண்டு போய்க் குருவின் அடிகளில் விழுந்து நமஸ்கரித்தார். உச்சிப் பொழுது வெயில் கடுமையாக இருந்தது. குருவோ காய்ந்து கொண்டிருந்த அந்தக் காவேரி மணலிலிருந்து எழுந்திருக்கும்படி ராமாநுஜருக்குக் கட்டளை இடவில்லை.

அப்போது கிடாம்பி ஆச்சான் என்ற சீடர் மனம் பதறி ஆத்திரமாக, "இது என்ன குரு சிஷ்யக் கிரமம்! அவள் இட்ட விஷம் உம்முடைய இந்தச் செய்கையைக்காட்டிலும் கொடிய தாகுமா?' என்று திருக்கோஷ்டி நம்பிகளை நோக்கிச் சொல்லிக் கொண்டே ஓடிப்போய் ராமாநுஜரைத் தூக்கினர்.

நம்பிகள் சிரித்துக்கொண்டே, "ஆச்சானே! உம்மைத் தேடித் தானே நான் வந்தது! இந்த ராமாநுஜரிடம் பரிவுள்ளவர் யாரேனும் உண்டோ என்றுதான் இவ்வளவு நேரம் சிந்தித்து நின்றேன்; இவ்வளவு பிரியமுள்ள நீரே இன்று தொடங்கி இவருக்கு உணவு தயாரிக்க வேணும்!' என்று ஏற்பாடு செய்தார்.

## நாட்டுக்குப் பொல்லான்; நமக்கு நல்லான்!

இப்படி யெல்லாம் ராமாநுஜருக்காகத் தியாகம் செய்த வர்கள் இவருடைய வைஷ்ணவக் கொள்கைகளுக்காகவும் விசேஷமான தியாகங்களைச் செய்திருக்கிறார்கள். ஆற்றில் மிதந்து வந்த 'நீச'னுடைய, பிணத்தை எடுத்து, 'அது பிராமணன் செய்யக்கூடிய காரியமல்ல!' என்று மற்றவர்கள் கோபித்ததை யும் லட்சியம் செய்யாமல் அந்த உடம்பிலே வைஷ்ணவ சின்னம் இருந்ததால் சகோதர வைஷ்ணவனாகவே மதித்து உத்தரக் கிரியைகள் செய்த நல்லான் சக்கரவர்த்தியை அறியாத வைஷ்ணவரும் உண்டோ? இவரும் ராமநுஜருடைய பிரசித்த மான சீடர்களில் ஒருவர்.

இந்தப் பெரியாரை நாட்டிலுள்ள வைதிகர்கள் தூஷித்த போது, வரதராஜப் பெருமானே, இவரை,நாட்டுக்குப் பொல்லான்; நமக்கு நல்லான்!' என்று பாராட்டினாராம். இந்தச் சீடர்க ளெல்லாம் பகவானையும் ராமாநுஜரையும் நம்பி மதக்கொள்கைக் காக மகத்தான தியாகங்களைச் செய்தார்க ளென்றால், வடுக நம்பியோ,

"தேவுமற் றறியேன்; குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே!"

[தேவு-தெய்வம். குருகூர் நம்பி–நம்மாழ்வார். பா–பாட்டு.]

என்ற மதுரகவியாழ்வாரின் நிலேயிலிருந்து, 'தெய்வமே ஆசாரியன்தான்!' என்று நம்பித் தியாகங்களே அநாயசமாகச் செய்தார்.

## வேறு தியாகங்கள்

ராமாநுஜருடைய சீடர்களைப்போல் இவருடைய ஆசாரியர்களும் ராமாநுஜருக்காகவும் மதத்திற்காகவும் தியாகம் செய்தார்கள். சீடரான கூரேசனைப்போல் குருவான பெரியநம்பிகளும் ராமாநுஜருக்காகவும் வைஷ்ணவத்திற்காகவும் கண்களே இழந்தார். இதே பெரியநம்பிகள்தாம் 'பஞ்சம'ரான மாறனேர் நம்பிக்குச் சகல கைங்கரியமும் செய்து தகன ஸம்ஸ்காரங்களும் நடத்தியவர்.

பிறப்பால் வைசியரான திருக்கச்சிநம்பியும் ராமாநுஜரின் ஆறு ஆசிரியர்களில் ஒருவராவர். இவரும் பெரியநம்பிகளைப் போல் ஆளவந்தார் என்ற பேராசிரியரின் சீடர்களில் ஒருவர். 'கச்சித் திருவருளாளன்' என்ற காஞ்சீபுரத்து வரதராஜப் பெருமாளுக்கு ஆலவட்டக் கைங்கரியம் செய்துகொண் டிருந்தார். இவரது பாகவத கைங்கரியமும், அதனால் இவர் பெற்றிருக்கும் தனிப்பெரும் புகழும் வேறொரு அத்தியாயத்தில் பிரத்தியேகமாகப் பிரஸ்தாபிக்கப்படும்.

திருக்கச்சிநம்பி சென்னே மாநகரைச் சார்ந்த பூவிருந்தவல்லி என்ற ஊரில் தோன்றியவர். ராமாநுஜருக்கு இவர் ஆறு வார்த்தைகள் சொன்னதாகவும், அவற்றை ஸ்ரீபாஷ்யம் செய்வதற்கு ராமாநுஜர் வழிகாட்டியாகக் கொண்டதாகவும் சொல்லுகிறார்கள். ராமாநுஜ தரிசனத்திற்கு விசிஷ்டாத்வைதம் என்ற பெயரைக்கூட இவரே தெரிவித்தார் என்று சொல்வதும் உண்டு. இந்தத் தமிழ்வணிகர் வடமொழியிலும் வல்லவராகத் திகழ்ந்தார்.

ராமாநுஜர் இல்லற வாழ்க்கையில் இருந்தபோது இவர் 'போனகம் செய்த சேடத்தை' விரும்பி இவரைத் தமது இல்லத்திற்கு அமுது செய்ய அழைத்தாராம். இவர் வந்த சமயம் ராமா

நுஜர் வீட்டில் இல்லை. ராமாநுஜருடைய மனைவி உணவு பரிமாறினாள். நம்பிகள் அமுது செய்து சென்றவுடன் ராமாநுஜர் மனைவி அந்த இலையை ஒரு கோலால் எடுத்துப் போட்டு, நீராடி நின்றாளாம். இதைத் தெரிந்துகொண்டதும் ராமாநுஜர் தாம் நம்பிகளின் சேடம் உண்ணவேண்டும் என்று கருதியிருக்க, அப்பெரியாரைத் தமது மனைவி இழிவாகக் கருதினாளே என்று கோபித்து, 'இத்தகைய அறிவிலியாகிய உன்னோடு வாழ இயலாது' என்று துறவு பூண்டாராம்.

பொதுவாகச் சொன்னால், ராமாநுஜருடைய ஆசிரியரின் தியாகங்களும் சீடர்களின் தியாகங்களும் ராமாநுஜருடைய ஒப்பற்ற தியாக வாழ்க்கையை விசேஷமாக எடுத்துக் காட்டுகின்றன. பதினெட்டுத் தடவை திருக்கோஷ்டியூருக்குப் போய்த் தாம் தெரிந்துகொண்ட இரகசியத்தைப் பகிரங்கப்படுத்தித் தாம் நரகம் புகுந்தாலும் மற்றவர்கள் பிழைத்துப் போகட்டும் என்று குருவை நோக்கிச் சொன்ன வார்த்தையிலே, ராமாநுஜரைத தியாக சிகரத்தில் காண்கிறோமல்லவா?

ஒருவன் ஆத்மலாபத்திற்காக உலகத்தையும் தியாகம் செய்ய வேண்டுமென்பது பழைய வேதாந்தக் கொள்கை. ராமாநுஜரோ உலகத்திற்காக ஒருவன் தன் ஆத்மலாபத்தையும் தியாகம் செய்ய வேண்டும் என்றார்.

இரண்டு கொள்கைகளும் உயர்ந்த கொள்கைகள்; உண்மை என்ற நாணயத்தின் இரண்டு பக்கங்கள். எனினும் பழைய கொள்கையில் சூட்சுமமாகவும் அதி சூட்சுமமாகவும் தன்னலம் இருக்கக்கூடும் என்று கண்டுபிடித்தார் ராமாநுஜர்.

சமூகத்தைத் துறந்து போய் ஒரு தனிமனிதன் மோட்சம் பெற முயலுவதை ராமநுஜருடைய உயர்ந்த லட்சியம் ஆதரிப்பதாகத் தோன்றவில்லை. 'என்னுடைய மோட்சத்தையும் நான் தியாகம் செய்யத்தயார்; அதனால் பிறர் நன்மை அடையக் கூடுமானால்!' என்று துணிந்த ராமாநுஜர் செய்கையை ஆசாரிய பரம்பரையிலே காணப்படும் தியாகங்களுக் கெல்லாம் சிகரமென்றுதானே சொல்லவேண்டும்?

# 3. பக்திப் பூங்கோயிலும் ஞானக்கோட்டையும்

'அதோ அந்தக் கூட்டத்தின் நடுவில் வருகிறுனே, அந்த இளைஞன் யார்? என்ன தேஜஸ்! என்ன வசீகரமான தோற்றம்!' என்று மெள்ளக் கேட்கிருர் வயது முதிர்ந்தவரான ஆளவந்தார், பக்கத்திலே நின்ற திருக்கச்சிநம்பியை நோக்கி. அவர்தாம் இளையாழ்வாரென்ற ராமாநுஜரென்றும், அவர்கள் எல்லாரும் யாதவப்பிரகாசர் என்று பிரசித்தி பெற்ற வேதாந்தியின் மாணுக்கர்களென்றும் திருக்கச்சி நம்பி வாய் புதைத்துக்கொண்டு பதில் சொல்லுகிருர். இப்படி இவர்கள் பேசிக்கொண் டிருக்கும்போதே, அந்தக் கூட்டம் வரதராஜப் பெருமானைச் சேவித்துப் பிரதட்சிண மாகப் போய்க்கொண் டிருக்கிறது.

### ராமாநுஜரும் ஆளவந்தாரும்

ஆளவந்தார் இளைஞர் தலை மறையும்வரை அவரையே அருளோடு பார்த்துக்கொண் டிருந்துவிட்டுப் பிறகு பெருமானை நோக்கி, 'நீ வேண்டுவார் வேண்டும் வரங்களை யெல்லாம் தந்தருள்வதால், வரதராஜனென்று பிரசித்தமாயிருக்கிருய். இப்போது அடியேனுக்கும் ஒரு வரம் வேணுமென்ற ஆசை இருக்கிறது. உன் பெருமையை விளங்க வைக்கும் ஆழ்வார் கொள்கைகளை நாடெங்கும் பரப்ப என்னுல் இயன்றவரை ஏதேதோ முயன்று வருகிறே னல்லவா? அதற்கு அனுகூலமாக அந்த ராமாநுஜன் எங்கள் பக்தி இயக்கத்தில் சேர்ந்துகொள்ளும்படி விசேஷ கிருபை செய்யவேணுமென்று நான் உன்னைச் சரண் அடைகிறேன்' என்று பிரார்த்தனை செய்துகொள்கிருர்.

ஆனல் ராமாநுஜரை அறிமுகம் செய்துகொண்டு அவரிடம் ஒரு நல்ல வார்த்தை சொல்வதற்குக்கூட இவருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அவருக்கோ இவரைக் கவனித்து, 'யார்?' என்று கேட்டறிந்து கொள்வதற்கும் வசதி ஏற்படவில்லை, ஆளவந்தார் காஞ்சீபுரத்திலிருந்து ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிப் போகிருர்.

பாகவத தருமம் பரவப் பரவ நாட்டிலே கலியுகம் போய் ஒரு புதிய யுகம் பிறக்குமென்று நம்மாழ்வார் சொல்லியிருப்பதை ஒரு தீர்க்க தரிசனமாக மதித்துப் பிரபந்தங்களையும் அவற்றிலுள்ள கொள்கைகளையும் பரவச் செய்துவந்த ஆளவந்தாருக்கு வாழ்க்கையில் ஒரே ஒரு கவலைதான் இருந்தது. 'நமக்குப் பின் இந்தக் கைங்கரியத்தைத் தொடர்ந்து செய்வதற்குத் தகுதியான ஒருவர் வேண்டுமே' என்பதுதான் அந்தக் கவலை.

ஒரு சமயம் காஞ்சீபுரத்திலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு வந்த இரண்டு பக்தர்களிடம் இவர் அந்த ஊர் விசேஷங்களை விசாரித்த போது, அவர்கள் அங்கே பிரபலமாயிருந்த வேதாந்தியைக் குறித்துப் பிரஸ்தாபித்தார்கள். அந்தப் பண்டிதர் பிரபந்தக் கொள்கைகளைக் கண்டிப்பவர் என்பது ஆளவந்தாருக்குத் தெரியும். ஆனல் அவர்கள் அவருடைய அபிப்பிராயங்களை அவர் மாணுக்கர்களில் ஒருவரே மறுக்கத் துணிந்தார் என்று சொன்னபோது, ஆளவந்தார் மனமகிழ்ந்து அந்த நிகழ்ச்சியை விவரமாகத் தெரிந்து கொள்ள விரும்பினர்.

உபநிஷத வாக்கியங்களுக்கு யாதவப்பிரகாசர் ஆழ்வார்களின் சித்தாந்தத்திற்கு விரோதமாகப் பொருள் சொன்னதும், ராமாநுஜர் சிந்தை கலங்கிக் கண்ணீர் வடித்து நேரான பொருளை எடுத்துக் காட்டினரென்றும், ஆசிரியர் கோபமடைந்து, "நாம் சொன்னதைக் கேட்டுக்கொண் டிருந்தால்தான் நம்மிடம் வாசித்துக்கொண் டிருக்கலாம்; இல்லாவிட்டால் போய்விடும்!" என்று அதட்டினரென்றும், அவர்கள் தெரிவித்தார்கள்.

'மற்றச் சீடர்கள் எல்லாம் நாம் சொல்லும் பொருளை ஒப்புக்கொண் டிருக்க, இந்த ராமாநுஜன் ஒருவன் மாத்திரம்

எதிர்த்து நின்று, "புதிய" கொள்கைகளை அனுசரித்துப் பேசுகிறனே! இவனை முடித்தால்தான், ஆழ்வார் கொள்கைகள் இந்தப் பிரதேசங்களிலாவது பரவவொட்டாமல் தடுக்க முடியும்?' என்று துணிந்த குரு, தம்முடைய நோக்கத்தை எப்படியாவது நிறைவேற்றிக்கொள்ள வேணுமென்று காசியாத்திரையை வியாஜமாகக்கொண்டு சீடர்களோடு புறப்பட்டதை அவர்கள் தெரிவித்த போது ஆளவந்தார் திடுக்கிட்டார்.

பிறகு அந்தப் பக்தர்கள், 'வழியிலே ராமாநுஜர் அந்தக கபட யோசனையை அறிந்துகொண்டு ஆசிரியருக்குத் தெரியாமலே தப்பி க்ஷேமமாக ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்' என்று சொன்னதும், ஆளவந்தார் முகமலர்ந்து வரதராஜனுடைய அருளை மனமார வாழ்த்தினர்.

கங்கா யாத்திரையை முடித்துக்கொண்டு காஞ்சீபுரத்திற்குத் திரும்பிய யாதவப்பிரகாசர் ராமாநுஜரைக் கண்டு மகிழ்ந்தவரைப்போல் பாவனை காட்டி அவரை மறுபடியும் குரு குலத்திலே சேர்த்துக்கொண்டாரென்று அவர்கள் சொல்லி முடித்தார்கள். இவ்வளவு விஷயமும் தெரிந்துகொண்ட பின்புதான், ஆளவந்தார், 'தீப் பிழம்பிலே தாமரையும் பூக்கக் கண்டோம்!' என்று அதிசயித்துக் காஞ்சீபுரதிற்குப் போய் ராமநுஜரைப் பார்த்து வந்தார்.

ராமாநுஜருடைய முகத்தோடு அகத்தையும் ஒருவாறு பார்த்துவிட்டார் என்றே சொல்லவேண்டும். தாம் கேள்விப்பட்ட விஷயங்களும், நேரில் பார்த்த அந்தத் தோற்றமும் மாறி மாறி மனக்கண் முன் வந்துகொண்டே இருந்தன. 'ஆம். அந்த இளமையான உடம்பில் வசிப்பது ஒரு மகா புருஷன்தான்!' என்று பல முறையும் தமக்குள் தாமே சொல்லிக்கொண்டார்.

ஸ்ரீரங்கத்துக் கோவிலில் பிரபந்தங்களுக்கு வியாக்கியானம் செய்துகொண் டிருக்கும்போதெல்லாம், 'நமக்குப் பின்பு இந்த அழகான பக்திமதத்தை நிர்வகித்து நடத்தப் போகிறவர் அவர் தாமே!' என்று கனவு காண்பார். 'இப்போது அவரை நம்மோடு

சேர்த்துக்கொள்ள வழியில்லையா? ஸ்ரீரங்கநாதனே துணை செய்ய வேணும்' என்று எண்ணமிடுவார்.

இதே சமயத்தில் காஞ்சீபுரத்திலே யாதவப் பிரகாசருக்கு ராமநுஜர்மீதும் அவர் கொள்கைகள்மீதும் துவேஷம் அதிகரித்து வந்தது. அப்படிப்பட்ட ஆசிரியரிடம் தாம் படித்து வந்த வேதாந்தம் போதுமென்றே ராமாநுஜருக்குத் தோன்றியது. திருக்கச்சி நம்பிகளோடு சேர்ந்து பகவத் பாகவத கைங்கரியம் செய்து கொண்டிருப்பதே வீணான விவகாரங்களில் பொழுதைக் கழிப்பதைவிட மேலானதென்று அவர் தீர்மானித்துவிட்டார்.

## இதுவோ சந்திப்பு!

ஆளவந்தார் தமக்கு மரணம் சமீபித்துவிட்ட தென்பதை அறிந்துகொண்டதும் தமது சீடர்களில் ஒருவரான பெரியநம்பிகளை அழைத்து, "நீர் போய் ராமநுஜரை இங்கேஅழைத்துவர வேணும்" என்று கட்டளையிட்டார். அவரும் அப்போதே புறப்பட்டுக் காஞ்சீபுரத்தை அடைந்து, ஆளவந்தார் அபிப்பிராயத்தைத் திருக்கச்சிநம்பிக்கும் ராமநுஜருக்கும் தெரிவித்தார். ஆளவந்தார் பெருமையை அவர் சீடரான திருக்கச்சிநம்பிகள் மூலமாக விசேஷமாய்க் கேள்விப்பட்டிருந்த ராமாநுஜர், 'அந்த மகாநுபாவரை அடியேன் சந்திக்கும்படி அருளவேண்டும், அருள வேண்டும்!' என்று சொல்லிப் பெரியநம்பிகளைத் தொடர்ந்து உடனே ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார்.

வழியிலே ஆழ்வார்களின் கொள்கைகளைக் குறித்தும் அவற்றைப் பரப்பிக்கொண் டிருந்த ஆளவந்தாரைக் குறித்தும் பெரிய நம்பிகள் சில அருமையான விஷயங்களைச் சொல்லிக்கொண்டே வந்தார். ஆசை தீர அந்தப் பெரியவர் அடிகளில் விழுந்து உபதேசம் பெற்று அவர் ஆணையைச் சிரமேல் தாங்கி இயன்ற கைங்கரியம் செய்ய வேணுமென்று ராமாநுஜர் உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது. அப்போது, 'பிறந்தகத்தை விட்டுப் புக்ககத்திற்குப் போய்க்கொண் டிருந்த ஒரு காதலியின் மன நிலையை ஒத்திருந்

தது ராமாநுஜருடைய மனமில்லை!' என்று ஒரு குருபரம்பரை வரலாறு சொல்லுகிறது.

காவேரிக் கரையை அடைந்ததும், பலவகை வாத்தியங்களும் முழங்க ஒற்றைச் சின்னம் ஊத ஒரு பெருங் கூட்டம் வந்துகொண்டிருந்ததைப் பார்த்தார்கள். வைதிகர்கள் வேத பாராயணம் செய்துகொண்டு வந்தார்கள்; பக்தர்கள் பிரபந்தங்களை ஓதிக்கொண்டு வந்தார்கள். சிலர் கரும்பும் குடமும் ஏந்தி வந்தார்கள். சுமங்கலிகள் மங்கள தீபம் ஏந்தி முன்னே வந்தார்கள். எங்கும் பொரியும் பூக்களும் வாரிச் சிதறப் பட்டன. இடைவிடாமல் பட்டுக்களால் நடை பாவாடையிட்டுத் தாங்கிவரும் அந்தப் பீடப் பல்லக்கையும், கடல் போலப் பொங்கிவந்த அந்த ஜனக்கூட்டத்தையும் கண்டு பெரியநம்பிகள் ஏங்கிக் கீழே விழுந்துவிட்டார்.

'ஆளவந்தார் தேக வியோகமானார்' என்று தெரிந்துகொண்ட ராமநுஜரும்,"ஐயோ! இனி எங்கே காண்பேன் ?" என்று தளர்ந்து பல வகையாய்ப் புலம்பினார். அப்போது பெரியநம்பிகள் தம்முடைய விசனத்தை மறந்து ராமாநுஜரைத் தழுவிக்கொண்டு, "பெரிய காரியங்களுக்குப் பல இடையூறுகள் உண்டாவது இயல்பு தானே! நீர் சோகிக்க வேண்டாம்" என்று இதஞ் சொல்லித் தேற்றிக் கையைப் பிடித்துக்கொண்டு போனார்.

ஒரு தலத்தைச் சுத்திபண்ணி ஆளவந்தாருடைய சரீரத்தை அடக்கஞ் செய்யவேணுமென்று இறக்கி வைத்ததைக் கண்டதும், ராமாநுஜர் விரைந்து போய்த் தண்டனிட்டு, "இப்படியாவது பார்க்கக் கிடைத்ததே!' என்று பாதாதி கேசமாகத் தரிசித்தார். என்ன ஆச்சரியம்! அந்த மகானுபாவருடைய வலது கையில் மூன்று விரல்கள் மடங்கியிருக்கக் கண்டார்.

## உள்ளம் கண்டு தொண்டு பூண்டார்

உடனே ராமாநுஜர், "இவருக்கு முன்னமே இப்படியிருந்ததுண்டோ ?" என்று கேட்டார். பக்கத்தில் இருந்தவர்களும் இப்போது கவனித்து. "முன்பு இப்படி இருந்ததில்லை"

என்ருர்கள். 'அப்படியானல் இந்தப் பெரியார் உள்ளத்தில் ஏதேனும் ஒரு குறிப்பு இருக்க வேணும்' என்று எண்ணினர் ராமாநுஜர்.

பிறகு அந்தக் கூட்டத்தில் இருந்தவர்களில் ஆளவந்தாரோடு நெருங்கிப் பழகினவர்களை விசாரித்து, அவருக்கு மூன்று முக்கிய மான விருப்பங்கள் உண்டென்று தெரிந்துகொண்டார். வியாச முனிவர் இயற்றிய பிரமசூத்திரங்களுக்குப் பிரபந்தக்கொள்கை களைப் பின்பற்றி வியாக்கியானம் செய்ய வேண்டும் என்பது அந்த விருப்பங்களில் ஒன்று. மகோபகாரியான அந்த வியாசருக்கும் அவர் தந்தையான பராசரருக்கும் ஞாபகார்த்தமாகத் தமது நன்றியை வெளியிட வேண்டுமென்பது மற்ருெரு விருப்பம். ஆழ்வார் கோஷ்டியிலும், நம்மாழ்வார் விஷயமாக விசேஷ பக்தியை வெளியிட வேண்டுமென்பது இன்னெரு விருப்பம்.

'இந்த விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு நமக்கு வசதிகள் இல்லையே!' என்று அவர் சில சமயங்களில் வருந்தியதாக அவர் கள் தெரிவித்ததும், ராமாநுஜர் அதே இடத்தில் அந்தச் சரீரத் தின் முன்னிலையில், "இந்தச் சரீரமும் திடமாயிருந்து, இந்த ஆசாரிய கிருபையும் அடியேனிடம் பூர்ணமாயிருந்தால், இந்த மூன்று எண்ணங்களையும் ஸ்ரீரங்கநாதன் அருளால் அடியேன் நிறைவேற்றி வைப்பேன். இதற்காவே என் உடல் பொருள் ஆவியையும் அர்ப்பணம் செய்கிறேன்" என்று சபதம் பண்ணினர். உடனே மூன்று விரல்களும் நிமிர்ந்தனவாம்.

இந்த அதிசயத்தைக் கண்டவர்க ளெல்லாம், "ஸ்வாமி! இவருடைய கிருபை உமக்கு விசேஷமாக உண்டு; இவருடைய திவ்ய சக்தியும் உம்மோடு சேர்ந்து அந்த நோக்கங்களை நிறை வேற்றி வைக்கும்! நீரே இனி ஆழ்வார்களின் பக்தி மதத்திற்கு வளர்ப்புத் தாயான ஆசாரியர்!" என்று வாயார வாழ்த்தினர்கள்.

ஆளவந்தாரின் உள்ளம் கண்டு, தொண்டுபூண்ட ராமாநுஜர் தமது காலத்தில் இந்தியாவிலேயே சிறந்த மேதாவியாக விளங்கினர். இவரை உலக மேதாவிகளில் ஒருவர் என்று கூடச்

சொல்லலாம். இவரே வைஷ்ணவ ஆசாரியர்களி லெல்லாம் சிரேஷ்டமானவர் என்பதில் சந்தேகமில்லை. ஆழ்வார்களில் நம்மாழ்வார் சிறந்து விளங்குவதுபோல், ஆசாரியர்களில் ராமாநுஜரே சிறந்து விளங்குகிறுர் என்பது வைஷ்ணவர் கருத்து.

இவர் காலத்திலேதான் வைஷ்ணவம் விசேஷமாகப் பரவியது. சிம்மாசனத்தில் உள்ள அரசர்களோடு காட்டிலுள்ள வேடர்களும், 'திருக்குலத்தார்' என்று இவரால் மதிக்கப்பட்ட, 'தாழ்ந்த' வகுப்பினருங்கூட ஆழ்வார் கொள்கைகளை அறிந்துகொண் டார்கள்.

முதல் முதல் ராமாநுஜருக்கும் ஆழ்வார் கொள்கைகளுக்கும் விரோதியாயிருந்த யாதவப்பிரகாசரும் கடைசியாக வைஷ்ண சமயம் அநாதியானதென்று ஒப்புக்கொண்டு ராமாநுஜருடைய சீடராஞர்.

இத்தகைய பெருமை வாய்ந்த ராமாநுஜர் தென் இந்தியா எங்கும் சஞ்சரித்ததுபோல், வட இந்தியாவிலும் சஞ்சாரம் செய்து தமது கொள்கைகளைப் பரப்பினுர். ஆளவந்தாருடைய கனவை நனவாக்கியவர் இவர்தான் என்று சொல்ல வேண்டும்.

## ஞான சந்ததிகள்

முதலாவது ஆசாரியரான நாதமுனிகள் காலத்தில் வைஷ்ணவ இயக்கம் தென்பாண்டி நாட்டிலேதான் சிறப்பாகக் காணப்பட்டதென்று ஊகிக்கலாம். ஆழ்வார்களுக்குப் பின் சரியான தலைவர்கள் இல்லாமல் அது பரவவில்லையென்று தெரிகிறது.

பிரபந்தங்களைக் குறித்துத் தவருன அபிப்பிராயங்கள் ஏற்பட்டிருந்தன வென்றும், மோட்சம் தரக்கூடியவை யென்று கருதப்பட்ட அந்தப் பாடல்களைச் சிலர், 'கொல்லும் பாட்'டென்று தூஷித்து நெருப்பில் இட்டு அழிக்கத் தலைப்பட்டார்கள் என்றும் குருபரம்பரைகள் தெரிவிக்கின்றன. மதச் சடங்குகளைக் காட்டிலும் ஞானத்தைக் காட்டிலும்கூட முக்கியமானது பக்தியே என்ற

ஆழ்வார் கொள்கையை வைதிகர்கள் ஒப்புக்கொள்ளத் தயங்கினுர்கள் எனலாம்.

அந்தக் காலத்தில் வைதிகர்கள் யாகம் செய்வதையே மத மாகக் கருதினுர்கள்; சில பிராமணர்கள் தத்துவ ஆராய்ச்சியையே மதமாகக் கொண்டார்கள். அவர்களுடைய மத நூல்களும் தோத்திரங்களும் வடமொழியில் இருந்ததால் அவை தமிழர் களில் பெரும்பாலார்க்கும் அடைத்த கதவாகவே இருந்தன;

ஆழ்வார்களோ தாய்மொழியால் கடவுளை அழைத்தார்கள். எளிய தமிழ்நடையில் உருக்கமாகத் தோத்திரம் செய்தார்கள். மந்திர தந்திரங்கள், யாகங்கள்- யோகங்கள், தவங்கள் முதலிய வற்றைக் காட்டிலும் அன்புநெறியே மேலானதென்று போதித் தார்கள். சாதியைக் காட்டிலும் பக்தியே சிறந்தது என்றுர்கள். இவர்களுக்குச் சாத்திரங்களைக் காட்டிலும் தெய்வ அநுபவமே பெரிது. இப்படிப்பட்ட கொள்கைகளோடு கூடிய பிரபந்தங் களைப் 'பழமை விரும்பிகள்' அந்த நாளில் அபாயகரமானவை யென்று கருதியதிலும் ஆச்சரியமில்லை.

இத்தகைய துரபிப்பிராயங்களைப் போக்கிப் பிரபந்தங்களைத் தேடிக் கண்டுபிடித்துப் பிரகாசப்படுத்தியவர்கள் நாதமுனிகள் தொடக்கமான ஆசிரியர்கள். நாதமுனிகளுக்கும் நம்மாழ்வாருக் கும் நேரான தொடர்பு இருந்ததாகச் சிலர் கருதுகிறுர்கள். ஆனுல் இந்த அபிப்பிராயத்திற்குச் சரியான ஆதாரம் இல்லை.

ஆழ்வார்களுக்கும் ஆசாரியர்களுக்கும் இடையே தொடர்ந்த பரம்பரை இல்லை என்பது திண்ணம். நாதமுனிகளுக்குப் பின் அவரைக் காட்டிலும் பிரசித்தராய்ப் பிரபந்தக் கொள்கைகளைப் பரவச் செய்தவர் ஆளவந்தார். எனினும் ராமாநுஜர் காலத்திலே தான் ஆழ்வார்களின் சித்தாந்தம் மகோந்நத நிலையை அடைந்தது.

ஆளவந்தாருடைய விருப்பத்தை நிறைவேற்றி வியாச சூத்திரங்கள் என்ற பிரம்மசூத்திரங்களுக்கு இவர் செய்திருக்கும் வடமொழி வியாக்கியானம் ஸ்ரீபாஷ்யம் என்று உலகப் பிரசித்தி பெற்று விளங்குகிறது. இதை ஆழ்வார்களுடைய பக்திப்

பூங்கோயிலைப் பாதுகாக்கும் ஞானக்கோட்டை என்று சொல்ல வேண்டும்.

வைஷ்ணவ மதப் பிரவர்த்தகர்களில், ஆழ்வார்கள் உள்ளொளியால் கவிகளாய்க் கலைஞர்களாய்ப் பக்தி நெறியே சென்று 'பகவதநுபவம்' பெற்றார்கள். ஆசாரியர்களோ சாஸ்திர ஆராய்ச்சிகள் செய்து ஞானிகளாய்ச் சமயவாதங்கள் செய்து ஆழ்வார் கொள்கைகளைச் சித்தாந்தம் செய்தார்கள்.

ஆசாரியர்களுக் கெல்லாம் பரமாசாரியராகக் கருதப்பட்டவர் நம்மாழ்வார்தான். மற்ற ஆழ்வார்கள் இவருக்கு அவயவங்கள்; ஆசாரியர்களோ இவருடைய ஞான சந்ததிகள்.

# 4. ஆசாரிய மணிமாலை

**வை**ணவ சம்பிரதாயத்தில் நாதமுனிகளே முதன்மையான ஆசாரியராவர். இவருக்கு நம்மாழ்வாரே யோகமுறையில் காட்சியளித்து உபதேசித்ததாக வைணவர்கள் நம்புகிறார்கள். இப்பேராசிரியர் **நியாய தத்துவம்** என்ற ஒரு நூல் இயற்றிய தாகச் சொல்லுகிறார்கள். **யோக ரகசியம்** என்று வேறொரு நூலையும் இவர் இயற்றியதாகக் கூறுவது உண்டு. இந்த இரண்டு நூல்களும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. நியாயதத்துவம் என்ற நூலின் மங்கள சுலோகம் மாத்திரம் கிடைத்திருக்கிறது. **புருஷ நிர்ணயம்** என்ற ஒரு பிரபந்தத்தையும் இவர் இயற்றினார் என்று சிலர் கருதுவதும் உண்டு.

## முதல் ஆசாரியர்

**நா**தமுனி முதலான ஆசாரிய பரம்பரை இல்லாவிட்டால் ஆழ்வார்களின் சிறப்பையும் ஞானத் தெளிவையும் உலகம் அறிந்துகொள்ள முடியாது என்பர் கடைசி ஆசாரியரான மணவாள மாமுனிகள்: நாதமுனிகள் வீரநாராயணபுரம் என்ற காட்டுமன்னார் கோயிலில் தோன்றினார். இளமையிலே வேத வேதாந்தங்களையும் வேறு நூல்களையும் பயின்று மகா வித்து வானாகத் திகழ்ந்தார். கல்விச் செல்வத்துடன் இவரிடம் பக்திச் செல்வமும் காணப்பட்டது.

தம் இருப்பிடத்திலுள்ள மன்னனார் என்ற எம்பெருமானுக் குப் பணிகள் புரிந்து வந்தார். பக்தராக இருந்ததுடன் இவர் யோகியாகவும் விளங்கினார். வடநாட்டில் யாத்திரை செய்து

அங்குள்ள திருப்பதிகளில் பணி புரிய ஆவல் கொண்டு அங்கே பல ஆண்டுகள் சஞ்சரித்துக்கொண் டிருந்தார்.

அப்படியிருக்கும்போது தமிழகத்திற்கு விரைந்து வரும்படி இறைவன் நியமித்ததுபோன்ற ஓர் உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. உடனே திரும்பித் தென்திசைத் திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு தம் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார். இறைவன் தம்மைத் திரும்பச் செய்ததற்குக் காரணம் தெளிவு படாத நிலையில் நாதமுனிகள் மன்னனார் சந்நிதியில் இறைவனுக்கும் அடியார்களுக்கும் பணிசெய்தும், ஞானநூற் கேள்விகளிலும் காலட்சேபங்களிலும் பொழுது போக்கியும் வந்தார்.

இப்படி யிருக்கையில் சில பக்த யாத்திரிகர்கள் வந்து மன்னனார் சந்நிதியில் தங்களுக்குத் தெரிந்த தோத்திரங்களைச் சொல்லிக்கொண் டிருந்தார்கள். அவை வடமொழிச் சுலோகங்களாகவும் தமிழ்ப் பாடல்களாகவும் இருந்தன. அந்தத் தோத்திரங்களுக்கு இடையே, 'ஆரா அமுதே!' என்று தொடங்கும் திருவாய்மொழிப் பதிகம் ஒன்றையும் பாடத் தொடங்கினார்கள்.

செவிக்கினிய இசையுடன் அவர்கள் பாடினார்கள். தாம் அண்மையில் தரிசித்த கும்பகோணத்துப் பெருமாளாகிய ஆரா அமுதப் பெருமான் விஷயமான பதிகம் அது என்பதை நாதமுனி தெரிந்துகொண்டார். அமுத இசையில் ஆராஅமுதனின் அருமை பெருமைகளைக் கேட்பது இசை நிபுணரான நாதமுனிக்குப் பெருமகிழ்ச்சி அளித்தது. 'இந்த அமுதத் தமிழை அருளியவர் யாரோ?' என்பதை அறிந்துகொள்ள விரும்பினார்.

## ஆயிரம் தேடி நாலாயிரம் கண்டது

பதிகத்தின் இறுதிப் பாசுரத்தில், 'ஓராயிரத்துள் இப் பத்தும்' என்ற சொற்றொடரைக் கேட்ட நாதமுனி, 'இத்தகைய அமுதப் பாடல்கள் ஆயிரம் இருக்கின்றனவா?' என்று அதிசயித்தார். அந்தப் பக்தர்களை நோக்கி, "அன்பர்களே! உங்களுக்கு ஆயிரம்

பாசுரமும் முகபாடமாக வருமோ?'' என்று கேட்டார். அவர்களோ, "இப் பத்தும் தவிர வேறொரு பாசுரமும் அறியோம்'' என்றனர்.

"நீங்கள் எங்கேயிருந்து வருகிறீர்களோ?''

"நாதமுனிகளே! நாங்கள் திருநாரயணபுரப் பக்கத்திலிருந்து வருகிறோம், தீர்த்த யாத்திரையாக''.

"உங்கள் நாட்டில் ஓதியிருப்பார் யாரேனும் உண்டோ?''

''இல்லை, சுவாமி!''

"அந்தப் பிரதேசத்திலே இந்தப் பாசுரங்களின் ஏட்டுப் பிரதி ஏதாவது கிடைக்குமா?''

"அப்படி ஒன்றும் கிடைப்பதற்கில்லை.''

நாதமுனி அந்தத் தொண்டர்களுக்குத் தீர்த்தமும் கோவில் பிரசாதங்களும் வழங்கினர். அவர்கள் பெருமாளையும் நாதமுனியையும் அடிபணிந்து விடைபெற்றுக்கொண்டார்கள். 'குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆயிரம்' என்று அவர்கள் பாடியது செவியில் ஒலித்துக்கொண்டிருந்தது. 'அந்தக் குருகூரிலே போய் விசாரித்தால் அங்கே அமுதக் கவி ஆயிரமும் கிடைக்கக்கூடுமென்று நாதமுனியும் வீரநாராயணபுரத்துப் பாகவதர்களிடம் விடைபெற்றுக்கொண்டு திருக்குருகூர் என்ற ஆழ்வார் திருநகரிக்குப் பிரயாணமானார்.

திருநகரியில் பெருமாளையும் நம்மாழ்வாரையும் தொழுது நிற்கும்போது மதுரகவியாழ்வாரின் சிஷ்ய பரம்பரையில் ஒருவரான பராங்குசதாசரைச் சந்திக்க நேர்ந்தது. இந்தப் பராங்குசதாசரின் கருத்திற்கு இணங்க மதுரகவியின் பாசுரங்களை ஓதி ஓதி நாதமுனி யோக நியமத்துடன் ஆழ்வார் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டிருந்தாராம். நம்மாழ்வார் கருணை கூர்ந்து ஆயிரம் பாசுரங்கள் தேடி வந்தவருக்குத் திவ்யப் பிரபந்தமான நாலாயிரம் பாசுரங்களையும் உபதேசித்தாராம்.

நாதமுனி கொஞ்சகாலம் திருநகரியிலே தங்கியிருந்து திவ்யப் பிரபந்தங்களையும், அவற்றின் ஆழ்ந்த பொருளையும் அங்குள்ளவர்

களுக்கிடையே பரவச் செய்தார். பிறகு தம் ஊருக்குத் திரும்பினார். வழியிலுள்ள திருப்பதிகளில் எல்லாம் பிரபந்தப் பாசுரங்களையும் அவற்றின் பொருளையும் குறித்துப் பிரசாரம் செய்து கொண்டே போனார்.

வீரநாராயணபுரத்திற்கு வந்து சேர்ந்ததும் நாதமுனி தம்முடைய மருமக்கள் இருவருக்கும் திவ்யப்பிரபந்தப் பாடல்களைக் கற்பித்தார். தாம் இசையில் வல்லவராக இருந்ததால் இந்தப் பாசுரங்களைத் திவ்யமான இசையில் இட்டுப் பாடவும் கற்பித்தார். இசைப் பிரியர்களும் பக்தர்களும் ரஸிகர்களும் இந்தப் பாசுரங்களைப் பாடத் தொடங்கவே, இவை தமிழ்நாடெங்கும் பிரசித்தமாகிவிட்டன.

## நாதமுனிக்கும் ஆளவந்தாருக்கும் ஒரு வாதம்

நாதமுனிகளின் சீடர்கள் எண்மர் என்று சொல்லுகிறார்கள்; பதினாறு பேர் என்றும் கூறுவது உண்டு. இவர்களில் முக்கியமானவர் உய்யக்கொண்டார். இவரும் ஆழ்வார்களின் பாசுரங்களைப் பிரசாரம் செய்து நாதமுனியின் பக்திப் பேரியக்கத்தைப் பரப்பி வந்தார்.

உய்யக்கொண்டாரின் அந்தரங்க சீடர் மணக்கால் நம்பி. இவர் பன்னிரண்டு ஆண்டுகளாகத் தம் குருவுக்குத் தொண்டாற்றிப் பிரபந்தங்களையும் அவற்றின் பொருளையும் தெரிந்துகொண்டார். இவரது பிரதான சீடரான ஆளவந்தார் நாதமுனிக்குப் பேரர் ஆவர். இவரை யமுனைத்துறைவர் என்றும் சொல்வது உண்டு. இவருக்குப் பாட்டனாரின் உரிமைச் செல்வமாகிய சமய உண்மைகளை உபதேசிப்பதற்காக மணக்கால்நம்பி எத்தனையோ முயற்சிகள் செய்து பார்த்தார்.

ஆளவந்தாருக்குத் தூதுளங்கீரையில் பிரியம் உண்டு என்று தெரிந்துகொண்டு அந்தக் கீரையை வழக்கமாகச் சமையல்காரனிடம் கொடுத்து வந்தார் மணக்கால்நம்பி. இந்த விதமாக ஆளவந்தாருக்குத் தம்மை அறிமுகப்படுத்திக்கொள்ள விரும்

பினார். இந்த நோக்கம் நிறைவேறவில்லை யென்று கண்டதும், வேறொரு யுக்தி செய்து பார்க்கலாம் என்று தீர்மானித்து, ஒரு நாள் தூதுளங்கீரை தேடிக் கொண்டுபோகாமல் இருந்துவிட்டார்.

"இன்று ஏன் தூதுளங்கீரை பரிமாறவில்லை? நாம் விருப்ப முடன் உண்ணும் கறியமுதை இன்று ஏன் சித்தமாக்கவில்லை?" என்று ஆளவந்தார் தமது சமையல்காரனைக் கேட்டார். அதற்கு அவர், "ஒரு கிழவனார்-ஆறுமாதமாக நாள்தோறும் கொடுத்து வந்தவர், இன்று வந்து சேரவில்லை" என்றார்.

"யார் அந்தக் கிழவனார் தெரியுமா?"

"எனக்குத் தெரியாது, சுவாமி!"

"நீர் விசாரிக்க வில்லையா?"

"இல்லை சுவாமி; மன்னிக்க வேணும்."

"அவர் எதற்காகத் தூதுளங்கீரை கொடுத்து வந்தார், தெரியுமா?"

"அதுவும் தெரியாது சுவாமி, மன்னித்தருள வேணும்."

"இனி ஒரு சமயம் அவர் வந்தால் நமக்குத் தெரிவிக்க வேணும்"

"நியமனப்படி செய்கிறேன், சுவாமி."

மணக்கால் நம்பி மறுபடியும் ஆளவந்தாரைச் சந்திக்க முயற்சி செய்தார். 'இன்னும் சில நாள் பச்சையிட்டுப் பார்ப் போம்!' என்று தூதுளை கொண்டுவந்தார். உடனே சமையல் காரன் ஆளவந்தாருக்குச் செய்தி அறிவித்தார். ஒரு சிற்றரசர் போல் செல்வ வாழ்வு வாழ்ந்து வந்த ஆளவந்தார் மணக்கால் நம்பியைத் தம்மிடம் அழைத்துவருமாறு கட்டளையிட்டார்.

கிழவனாரின் முகப்பொலிவு ஆளவந்தாரை வசீகரித்தது. உடனே ஆசனம் அளித்தார்; அவர் அடிகளில் வணங்கி, "இத் தனை நாளாக நமக்குப் பச்சையிடுகிறது எதற்காக? விருப்பத்தை அறிவித்தால் இயன்ற உதவி செய்வேன்; பொருளுதவியோ வேறு எந்த உதவியோ செய்ய முயல்வேன்" என்றார்.

"நாம் உமக்குக் கொடுக்க வந்தோமேயன்றி உம்மிடம் கொள்ளவந்தோம் இல்லை' என்று மணக்கால்நம்பி சொன்னதும் ஆளவந்தார் ஆச்சரியமடைந்தார். பிறகு, "எனக்கு உரிமை இல்லாத பொருளை நான் எப்படி உம்மிடம் கொள்வது?" என்று கேட்டார்.

"உமது உரிமைச் செல்வந்தான் அது; உமது முன்னோர் தேடிவைத்த திரவியம் அது; இருக்கிறது."

"அது எங்கே இருக்கிறது? அந்த இடத்தை அறிவீரோ?"

"நிதி கிடக்கிற இடம் நான் அறிவேன்."

"அதை எப்போது எனக்குக் காட்டப் போகிறீர்?"

"அதை நான் காட்டுமளவும், நீர் கைக்கொள்ளுமளவும் நான் தடையின்றி இங்கே வந்து போக அனுமதி தரவேண்டும்."

மணக்கால்நம்பியோடு பழகிப் பழகி ஆளவந்தாருக்கு நாதமுனியின் பக்திக்கொள்கைகளில் விருப்பம் ஏற்பட்டது. சரணாகதியின் சுவை நெஞ்சில் பட்டது. அதுவே சமயம் என்று ஆளவந்தாரை மணக்கால்நம்பி திருவரங்கத்திற்கு அழைத்துக் கொண்டு போனார். இருவரும் பெருமானைச் சேவித்துக்கொண்டிருக்கும்போது மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு அந்த அழகிய மணவாளப் பெருமானைச் சுட்டிக் காட்டி, "இதோ உமது பாட்டனார் தேடிவைத்த பெருஞ்செல்வம்!" என்றார்.

தமது பாட்டனாரைக் குறித்து ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தார் ஆளவந்தார். மணக்கால்நம்பி வாயிலாகவும் தெரிந்து கொண்டிருந்தார். இப்போது, 'அவர் தேடிவைத்த நிதி இந்தப் பெருமாள்தான்!' என்று மணக்கால்நம்பி சொன்னதும்,

> 'பழுதே பகலும்
> போயின!

என்று அழுகை வந்துவிட்டது ஆளவந்தாருக்கு.

## ஆளவந்தாரும் ராமாநுஜரும்

ஆளவந்தார் நாதமுனியின் பக்திமதத்தைப் பரப்பத் தொடங்கினுர். இவர் சீடர்களில் முக்கியமானவர்களாகப் பெரிய நம்பி, திருக்கோஷ்டியூர்நம்பி, திருக்கச்சிநம்பி, மாறனேர்நம்பி முதலானவர்களைக் குறிப்பிடலாம். இவர் காலத்தில் வைஷ்ணவ சமயம் பெருகிப் பரவி வந்தது.

ஆளவந்தாரின் சீடரான பெரியநம்பி மதுராந்தகத்தில் ராமாநுஜரைத் திருத்திப் பணிகொண்டார். ராமாநுஜரின் ஆசிரியர்களில் முக்கியமானவர் இவர். திருக்கோஷ்டியூர்நம்பி ராமாநுஜருக்கு இரகசிய உண்மையாகிய திருமந்திரப்பொருளை- உண்மையாகிய திருமந்திரப் பொருளை – உபதேசித்தார் என்பது பிரசித்தம். திருக்கச்சிநம்பியும் ராமாநுஜருடைய ஆசிரியர்களில் ஒருவராவர். ராமாநுஜருக்கு ஆசிரியர் ஐவர்; சீடர்கள் எண்ணிறந்தவர். கூரேசன், பிள்ளை உறங்காவில்லிதாசர், முதலியாண்டான் முதலானவர்கள் முக்கியமானவர்கள். ஆளவந்தாரின் சீடர்கள் ராமாநுஜருக்கும் ஆளவந்தாருக்கும் இடையே ஒரு ஞானப் பாலமாக அமைந்து தொண்டாற்றினர்.

திருவாய்மொழிக்குச் சுருக்கமாக 'ஆறுயிரப்படி' என்ற பிரசித்தமான வியாக்கியானத்தை இயற்றிய திருக்குருகைப் பிரான் பிள்ளானும் ராமாநுஜருடைய சீடராவர். இந்த ஆசாரிய பரம்பரை மணவாள மாமுனிவரை நீடித்து வந்திருக்கிறது.

* * *

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்து மெய்யடியார்களை ஆழ்வார்களென்றும் ஆசாரியர்களென்றும் இரு பெரும் பிரிவினராகக் குறிப்பிடுகிறுர்கள். ஆழ்வார்களின் பிரபந்தங்களையும் கொள்கைகளையும் வளர்த்து ஸ்ரீ வைஷ்ணவம் என்ற பக்திமதத்தை வளர்ந்தோங்கச் செய்தார்கள், ஆசாரியர்கள்.

# 5. மணிமாலையில் ஒரு நாயகமணி

ஒரு நாள் ராமாநுஜரும் சீடர்களும் காவேரியில் நீராடி வருவதை ராமாநுஜருடைய ஆசிரியர்களில் ஒருவரான பெரிய நம்பி எதிரே கண்டு ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தாராம். உடனே ராமாநுஜரும் அந்த வணக்கத்தை அங்கீகரித்து ஆசி கூறினராம்.

## சீடரோ, குருவோ ?

'இது எப்படி நியாயமாகும்?' என்று ராமாநுஜரைச் சீடர்கள் கேட்டார்கள். இவரும், 'அவர் அபீஷ்டத்தை நிறைவேற்றுவது தானே எனக்குத் தருமம்!' என்றார். விஷயம் விளங்காமல் அவர்கள் பெரியநம்பியைக் கேட்க, அவர், 'என்னுடைய குருவான ஆளவந்தாராகவும், அவருடைய சீடர்களாகவும் கண்டேன் உங்களையெல்லாம்!' என்று பதில் சொன்னார்.

ராமாநுஜர் பெரியநம்பியைக் குருவாக நினைத்திருந்த போதிலும், பெரியநம்பி இவரைச் சீடராக எண்ணுமல் ஆளவந்தா ராகவே மதித்து வந்தார். ஆம்; உண்மையான சீடரும் உண்மை யான குருவைப்போல் மதிக்கத் தக்கவர்தாம்.

எனினும் ராமாநுஜருடைய மேதாவிலாசமும் அபாரமான தன்னம்பிக்கையுமே இப்படி ஒரு காரியத்தைத் துணிந்து செய்ய முடியும். இது கொஞ்சமும் தற்பெருமை ஆகாது. குருவுக்காக ராமாநுஜர் செய்த தியாகமென்றே கருதப்படவேண்டும்.

## 'என்னிலும் சிறியர் இல்லை!'

'ஞானத்திலும் குணத்திலும் பெரியவரே வழிபடத் தகுந்தவர்' என்ற உண்மையைப் பெரியநம்பியின் செய்கையைப்போல் ராமாநுஜருடைய வேறொரு ஆசிரியரான பெரிய திருமலைநம்பியின் செய்கையும் வெளிபிடுகிறது. ஒரு சமயம் ராமாநுஜர் திருப்பதிக்குப் போகையில், பெரிய திருமலைநம்பி எதிர்கொண்டு வரவேற்றார்.

ராமாநுஜர் அவரை வணங்கி, 'ஸ்வாமி! சிறியேனுக்காகத் தாங்கள் இவ்வளவு தூரம் வரவேணுமா? சிறியவர் யாரேனும் இல்லையா?' என்று கேட்டார். திருமலைநம்பி நகைசெய்து, 'ஊரெல்லாம் தேடிப் பார்த்தாலும் என்னைக்காட்டிலும் சிறியவர்களைக் காணவில்லை!' என்று பதில் சொன்னாராம். இதே உண்மையை வற்புறுத்துகிறது, பட்டர் என்ற ஆசாரியரின் தாயார் தமது புதல்வரையே தமக்கும் ஆசாரியராக மதித்துக் கௌரவித்ததும்!

## தோண்டிச் சண்டை

ராமாநுஜருடைய ஆசிரியர்கள் இவரை ஞானாதிகர்* என்று மதித்து நடந்துகொண்ட போதிலும், அந்தச் செய்கைகளும் ராமாநுஜருடைய குணாதிசயத்தை விசேஷமாய் உருவாக்க உதவியிருக்க வேண்டும். காஞ்சீபுரத்தில் பெரியநம்பி குடும்ப சகிதமாய்ச் சுமார் ஆறுமாதகாலம் ராமாநுஜருடைய மாளிகையிலேயே தங்கி இவருக்குத் தமிழ்வேதங்களான பிரபந்தங்களையும் அவற்றிலே பொதிந்திருக்கும் விசேஷ ரகசியங்களையும் உபதேசித்துக்கொண்டிருந்தார்.

இப்படி இருக்கையில் ஒரு நாள் ராமாநுஜர் மனைவியான தஞ்சமாம்பாளும் பெரியநம்பி மனைவியான விஜயாம்பாளும் கிணற்றிலே தண்ணீர் எடுக்கும்போது விஜயாம்பாளுடைய தோண்டியிலிருந்து ஒரு துளி தஞ்சமாம்பாள் குடத்தின்மேல் விழுந்ததாம். உடனே தஞ்சமாம்பாள், "நாங்கள் உயர்ந்த குலத்

* ஞானாதிகர்-ஞானத்தை அதிகமாக உடையவர்.

தினரென்றும் ஐசுவரிய முள்ளவர்களென்றும் மதியாமல் நீ நடந்து கொண்டதற்கு ஆசாரிய பத்தினி என்ற கர்வந்தானே காரணம்?'' என்று சொல்லிவிட்டாள்.

விஜயாம்பாள் கண்ணீர் வடித்துக்கொண்டு வந்ததைப் பெரியநம்பி கண்டு, "இனி இங்கே இருப்போமானல் உன்னல் அடிக்கடி இந்த விதமான விபரீதங்கள் விளைந்து ஞானச் செல்வரான ராமாநுஜர் விஷயத்தில் அபசாரத்திற்கு உள்ளாக வேண்டியிருக்கும்?'' என்று சொல்லி அந்த க்ஷணமே மனைவியோடு ஸ்ரீரங்கத்திற்குப் பிரயாணமானர். இதை அறிந்துகொண்ட ராமாநுஜரின் உள்ளம் பெரியநம்பியின் பரம ஸாத்விக நிலையை நினைத்து நினைத்து நீராக உருகிப்போயிற்று.

இதையும் ஒரு முக்கியமான காரணமாகக் கொண்டே ராமாநுஜர் செல்வத்தையும் மனைவியையும் துறந்து பாகவதர்களின் ஞானச் செல்வத்தை வளர்ப்பதற்கே தமது வாழ்க்கை முழுமையையும் அர்ப்பணஞ் செய்தார்.

### விதையும், கனியும்,

கிரேக்க மகானன ஸாக்கரடீஸின் மனைவியைப் போல் ராமாநுஜருடைய மனைவிக்கும் உயர்ந்த லட்சியங்களைப் பற்றிய கவலை இல்லை. எனவே, தமது சிஷ்யரத்தினமான கூரேசனைப்போல் இவராலும் தருமபத்தினியோடிருந்து தாமத்தை வளர்க்க முடியவில்லை.

மனைவியையும் வீடு வாசல்களையும் துறந்து காஞ்சீபுரத்தை விட்டு ஸ்ரீரங்கம் போனபின்பு ராமாநுஜர், பெரியநம்பி முதலானவர்களின் செய்கைகளிலிருந்து வைஷ்ணவத்தின் உயர்ந்த லட்சியங்களைக் குறித்து இன்னும் அதிகமாகத் தெரிந்துகொண்டார். 'தாழ்ந்த வகுப்பின'ரான மாறனேர்நம்பிக்குப் பெரிய நம்பி-புத்திரன் செய்வதுபோல்-தாமே தகனச் சடங்கு முதலியவை செய்தபின் ராமாநுஜர் குருவைப் பார்த்து, "அந்த விஷயத்தில் அடியேன் போன்ற பணிவிடைக்காரர்களை நியமித்துப் பணி

கொள்ளாமல் ஆசாரிய ஸ்தானத்திலுள்ள தாங்களே அப்படிச் செய்தது பிராமணர்கள் உள்ளத்தைப் புண்படுத்துகிறதே'' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டாராம்.

நம்பி சிரித்து, "நான் சந்தியாவந்தனத்திற்கு ஆள் நியமித்தாலும் நியமிப்பேன்; இந்தக் காரியத்தில் மாத்திரம் வேறொருவரையும் நியமிக்க முடியாது! ஜடாயு கழுகாயிருந்தும் ராமபிரான் தகனஸம்ஸ்காரம் செய்யவில்லையா? விதுரர் தாசி புத்ரராயிருந்தும் தருமபுத்திரர் அந்தியக் கிரியை செய்தா ரல்லவா? நான் தர்மபுத்திரரைக் காட்டிலும் ராமபிரானைக் காட்டிலும் பெரியவனு? மாறனேர்நம்பி ஜடாயு விதுரர்களைக்காட்டிலும் சிறியவரா?' என்று பதில் சொன்னுர்.

இத்தகைய செயல்களும் உபதேசங்களும் ராமாநுஜர் உள்ளத்தில் விதைகளாயிருந்து, பஞ்சமர்களுக்கும் பரமோபகாரம் செய்து அவர்களைத் திருக்குலத்தா ராக்கிய கருணையாகக் கனிந்திருக்க வேண்டும்.

பெரியநம்பியின் தியாக புத்தியைப்போல் திருக்கச்சிநம்பி, திருக்கோஷ்டியூர்நம்பி முதலான ஆசிரியர்களின் தியாக புத்தியும் குரு பக்தியும் சீடர்கள்மீது அவர்களுக்கு இருந்த பேரன்பும் கருணையும் ராமாநுஜருடைய குணதிசயத்தை மேலும் மேலும் வளர்த்திருக்கக்கூடும். ஒரு சமயம் திருக்கோஷ்டியூர்நம்பி தியான சமாதியிலிருந்து விழித்துக்கொண்டதைப் பார்த்த ராமாநுஜர், "அந்தத் தியானம் எதைக் குறித்து ? தங்கள் மந்திரம் எது ?" என்று கேட்டார்.

"வேறொன்றும் இல்லை; ஆளவந்தார் வடகாவேரியில் நீராடிக்கொண்டிருக்கும் அந்த அழகே எனக்கு இப்போது தியானமாக இருந்தது; ஆளவந்தார் என்ற அருமைப் பெயரே ஜபமாக இருந்தது'' என்று அவர் பதில் சொன்னுராம்.

இவ்விதமான குருபக்தி வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையின் உயிர் நிலையாக அமைந்திருந்தது. இத்தகைய பக்தியும் சீடர்

களிடம் ஆசிரியர் கொண்டிருந்த விசுவாசமும் வாத்ஸல்யமும் அந்தப் பரம்பரையில் வந்தவர்களுடைய வாழ்க்கையையும் அந்தப் பரம்பரையோடு தொடர்புடையவர்களின் வாழ்க்கையையும் ஒருங்கே தியாகமயம் ஆக்கின.

## குருவை உய்வித்த சீடர்

ஆசாரிய முதல்வரான நாதமுனிகளின் பிரதான சீடர் ஒருவர் நாதமுனிகளின் மனைவியைத் தாய்வீட்டில் கொண்டுவிடப் போயிருந்தார். அங்கே அவர்கள் குலத்திலும் கோத்திரத்திலும் தாழ்ந்தவரென்று அவரை அவமதித்துத் தாங்கள் சாப்பிட்ட பிறகு ஒதுக்கி வைத்து அவருக்கு உணவளித்தார்களாம்.

இந்த நிகழ்ச்சியை அவர் ஒருவரிடத்திலும் சொல்லவில்லை. அவமதிப்பு என்றுகூட எண்ணவில்லை. ஆசாரியர்களுடைய உறவினர்கள் அல்லவா?

'போனகம் செய்த சேடம்
தருவரேல் புனித மன்றே!'

[போனகம்-போஜனம். சேடம்-சேஷம்; மீதியான உணவு. புனிதம்-பரிசுத்தம்.]

என்ற தொண்டரடிப்பொடி யாழ்வார் வாக்கை எண்ணியெண்ணி இன்புற்றாராம்.

அந்தக் குதூகலத்தைக் கண்டுதான், 'ஏதோ விசேஷம் நடந்திருக்க வேணும்!' என்று நாதமுனி ஊகித்தார். நடந்ததை அறிந்துகொண்டதும் அத்தகைய குருபக்தியை வியந்து, 'இவரே என்னை உய்யும்படி ஆட்கொண்டார்!' என்று சீடரைத் தழுவிக் கொண்டாராம். இதனால்தான் இந்தச் சீடருக்கு **உய்யக் கொண்டார்** என்று பெயர் வந்தது.

## குருபக்தியும் 'சிஷ்யபக்தி'யும்

இவரே நாதமுனிகளுக்குப் பின் ஆசாரிய ஸ்தானம் வகித்தார். சீடர்களின் செய்கையைக் 'குருபக்தி' என்று சொன்னால், நாத

முனிகளைப் போன்ற ஆசாரியர்களின் செய்கையைச் 'சிஷ்யபக்தி' யென்றுகூடச் சொல்லிவிடலாமல்லவா? 'உய்யக்கொண்டாரைப் போன்ற சீடர்களின் தியாகம் பெரிதா? நாதமுனியைப் போன்ற குருவின் தியாகம் பெரிதா?' என்று யாரே தீர்ப்புச் சொல்ல முடியும்.

நாதமுனிகளின் பேரனான ஆளவந்தாரைத் திருத்த வேணுமென்று அவருக்குப் பிரியமான உணவுப் பொருளைத் தேடிக்கொடுத்துப் பொறுமையோடு சமயம் பார்த்திருந்த மணக்கால்நம்பியிடத்திலும் 'சிஷ்யபக்தி' காணப்பட்டதென்று சொல்லாம். இத்தகைய குருவுக்காக ஆளவந்தார் தமது ராஜ போகத்தைத் தியாகம் செய்தாரென்றால், உய்யக்கொண்டாரைப் போன்ற சீடர்களுக்காக நாதமுனிகள் தமது யோக வாழ்க்கையையே துறந்து, பிரபந்தக்கொள்கைகளைப் பரப்பத் தொடங்கினர்.

இந்தப் பூர்வாசாரியர்களுடைய வரலாறுகளும் ராமாநுஜருடைய ஆத்ம யாத்திரையில் 'வழிகாட்டி'களாக அமைந்திருக்க வேண்டும். ராமாநுஜருக்கும் சீடர்களின்மீது பேரபிமானம் உண்டு. ஆசாரியர் ஆணையை மீறித் தாம் தெரிந்துகொண்ட ரகசியத்தைக் கருணையோடு பலருக்கும் வெளியிட்டவர் சீடர்களுக்காக எப்படிப்பட்ட தியாகமும் செய்திருக்க வேண்டுமல்லவா? குருபக்தியும் 'சிஷ்யபக்தி'யும் இவருடைய வாழ்க்கையைப் பரம பரித்தியாகமாக்கிவிட்டன.

கொங்குநாட்டைச் சேர்ந்த ஒரு ஸ்திரீ வீதியிலே ராமநுஜரைப் பார்த்து, "நீரோ நாள்தோறும் பிக்ஷையெடுத்துக் காலக்ஷேபம் செய்யும் சந்நியாசி; ஆனால் உமக்கு ராஜாதி ராஜர்களுக்கும் இல்லாத மாட்சி இருக்கிறது; முடிமன்னர்களும் சர்வ சாஸ்திர விற்பன்னர்களும் பரம ஏழைகளோடும் பாமரர்களோடும் சமரசமாக முடிசாய்த்து உம்முடைய காலில் விழுகிறார்கள், *யதிராஜாவே! அருள் செய்யவேணும், இது என்ன அதிசயம்?" என்று கேட்டாள்.

*யதிராஜா—சந்நியாசிகளுக்கு ராஜா அல்லது தலைவர்.

ராமாநுஜர், ''அந்த அதிசயத்தைச் சொல்லுகிறேன்; மடத்திற்கு வாரும்'' என்று சொல்லிப் போய்விட்டார். அவள் அங்கே போய் உபதேசங்களைச் செவியாரக் கேட்டும் அந்த ஒழுக்கத்தைப் பிரத்தியட்சமாகப் பார்த்தும் இவருடைய அருமை பெருமைகளை உணர்ந்து, 'கொங்குப் பிராட்டி' யென்று ராமாநுஜரே பாராட்டும் படியாகத் தானும் ஒரு பக்தமணி யானாள்.

சீடர் ஆகக்கூடும் என்ற நம்பிக்கைக்கு உரியவர்களிடத்தி லேயே ராமாநுஜர் இவ்வளவு அன்பும் விசுவாசமும் காட்டி,

.........'எங்கள் குழாம் புகுந்து
கூடும் மனமுடை யீர்கள்! வரம்பொழி வந்(து)
ஒல்லைக் கூடுமினோ!'

[குழாம்-கூட்டம். மனமுடையீர்கள் - மனமுடையவர்களே. வரம்பொழி வந்து-எல்லையில்லாமல் வந்து. ஒல்லை-சீக்கிரமாக. கூடுமின்-கூடுங்கள்.]

என்ற பெரியாழ்வாரைப்போல் கருணை செய்தாரென்றால், சீடர்களையே அவர் செல்வமாக மதித்தாரென்று சொல்லவும் வேண்டுமா?

## ராமாநுஜ தாஸர்கள்

ராமாநுஜர்மீது சீடர்கள் கொண்டிருந்த பக்தியோ எல்லையும் ஆழமும் காண முடியாத, ஆச்சரியமான மகா சமுத்திரம். இந்தச் சீடர்களில் ஒருவரான எம்பார் ராமாநுஜருக்குப் பின் ஆசாரிய ஸ்தானம் வகித்த பட்டரைப் பார்த்து, 'சகல சாஸ்திரங்களையும் அப்பியசித்தோம் என்ற மேன்மையை நினைத்திராமல் ராமாநுஜர் அடிகளே தஞ்சமென்றிரும்' என்று சொன்னார்.

பட்டரும் தம்முடைய சீடரான நஞ்சீயருக்குச் சொன்னார்: ''நீர் வேதாந்தத்தில் நிபுணரென்று பெருமைகொள்ள வேண்டாம்; 'ராமாநுஜ தாஸன்' என்ற பணிவோடு எனக்குப் பின் ஆசாரிய ஸ்தானம் வகிக்கவேண்டும்.''

இப்படியே நஞ்சீயரும் தம்முடைய உயிர்போன்ற சீடரான நம்பிள்ளையை நோக்கி, "பிள்ளாய்! நாலாயிரத்திற்கும் பிறர் பிரமிக்கும் திறமையோடு திவ்யமாகப் பொருள் சொல்வோமென்று பெருமை கொள்ளவேண்டாம். 'அடியேன் ராமாநுஜ தாஸன்' என்ற பெருமையோடு ஆசாரிய ஸ்தானத்தில் வீற்றிரும்!" என்று உபதேசித்தாராம்.

## தியாக பரம்பரை

இந்த விதமாக வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையைத் தியாக பரம்பரை யாக்கிய குரு சிஷ்யக் கிரமத்திற்கு இலக்கியமா யிருந்தவர்கள்,

**'நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்,**
**அண்ணிக் கும்;அமு தூறும்என் நாவுக்கே!'**

[நண்ணி–நெருங்கி. அண்ணிக்கும்–தித்திக்கும்.]

என்று பாடிய மதுரகவியும் இவரால் இப்படிப் பாடப்பெற்ற நம்மாழ்வாருமே.

நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களைப் பின்பற்றி வாழ்க்கை நடத்துவதிலும் அவர்களுடைய பக்திமதத்தைப் பரப்புவதிலும் அந்தக் கொள்கைகளுக்கு இன்றியமையாத தத்துவ ஆராய்ச்சிகள் செய்வதிலும் காலங் கழித்தவர்கள் ஆசாரியர்கள். 'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்!' என்ற முதலாழ்வார்களின் கதையும்; மண்டங்குடி விப்ரநாரா யணர், கிராமத்தாலும் குலத்தாலும் கிடைத்த அந்தப் பெயரைத் துறந்து தொண்டரடிப்பொடியான வரலாறும்; திருமங்கை மன்னன், பொருளையும் பதவியையும், குலசேகரர் ஒப்பற்ற சிம்மாசனத்தை யும் துறந்த வைபவங்களும்; ஆண்டாள் மணவாழ்க்கையை விரும்பாமல் கடவுளையே காதலனாகக் கொண்ட கொள்கையும்; மதுரகவிகள் நம்மாழ்வாரைக் குருவாக அடைவதற்குத் தம் முடைய குல சம்பிரதாயங்களைத் துறந்த துணிவும்; நம்மாழ்வார் பிறர் துன்பம் நெஞ்சிலேபட, வேதம் தமிழ் செய்து நாட்டை

உய்வித்த கருணையும் ஆசாரியர்களுடைய தியாக வாழ்க்கையை உருவாக்கி யிருக்கவேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

பெரியநம்பியைப்போல் மற்ற ஆசாரியர்களும் அந்த நாளில் ஆழ்வார்களின் பாகவத தருமத்திற்காக உயிரையும் தியாகம் செய்யக்கூடியவர்களாக இருந்தார்கள். ராமாநுஜரையே ஆபத் தான பேர்வழி யென்று கொல்ல முயன்றவர்களும் உண்டு. இப்படிப்பட்ட தியாகிகளின் வாழ்க்கை உண்மை பொருந்தியது; எனவே உண்மையான அழகு பொதிந்தது.

வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையை **ஆசாரிய ரத்தினமாலை** யென்று சொல்லலாம். இந்த மாலையின் நடுநாயகமான ரத்தினம் ராமாநுஜர் தாம். பெரியநம்பி முதலான பூர்வாசாரியர்கள் ராமாநுஜருக்கு ஆசாரியர்களாக இருந்தும் இவர் சம்பந்தத்தாலே பேறு பெற்றார்களென்றும், கூரேசன் முதலான மற்ற ஆசாரி யர்கள்—அதாவது இவருக்குப் பிந்தினவர்கள்—இவருடைய சீடர்கள் என்ற உறவு பெற்றுப் பேறுபெற்றார்கள் என்றும் சொல்வது உண்டு.

நம்மாழ்வாரென்ற மேகம் நாதமுனி என்ற மலைமீது தங்கி வருஷித்ததாம். அந்தப் பருவமழை உய்யக்கொண்டார், மணக் கால் நம்பி என்ற அருவிகளாக இறங்கி ஆளவந்தாரென்ற மகா நதியில் கலந்ததாம். அந்த நதி சங்கமித்த கடல்போன்ற பெரிய தடாகந்தான் ராமாநுஜரென்றும், இது மற்ற ஆசாரியர்கள் என்ற மதகுகளின் வழியாகப் பாய்ந்து நாட்டை வளமுறச் செய்த தென்றும் குருபரம்பரைகள் சொல்லுகின்றன.

இனி நாம் திருக்கச்சிநம்பி என்ற பெரியார் வாயிலாக ராமாநுஜரும் பக்தி உலகமும் எத்தகைய உயர்ந்த பாடங்களைக் கற்றுக்கொண் டிருக்கவேண்டும் என்பதை ஒருவாறு காண்போம்.

# 6. சேமித்த நிதி எங்கே ?

ஆற்றங்கரை மண்ணில் நடந்து போகிருர். காஞ்சிமாநகரின் வேகவதி ஆறு. நீர் இல்லாத ஆற்றிலே பக்திவெள்ளமாக ஓடுகிறது, பக்தர் கண்களுக்கு.

ஒருவன் பின்தொடர்ந்து வருகிருன், சற்றுத் தூரத்திலே ஏன் அப்படி மணற்பொடியை எடுத்துத் தலையில் வைத்துக் கொள்கிருன்?

## நம்பியும் வள்ளுவனும்

'கோயிலிலும் பெருமாளிடத்திலுமே இனி உன் வியாபாரம்!' என்ற தந்தையாரின் வாக்கு எவ்வளவு அதிசயமாகப் பலித்து விட்டது! 'பெருமாள்கோயில் என்ற வரதராஜர் கோயிலில் அநவரத கைங்கரியம் செய்துகொண் டிருக்கும் பேறு கிடைத் திருப்பதால், 'திருக்கச்சிநம்பி' என்று பெயர் பெற்றிருக்கும் பெரியார் இவர். இவரைப் பின்தொடர்ந்து வந்துகொண் டிருப்பவனே, 'தாழ்குலம்' என்று அந்நாளில் ஒதுக்கப்பட்டிருந்த வள்ளுவ குலத்தைச் சேர்ந்தவன்.

'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்!' என்ற ஆழ்வார் வாக்கை அநுசந்தித்துக்கொண்டே திருக்கச்சிநம்பி ஒரு கணம் திரும்பிப் பார்க்க நேர்ந்தது. உடனே, 'யார் அவர்? ஏன் அப்படித் தலையில் மணற்பொடியை வைத்துக்கொள்கிருர்? பைத்தியமா?' என்று எண்ணம் இட்டவராய் அவரைக் கூவி அழைக்கிருர்.

**வள்ளுவன்:** (இவரை நோக்கிக் கொஞ்ச தூரம் வந்தபின் அப்படியே நின்றுகொண்டு) சுவாமி! தங்கள் திருவடிகளைத் தரிசிப்பதும், அந்த அடி மலர்களால் மிதியுண்ட மணற்பொடியை முடிமேல் அணிவதும் அடியேனுக்குப் வைத்தியம் ஆகிவிட்டன. இதைப் பல தினங்களாக அனுசரித்து வருகிறேன். மன்னிக்க வேணும், சுவாமி!

**நம்பி:** (நெருங்கி வந்து) நல்ல புத்திசாலியாக இருக்கிறீர்; நீர் இப்படிச் செய்யலாமா?

**வள்ளுவன்:** அடியேன் குலத்தில் சிறந்தவனும் அல்ல; தனத்தில் மிகுந்தவனும் அல்ல; படிப்பிலோ தவத்திலோ உயர்ந்தவனும் அல்ல. ஆயினும் பெரியோர் பெறும் பேற்றை நோக்க ஆசை கரைபுரளக் காண்கிறேன். அந்த ஆசை கைகூடுவதற்கோ, அருளாளனுடைய அருள் வேண்டும். தாங்கள் அப்பெருமானை நாள்தோறும் பணிகளால் உகப்பித்து வருகிறீர்கள். முகமுகமாய் வார்த்தைபாடிக்கொண் டிருப்பதாகவும் கேள்விப் படுகிறேன். அத்தகைய மகானுபாவரான தங்களை நெருங்கித் தொண்டு செய்யும் பேறு எனக்கு வாய்க்க வில்லையே! தங்கள் திருவடித் தூசையாவது தலைமேல் தரித்துக்கொள்ளலா மென்று தான் தங்களை இப்படித் தொடர்ந்து வருகிறேன்.

**நம்பி;** (அதிசயித்து) பிள்ளாய்; நீர் அறிவாளராய்க் காண்கிறீர்; இப்படிச் செய்வது தகுதியோ? உமக்கு ஏதாவது விருப்பம் இருந்தால் தெரிவிக்கலாம்; இயன்றால் உதவுவேன்.

**வள்ளுவன்:** அடியேன் பேறு பெறக் கூடுமா? அருளாளனைக் கேட்டாவது அறிவிக்க வேண்டுகிறேன்.

திருக்கச்சிநம்பி கோயிலுக்குத் திரும்பினர். பெருமானிடம் வள்ளுவன் வேண்டுகோளை விண்ணப்பஞ் செய்துகொண்டார். அன்றிரவில் நம்பிமுன் குறுநகையுடன் தோன்றிய அருளாளன், "நம் அடியார் அடிப்பொடி தலைமேல் இருக்க, அவனுக்குப் பேற்றில் ஐயமும் உண்டோ?" என்று அருளினன்.

மறுநாள் காலையில் வழியில் காத்துக்கொண் டிருந்த வள்ளு வனை மறுபடியும் நம்பி சந்தித்தார். ஆதுரம் பெருக அவனை நோக்கி, "உமக்குப் பேறு சித்தமா யிருக்கிறது காணும்!" என்று முகமலர்ந்தார்.

உடனே வள்ளுவன் தண்டனிட்டு, "சுவாமி! இந்தப் பொன்னடிகளின் மகிமையாலன்றோ அடியேனுக்குப் பேறு சித்திக்கப் போகிறது? தேவரீருக்குப் பேறு சித்திக்கும் அக்காலத் தையும் அடியேன் அறிந்துகொண்டால், அங்கேயாவது அருகிருந்து திருவடிகளில் பணி செய்ய ஆசைப்படுகிறேன். அதையும் கேட்டு அருளிச்செய்ய வேணும்" என்றான்.

நம்பி திரும்பிப் போகும்போது, 'நம்முடைய சொந்த விஷயத் தைப் பெருமானிடம் எப்படிக் கேட்பது?' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டார். அன்றும் வழக்கம்போல் பெருமாள் கைங்கரியத்தில் ஈடுபட்டார். எனினும், 'அவர் கேள்வி இருந்தபடி என்னே!' என்ற நினைவு அடிக்கடி வந்தது.

அன்று இரவிலும் அருளாளன் நம்பிமுன் தோன்றினான். 'அந்த வைஷ்ணவனுக்கு நம் உள்ளக் குறிப்பை வெளியிட்டீரோ? என்று கேட்டான். அவனுடைய இரண்டாவது விருப்பத்தையும் இவர் விண்ணப்பஞ் செய்ய, அருளாளன் நகை செய்து, 'நம்பி, நம்முடைய பக்தியும் குருபக்தியும் சிறந்தவை என்பதில் ஐயமில்லை. எனினும் அன்பர் பணியே பேற்றுக்குக் கொழு கொம்பு. அது இல்லாதார்க்குப் பேற்றில் ஐயம் உண்டு என்று சொல்லவும் வேண்டுமோ?" என்றான். திருக்கச்சிநம்பி திடுக்கிட் டெழுந்தார். பிறகு அன்றிரவு உறக்கம் வரவில்லை.

அதிகாலையில் திருக்கச்சிநம்பி திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார். தாம் அணிந்திருந்த பரிவட்டங்களைக் களைந்து பத்திரப்படுத்திக்கொண்டு மாடு மேய்ப்பவனைப்போல் வேஷம் பூண்டு சென்றார். போகும்போதே, தம்முடைய வாழ்க்கைக் கதையை நினைத்துப் பார்த்தார்.

## அந்த நாள் நடந்தது

வீரராகவ செட்டியார் பூவிருந்தவல்லியில் ஒரு பிரபல வியாபாரி; பெருஞ் செல்வர். அறவழியில் வாணிகம் செய்து பொருள் ஈட்டுவதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். அவருடைய நாலு புதல்வர்களில் 'கடைக்குட்டி'யான இவர் செல்வத்துள் செல்வமாக வளர்க்கப் பெற்றார்.

செட்டியார் தமது கிழப்பருவத்திலே புதல்வர்களைக் கொண்டு செல்வத்தை விருத்தி செய்விக்கவும் தாம் இளைப்பாறவும் விரும்பினார். சமமாக நாலு பங்கிட்டுக் கொடுத்துச் சில ஆண்டுகள் சென்றபின், ஒரு நாள் செட்டியார் பிள்ளைகளை யெல்லாம் வரவழைத்து உரையாடிய அந்த நிகழ்ச்சி, இப்போதுதான் நிகழ்வது போல், அவ்வளவு தெளிவாக, அவ்வளவு விவரமாகத் திருக்கச்சி நம்பிகளின் நினைவிற்கு வந்தது.

செட்டியார் மாளிகையில்:

**வீரராகவர்:** வாருங்கள் பிள்ளைகளே, உங்களிடம் நான் ஏற்கனவே ஒப்படைத்திருந்த செல்வத்தை நீங்கள் எங்கே சேமித்து எப்படி அபிவிருத்தி செய்து வருகிறீர்கள்? (மூத்தவனை நோக்கி) திருவேங்கடம் உன் நிலைமை என்ன?

**பிள்ளை 1:** அப்பா! நான் காஞ்சி முதல் காசிவரை நடைபெற்றுவரும் கூட்டு வியாபாரம் செய்கிறேன். சென்ற ஆண்டிலேயே மூலதனம் இரட்டிப்பு ஆகிவிட்டது.

**பிள்ளை 2:** நான் குமரி முதல் இமயமலை வரை செல்லும் வியாபார யாத்திரைக் குழுவினருடன் சென்று வந்தேன். மும்மடங்கு பெருகியிருக்கிறது முதல்.

**பிள்ளை 3:** கடல் கடந்து சாவகம் முதலான தீவுகளிலும் நடக்கிற கப்பல் வியாபாரத்திலே நான் முதலீடு செய்திருக்கிறேன். இந்த ஆண்டிலும் கொள்ளை லாபம் கிடைக்குமென்று நம்புகிறேன்.

**வீரராகவர்:** அருமைப்பிள்ளைகளே! உங்கள் திறமையை மெச்சுகிறேன். அதோ, நம்பி மட்டும் பேசாமல் சும்மா நின்று

கொண்டிருக்கிருனே. (அவனை நோக்கி) உன் சீலத்தை நான் நன்கு அறிவேன். சிறிதும் நெறிபிசகாத நீ பொதுமக்களின் நம்பிக்கைக்கு உரிபவனுகி வாணிகத்திலே நிறையப் பொருள் ஈட்டியிருப்பாயே; நீ சேமித்த பொருள் எங்கே?

**பிள்ளை 4:** பரத்திலே சேமித்து வைத்தேன். அப்பா.

**வீரராகவர்:** *(திகைத்து)* அதாவது, என்ன?

**பிள்ளை 4:** கோயில் தோறும் சென்று இறைவன் திருப்பணியிலேயே பொருளையெல்லாம் செலவு செய்துவிட்டேன்.

**வீரராகவர்:** *(திடுக்கிட்டு)* ஓஹோ! அப்படியானுல் உன் வியாபாரத்தை நீ கோயிலிலும் பெருமாளிடத்திலுமே தொடர்ந்து நடத்திக்கொண் டிருக்கலாம். எங்கள் வணிகர் குலத்தில் உனக்கு இடமில்லை.

*[நம்பி வெளியே வந்ததும் தாயான கமலை சந்திக்கிருள்.]*

**கமலை:** பிள்ளாய்! இந்த நகைகளை உனக்குத் தருகிறேன். விற்று வாணிகமோ, வேறு உசிதமான காரியமோ நீ செய்து கொள்ளலாம்.

**நம்பி:** அம்மா இது உசிதமன்று. என்னுடைய இதத்தை நாடும் தந்தையாரின் வாய்மொழிப்படியே நடப்பதாகத் துணிந்து விட்டேன்.

## பெருமாள் பக்தியும் குரு பக்தியும்

எத்தனை ஆண்டுகள் கழிந்துவிட்டன! 'பூஇயல் பொழிலும் தடமும் அவன் கோயிலும் கண்டு ஆவி உள்குளிர' அத்திகிரி அருளாளனுக்குப் பணிசெய்யும் பேறு வாய்த்ததும், 'பரத்திலே பெருநிதி சேமித்து வைத்திருக்கிருர் இவர்!' என்று ஓசைப்பட்டது; ஊரெல்லாம் நாடெல்லாம்.

**'கனவிலும் என் நினைவிலும்**
**கண் களிப்ப நோக்கினேன்'**

என்பது இவர் பக்தி அநுபவம். 'பங்கயத்தின் பொன் இயல் காடு ஓர் மணிவரைமேல் பூத்ததுபோல்' அருளாளன் இவருக்கு அடிக்கடி காட்சி வழங்கினுன். 'என் அமுதனைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே!' என்று இவரும் அருளாள னுக்கே ஆளாகிப் பணி புரிந்து வந்தார்.

ஆளவந்தார் என்ற பேராசிரியரைக் குருவாகக் கொள்ளும் பேறு இவருக்கு வாய்த்திருந்தது. 'தேனுர் கமலத் திருமகள் கொழுநன் தானே குருவாகி வந்து' அருள்புரிந்ததாக இவர் கருதி யதும் உண்டு. திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங் களைக் கற்றிருந்தார்.

எனினும் வேகவதி ஆற்றங்கரையில் வள்ளுவன் கற்பித்த பாடத்தை – அந்த வள்ளுவனுக்காக அருளாளனே கனவில் வந்து கற்பித்த பாடத்தை – மறக்க முடியாமல்தான் இவர் அப் பெருமான் பணியையும் துறந்து, மாடு மேய்ப்பவன் கோலத்தில் சென்றுகொண் டிருந்தார். ஆனல் இப்போது, 'தெண்ணீர்ப் பொன்னி, திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும்' அரங்க னுக்குப் பக்தி செய்யவோ பணி செய்யவோ போகவில்லை.

பரத்திலே நிதியை உள்ளபடியே சேமித்துவைக்கப் பகவா னுக்குப் பணி செய்வது போதாது என்பதல்லவா இப்போது இவர் கருத்து?

## ஆழ்வார்கள் சிறப்பிக்கும் அன்பர் பணி

'எம்பெருமான் தாள் தொழுவார் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்ருரே' என்றும், 'பேராளன் பேர் ஓதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே' என்றும், 'எம்பெருமான் தாளை நாளும் சிந்திப்பார்க்கு என் உள்ளம் தேனூறி எப்பொழு தும் தித்திக்குமே' என்றும் ஆழ்வார் அருளிச் செய்திருப்பவை நினைவிற்கு வந்தது. 'நீ ஆழ்வார் உள்ளத்தை இதற்கு முன் சரியாகத் தெரிந்துகொண்டாயில்லை!' என்று இடித்துக் காட்டுவது போலத் தோன்றியது.

திருக்கச்சிநம்பி திருவரங்கம் சேர்ந்ததும் பெரியநம்பிக்கு வண்டி ஓட்ட ஒரு வேலையாள் தேவை என்று கேள்விப்பட்டார். உடனே அவரிடம் போய் வேலைக்கு அமர்ந்து, மாடுகள் மேய்த்தும் வண்டியோட்டியும் பணி செய்யலானார்.

பெருமாள் கோயிலில் ஆலவட்டப் பணி செய்து பெருமாளுடன் முகமுகமாய் உரையாடிக்கொண் டிருந்தார் என்ற அந்தப் புகழைக் காட்டிலும், தம்மைத் தொண்டிலே மறைத்துக்கொண்டு, வண்டியோட்டுவதும் மாடு மேய்ப்பதும் இவருக்குப் பேரின்பமாகத் தோன்றின.

பெரியநம்பி திருக்கச்சிநம்பிக்கு ஏற்கனவே அறிமுகமாய் இருந்தவர்தாம். இருவரும் ஆளவந்தாரின் சீடர்களாக இருந்தவர்கள். ஆனால் பெரியநம்பிக்கு வயசு முதிர்ந்து கண்பார்வையும் சற்று மங்கியிருந்தது. திருக்கச்சிநம்பியோ தம் பாகவத வேஷத்தை மறைத்துச் சாதாரணமாக மாடு மேய்ப்பவனைப்போல் நடையுடை பாவனைகளையும் மேற்கொண் டிருந்தார். அதனால் அந்த **நம்பி** இந்த **நம்பி**யைக் கண்டுகொள்ள முடியவில்லை. எனவே, இந்தப் புதுமைப் பணி இடையூறின்றி இனிது நடந்து வந்தது.

பெரியநம்பி பல கிராமங்களுக்கும் சென்று பக்திப் பிரசாரம் செய்வது உண்டு. அப்போது உற்சாகமாக வண்டி ஓட்டிக்கொண்டு போவார் திருக்கச்சிநம்பி. 'எப்படிக் கற்றோம்?' என்று தாமே அதிசயிக்கும்படி அவ்வளவு தேர்ச்சி பெற்றுவிட்டார் இவர், இந்தத் தொழிலிலே.

இப்படி இப்பணி நடந்துகொண் டிருந்தபோது, ஒரு நாள் ஒரு கிராமத்திலே, 'செவிநுகர் கனிகள்' சொரிந்து காலட்சேபம் நடத்திய அடியவர் பணியின் அருமை பெருமைகளை வற்புறுத்தி விட்டுப் பெரியநம்பி தம் திருமாளிகைக்குத் திரும்பினார். அந்தக் கனிகளைச் செவி வாயாக நுகர்ந்து கண்ணீரும் கம்பலையுமானவர் திருக்கச்சிநம்பிதாம்.

திரும்பியபோது மழைபெய்யத் தொடங்கியது. திருக்கச்சிநம்பி வண்டியைச் சற்று விரைவாகவே ஓட்டினார்.

மழை பெருமழை ஆகிவிட்டது. வழிநெடுகத் தண்ணீரும் சேறுமாகி, வண்டி ஓட்டுவது கஷ்டம் ஆகிவிட்டது. திருக்கச்சி நம்பியோ ஒரு கையில் மாடுகளின் தலைக்கயிற்றைப் பிடித்துக் கொண்டும், மற்றொரு கையில் விளக்குக்கூட்டைப் பிடித்துக் கொண்டும் வண்டியை நடத்திச் சென்றார். சேற்றிலே உருளைகள் அழுந்தும்போதெல்லாம் தாமே தோள்கொடுத்துக் கிளப்பித் தள்ளிக்கொண்டு போவார்.

காற்றும் மழையும் இருட்டும் சேர்ந்துகொண்டதால், வழி காண்பதே மிகவும் சிரமம் ஆகிவிட்டது. விளக்குக்கூட்டில்அணைந்து போகாது தாம் காப்பாற்றிக்கொண்டு வந்த அந்த ஒளியால் அல்ல, அருளாளனது அந்த ஒளியால்தான் வழி கண்டு பெரிய நம்பியை மாளிகையில் கொண்டு சேர்த்ததாக நம்பினார், திருக்கச்சி நம்பி. அந்த அருள்தானே ஒளி காட்டி இந்தத் தொண்டு நெறியையும் இவருக்குக் காட்டியது.

'வயசு முதிர்ந்த பெரியநம்பியை எப்படியோ அதிகமாய் நனையவிடாமல் க்ஷேமமாகக் கொண்டுவந்து சேர்த்துவிட்டோமே!' என்ற பெருமகிழ்ச்சியில் தம்முடைய களைப்பையும் மறந்தவராய்த் திருக்கச்சிநம்பி, மாடுகளைப் பிடித்து ஒருபுறம் கட்டிவிட்டு, அடுத்த மாளிகையின் தாழ்வாரத் திண்ணையில் ஏறி நின்றார். 'என்ன பேறு பெற்றோம்!' என்ற குதூகலத்திலே பெருநிதி சேர்ந்து விட்டது போன்ற உணர்ச்சியும் ஏற்பட்டது.

மின்வெட்டி மறைவதுபோல், அந்த உணர்ச்சி மறைந்ததும் உடம்பு குளிரால் கிடுகிடுவென்று நடுங்குவதை உணர்ந்து கொண்டார். நனைந்திருந்த ஆடைகளைப் பிழிந்து உடம்பைத் துடைத்துக்கொண்டார்.

மாற்றுடையாகக் கட்டிக்கொள்ள உலர்ந்த ஆடை வேறே இல்லாததால் தாம் பெருமாள் கோயிலில் (காஞ்சியில்) இருந்த போது வழக்கமாகத் தரித்துக்கொண் டிருந்த பரிவட்டங்களைக் கொஞ்ச நேரம் உடுத்துக்கொண்டு இருக்கலாமே என்று கருதினார்.

அந்த மாளிகைத் திண்ணையின் மேற்புறத்துக் கூரையில் ஒருபுறமாகத் தாம் மறைத்துவைத்திருந்த அந்தப் பரிவட்டங்கள் சிறிதும் நனையாமல் இருந்தது கண்டு, அவற்றை உடுத்துக் கொண்டு, நனைந்த ஆடைகளைக் காற்றில் உலரும்படியாகக் கட்டி விட்டு ஒரு மூலையில் ஒதுங்கியிருந்தார். இதற்குள் உள்ளே சென்ற பெரியநம்பி வெளியே வந்து, 'வண்டிக்காரா, வண்டிக் காரா!' என்று கூப்பிட்ட சத்தம் காதில் விழுந்தது.

நன்றாகத் துவைத்துச் சுத்தமாக உலர்த்தி வைத்திருந்த இரண்டு உடைகளைப் பெரியநம்பி இவருக்காக எடுத்துக்கொண்டு இடைகழிக்கு வந்து, இவரைக் காணாமல் அந்த மழையில் குடையை ஒரு கையில் பிடித்துக்கொண்டு, விளக்குக்கூண்டை ஒரு கையில் ஏந்திக்கொண்டு, வெளியே வந்துவிட்டார். அவர் தம்மைக் கூப்பிட்டுக்கொண்டே இரண்டு மூன்று அடிகள் பெயர்த்து அந்த மழையில் நடப்பதைத் திருக்கச்சிநம்பி திண்ணையிலிருந்து பார்த்துவிட்டார். உடனே குதித்து ஓடிவந்து வணங்கினார்.

இதற்குள் பெரியநம்பி மாளிகையில் இருந்த பரிசாரகர் களும் தீபங்களுடன் வந்துவிட்டார்கள். அவர்களை நோக்கிப் பெரியநம்பி, 'என்ன காணும்! இந்த மழையில் நம்முடைய வண்டிக்காரன் உடம்பு முழுவதும் நனைந்து விரைத்து எவ்வளவு கஷ்டப்பட்டு நம்மைக் காப்பாற்றிக் கொண்டுவந்து சேர்த்திருக் கிறான்! அவன் கொண்டுவந்து சேர்த்தபடியால் அன்றோ நீங்கள் நம்மைக் காண வாய்த்தது? இப்போது அவனை அநாதரித்து விட்டோமே!' என்று தமது வேதனையைத் தெரிவித்துக் கொண்டார்.

பிறகு தம்மை வணங்கி எதிரே நின்ற திருக்கச்சிநம்பியை அந்த விளக்குகளின் வெளிச்சத்திலே பரிவட்டங்களுடன் பார்த்து விட்டார். திகைத்தார்; திடுக்கிட்டார்.

மங்கியிருந்த பார்வை திடீரென்று தெளிவுற்றதுபோல் தோன்றியது. சென்ற காலத்தை ஊடுருவிப் பாய்ந்தது

மனக்கண். காஞ்சியிலும் ஆளவந்தார் காலட்சேப கூடத்திலும் தாம் கண்டிருந்த திருமுகத்தை அப்படியே கண்டுகொண்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

பெரியநம்பி திருக்கச்சிநம்பியை நோக்கி, "இந்த வேஷத்தை இத்தனை நாளும் மறைத்துவைத்து மோசம் செய்தீர், கச்சி நம்பிகளே!" என்று சொல்லிவிட்டு ஆலிங்கனம் செய்துகொண் டார். அப்பால் இருவரும் அந்த மாளிகைக்குள்ளே சென்று அளவளாவினர்.

'கச்சிநம்பிகளே!' என்று தம்மைப் பெரியநம்பி அழைத்த தைக் காட்டிலும், 'வண்டிக்காரா!' என்று கூப்பிட்டதிலேயே தாம் வந்த காரியம் பூர்த்தி ஆகிவிட்டது என்று உளம் குளிர்ந்தார் திருக்கச்சிநம்பி. அந்தக் காரியத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பெரியநம்பி ஆச்சரியம் அடைந்து, "இந்த ஒரு பாடத்தை நானும் உம்மோடு பகிர்ந்துகொள்ள ஆசைப்படுகிறேன்; அந்தோ!" என்று கண்ணீர் வடித்தார். பிறகு இரண்டு நம்பிகளும், மறை களுக்கு மறைந்துபோய், மாடு மேய்க்க வந்து சேர்ந்த கண்ணன் புகழ் பாடினர்.

சில தினங்கள் பெரியநம்பி, திருக்கச்சிநம்பியைத் தம்முடன் விருந்தினராக வைத்துக்கொண்டு பணிபுரிந்தார்.

திருக்கச்சிநம்பி விடைபெற்றுக் காஞ்சிக்குத் திரும்பிப்போய் வரதராஜப்பெருமாளின் கைங்கரியத்தில் ஈடுபட லானார்.

* * *

'இப்படி ஒரு பெரியார் நம் ஊருக்கு அருகே இருப்பதையும் அறியாது இருந்துவிட்டோமே! பார்த்து ஆசிபெற்று ஆறுதல் பெற்று வருவோம்' என்று தொண்டுகிழவராக இருந்த வீரராகவ செட்டியாரும் அவருடைய மனைவி கமலையம்மையும், 'வணிக மும்மணிகள்' என்று தேசப்பிரசித்தி பெற்றிருந்த மூன்று பிள்ளைகளும் காஞ்சிக்கு வந்தார்கள், திருக்கச்சிநம்பியைச் சகோதரர்கள் உடனே தெரிந்துகொண்டார்கள்.

தங்கள் 'கடைக்குட்டி' தான் இன்று தொண்டக்குலத்தின் முதல்வராகத் திகழ்கின்ருர் என்று தெரிந்துகொண்டதும், தந்தையும் தாயும், "உம்மையும் எங்களில் ஒருவராக எண்ணி நாங்கள் இழைத்த பிழைகளைப் பொறுத்துக்கொள்ள வேணும். நம் ஊருக்கு வந்து எங்களுக்கும் உண்மையான சேமநிதியைக் காட்டவேணும். இனி நாங்கள் உமக்கு இஷ்டமானபடியே நடப்போம்" என்று வேண்டிக்கொண்டார்கள்.

அதற்கு நம்பி, "இனி அது கூடுமோ? தொண்டக் குலத்துக்குத் தொண்டு செய்வதை இனி இறைப்பொழுதும் விட்டு நீங்க முடியாதே! தொண்டு நெறியிலே சென்றுவிட்டால் அவர் திரும்பியும் வருவாரோ?" என்ருர்.

"அந்தத் தொண்டுக்கே நாங்கள் சேமித்து வைத்திருக்கும் நிதி முழுவதும் உரியதாகும்; பரத்திலே சேமித்து வைத்திருக்கும் அந்தப் பெருநிதியுடன் எங்கள் அற்பப் பொருளும் சேர்ந்து மணம் பெற வேணும்" என்ருர் திருக்கச்சிநம்பியைப் பெற்றெடுத்த பாக்கியசாலியான வீரராகவர்.

* * *

அத்வைத வேதாந்தத்தை யாதவப்பிரகாசரிடம் கற்றுக் கொண்ட ராமாநுஜரை ஆழ்வார்களின் பக்திமதத்திற்குத் திருப்பி விட்ட முதலாவது ஆசிரியர் திருக்கச்சிநம்பி யென்றே சொல்லக் கூடும். இவர் கி. பி. 995-இல் தோன்றியவர். இவர் மணம் புரிந்துகொள்ளாமல் பரம பக்தராகவே இருந்து பூவிருந்தவல்லியில் கொஞ்சகாலம் காஞ்சி வரதராஜருக்குப் புஷ்பத்தொண்டு புரிவதற்காக ஒரு பெரிய நந்தவனம் அமைத்துப் பணிபுரிந்து கொண்டிருந்தார் என்றும் தெரியவருகிறது. அந்தக் காலத்தில் திருக்கச்சிநம்பி நாள்தோறும் பூவிருந்தவல்லியிலிருந்து காஞ்சீ புரத்திற்கு நடந்துபோய்ப் பெருமாளுக்குப் புஷ்பம் சமர்ப்பித்துத் திரும்புவாராம்.

வரும் வழியில் ஸ்ரீபெரும்புதூரில் ராமாநுஜருடைய தந்தை யார் மாளிகையில் (அப்போது ராமாநுஜர் பிறக்கவில்லை) சிறிது

நேரம் இளைப்பாறுவது வழக்கமாம், ராமானுஜரின் கேசவ ஸோமாயாஜியார். கி. பி. 1017-இல் ராமானுஜர் பிறக்கும்போது திருக்கச்சிநம்பிக்கு வயது சுமார் இருபத்திரண்டு.

ராமானுஜருக்கும் யாதவப்பிரகாசருக்கும் கருத்து வேற்றுமைகள் தோன்றியபின் திருக்கச்சிநம்பியுடன் ராமானுஜருக்குப் பக்தியும் பழக்கமும் அதிகரித்தன. ராமானுஜருக்குப் பெரியநம்பியின் தொடர்பு ஏற்பட்டதற்கும் திருகச்சிநம்பியே காரணமாவர். யாதவப்பிரகாசர் ராமானுஜருடைய வைபவத்தை அறிந்துகொண்டபின் ஆழ்வார்களின் பக்திக்கொள்கையை விரும்பி மேற்கொண்டாரென்றும், திருக்கச்சிநம்பியின் உதவியால் ராமானுஜரை அடைந்து, வைஷ்ணவராகி ஸ்ரீகோவிந்தஜீயர் என்ற பெயருடன் விளங்கினுரென்றும் சொல்லுகிருர்கள்.

ராமானுஜருக்கு ஆசாரியர் அறுவர் என்றும் அவர்களில் ஒருவர் திருக்கச்சிநம்பி யென்றும் கூறுவது உண்டு.

# 7. ராமானுஜரும் பிரபந்தங்களும்

ஆசிரியர் திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்லிக்கொண் டிருந்தார். சீடரோ அவர் சொன்னதை யெல்லாம் அப்படியே ஏற்றுக்கொள்ள வில்லை. "இதற்குப் பொருள் இப்படியிருக்க லாமோ ? அதற்குப் பொருள் அப்படியிருக்க வேண்டாமா?" என்று இடையிடையே வணக்கமாகக் கேட்டுக்கொண் டிருந்தார். குரு கொஞ்சம் பொறுமை இழந்தவராய், "ஆளவந்தார் இப்படி எல்லாம் பொருள் சொல்லிக் கேட்டறியோம்; நீர் ஏதேதோ விசுவாமித்திர சிருஷ்டி பண்ணுகிறீர்!" என்று சொல்லிப் பாடஞ் சொல்லுவதை நிறுத்திவிட்டார். இந்த ஆசிரியர் ஆளவந்தார் சீடர்களில் ஒருவரான திருமலையாண்டான். ஆசிரியரையும் திருத்தத் துணிந்த இந்தச் சீடர் வேறு யாராகத்தான் இருக்க முடியும், ராமானுஜரைத் தவிர ?

## குரு சீடரை வணங்கினர்

திருமலையாண்டானிடம் பிரபந்தம் கற்றுக்கொள்ளும்படி ராமானுஜருக்குச் சொல்லியிருந்தவர் திருக்கோஷ்டியூர்நம்பிகள் என்ற பெரியார். இவரும் ஆளவந்தாருடைய சீடர். ராமானுஜருடைய ஆசாரியர்களில் ஒருவர்; இவருடைய நுண்ணறிவையும் குணநிச யத்தையும் பல தடவை நன்குகப் பரீட்சித்துப் பார்த்தவர். இவர் திருமாலையாண்டானுக்கும் ராமானுஜருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டதென்று கேள்விப்பட்டதும் தம்முடைய ஊரிலிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கத்திற்கு வந்து விஷயம் தெரிந்துகொண்டு

திருமாலையாண்டனை நோக்கி, "ராமாநுஜர் சொல்லும் விசேஷ அர்த்தங்களில் சிலவற்றை ஆளவந்தார் சொல்ல நான் கேட்டிருக்கிறேனே!" என்றும், "மேதாவியான ராமாநுஜர் உள்ளத்தில் தவருன பொருள் தோன்ருது" என்றும் உறுதி கூறிக் காலட்சேபத்தைத் தொடர்ந்து பூர்த்தி செய்யும்படி வற்புறுத்தினர்.

நாளடைவில் 'ராமாநுஜடைய மேதாவிலாசத்தையும், அவர் பிரபந்தப் பாடல்களுக்குச் சொன்ன நுட்பமான பொருள்களையும் திருமலையாண்டானும் ஒப்புக்கொள்ளத் தொடங்கினர். ஆனல் ஒரு நாள் இவர் சொன்ன பொருளை ஆட்சேபித்த ராமாநுஜர், "ஆளவந்தார் இப்படிச் சொல்லியிருக்க மாட்டாரே!" என்றதும், திருமலையாண்டான் ஆச்சரியமடைந்து, "நீர் என்னுடைய ஆசாரியரை உயிரோடு பார்த்ததும் இல்லையே! அப்படியிருக்க அவருடைய அந்தரங்கம் தெரிந்ததுபோல் இவ்வளவு உறுதியாகப் பேசுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

அதற்கு ராமாநுஜர் பளிச்சென்று, "துரோணுசாரியருக்கு ஏகலைவன்போல் அடியேனும் தங்கள் ஆசாரியருக்கு அந்தரங்கச் சீடன் அல்லவா?" என்று பதில் சொன்னர். ஏகலைவன் என்ற வேடன் துரோணரைப்போல் ஒரு விக்கிரகம் செய்து வைத்துக் கொண்டு அதனிடம் குருவாகவே பக்தி பண்ணி அதன் முன்னிலையில் நாள்தோறும் வில்லும் கையுமாக நின்று பழகி வந்தானென்றும், அப்படிப்பட்ட குருபக்தியின் மகிமையாலும் அபார நம்பிக்கையாலும் அவன் விரைவில் நிகரற்ற வில்வீரனுகப் புகழ் பெற்ருனென்றும் மகாபாரதம் சொல்லுகிற தல்லவா? அப்படியே தாமும் பரம பக்தியால் ஆளவந்தாரை ஆசாரியராகக் கொண்டு பிரபந்தத்தை அறிந்ததாக ராமாநுஜர் சொன்னர். குரு அளவுகடந்த ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து, "நாம் ஆளவந்தாரிடம் கேளாத அர்த்த விசேஷங்களையும் இங்கே கேட்டோம்!" என்று எழுந்து சீடரின் அடிகளில் விழுந்து வணங்கினர்.

விசுவாசமும் உண்டு. இவர் வேதாந்த விவகாரங்களிலே பழகிப் பழகிப் அறிவைத் தீட்டிய கூர்மை கொண்டவர்; ஆழ்வார் பாசுரங்களை ஓதி ஓதி இதயத்திலே பக்தியையும் நம்பிக்கையையும் அன்பையும் கருணையையும் நிறைத்து, மனோபாவத்தைப் பண்படுத்திக்கொண்டவர். அதிநுட்பமான தர்க்க சாமார்த்தியங் களைக் காட்டிலும் பக்தியோடு கூடிய மகா விசுவாசமே இவர் அடைந்த வெற்றிகளுக்கு முக்கியமான காரணமென்று சொல்லலாம்.

ஒரு சமயம் காசியாத்திரை செய்து வந்த பண்டித சிரேஷ்டரும் தர்க்க சாஸ்திர நிபுணருமான யக்ஞமூர்த்தி, சாஸ்திரங்களைச் சுமை சுமையாக எடுப்பித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திலே படை யெடுத்தவரைப் போலத் திடீரென்று தோன்றி ராமாநுஜரைக் கண்டு வாதப்போருக்கு அழைத்தார்.

அதுவும் ஒரு மகாபாரதம்போல் பதினெட்டு நாள் யுத்தமாக நடந்தது. பதினறு நாள்வரை ஒருவருக்கும் வெற்றியும் இல்லை; தோல்வியும் இல்லை. பதினேழாவது தினத்திலும் யக்ஞமூர்த்தி யின் சொல்லம்புகள் ஓய்வு ஒழிவு இல்லாமல் பறந்துகொண்டே இருந்தன.

ராமாநுஜருக்கு உள்ளுக்குள்ளே கொஞ்சம் களைப்புத்தான் அதை முகக்குறியால் உணர்ந்துகொண்ட யக்ஞமூர்த்தி, 'இன்று போய் இனி நாளை வாரும்!' என்று, வெற்றி வீரனுன ராமன் எதிரியைப் பார்த்துச் சொன்னதுபோல் தம்முடைய அபார வித்யாகர்வம் தோன்றச் சொன்னர்.

அன்றிரவு ராமாநுஜர் தமது இஷ்ட தெய்வத்தைத் தியானித்து, 'சுவாமி! நம்மாழ்வாருடைய மகாசித்தாந்தம் நாத முனி, ஆளவந்தார் முதலானவர்களால் அருமையாக வளர்க்கப் பட்டு எத்தனையோ உள்ளங்களுக்கு ஆறுதல் அளித்து வந்தது. இது என்னுல் நாசமடைய வேண்டும் என்பது உன் திருவுள்ளமோ?' என்று விண்ணப்பம் செய்துகொண்டே உணவு கொள்ளாமல் உறங்கிவிட்டார்.

வரதராஜப் பெருமாள் சொப்பனத்திலே தோன்றிப் புன்னகை செய்து, 'என் சித்தாந்தத்திற்கே நான் நாசம் தேடிக்கொள்வேனு? குழந்தாய்! ஒப்பற்ற மகாபண்டிதனை யல்லவா உனக்குச் சீடனுகத் தேடிக் கொண்டுவந்து கொடுத்திருக்கிறேன்!' என்று சொல்லி மறைந்துவிட்டானும்.

மறுநாள் ராமாநுஜர் பகவானுடைய நாமங்களை உச்சரித்துக் கொண்டு சொப்பனத்திலே கண்ட ஆனந்த ரூபத்தை நெஞ்சிலும் கண்ணிலும் கொண்டு, தர்க்க கோஷ்டிக்குப் போனுர். விஜய லட்சுமி குதிகொள்ளும் கம்பீரமான அந்த முகமண்டலத்தைக் கண்டதும் யக்ஞமூர்த்தி வீண் வாதங்களையும் தம் படாடோபங் களையும் விட்டொழித்து எழுந்து வணங்கி, "நான் தோற்றேன்!" என்று சொல்லிச் சீடராறைராம்.

## காதல், பக்திக்காதல் ஆனது

ராமாநுஜருடைய பக்தியும் மகாவிசுவாசமும் பண்டிதர்களை வசீகரித்ததுபோல் மற்றவர்களையும் வசீகரித்து அவருடைய சிஷ்ய சம்பத்தை அதிகரிக்கச் செய்தன. ஒரு நாள் ஒருவர் தம் மனைவி யோடு காவேரி மணலில் நடக்கும்போது தம்முடைய பட்டு உத்தரீயத்தை நடைபாவாடையாக விரித்து, விரித்து அவளை மெள்ள மெள்ள நடத்தி அந்த முகத்திலே வெயில் படாமல் குடை பிடித்துக்கொண்டு போனுராம். அந்தப் புதுமையைச் சில சீடர்கள் காட்ட, ராமாநுஜர் கண்டு அந்தத் தம்பதிகளை அழைத்து, "நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்குப் புருஷர், "இவள் என் மனைவி; நாங்கள் இருப்பது திருவெள்ளறை; உத்தியோகம் செய்வது உறையூர் அரசனிடத் தில்; இப்போது ஊருக்குத் திரும்பிப் போகிருேம்" என்று பதில் சொன்னுர்.

ராமாநுஜர்; "நீர்தாமே உத்தியோகம் பார்க்கிறீர். இவளை யும் அழைத்துக்கொண்டு போவானேன்?" என்று மறுபடியும் கேட்டார்.

அப்போது அவர் அவளைச் சுட்டிக்காட்டி, "அதிசுந்தர கோமளாங்கியல்லவா என்னுடைய மனைவி? இவளை விட்டு எப்படிப் பிரிந்திருப்பேன்? இவள் கண்ணழகைப் பார்த்துக்கொண் டிருந்தாலும் போதுமே! இதற்கும் மேலான அழகுண்டோ?" என்று சொன்னர்.

ராமாநுஜர் சிரித்துக்கொண்டே, "ஆம், இதற்கும் மேலான அழகைக் காட்டினுல் கொள்வீரோ?" என்றுர். அவர் சம்மதிக்க, "வாரும்" என்று அழைத்துவந்து திருவரங்கத்துச் செல்வரை வணங்கச் செய்து;

"........என் அரங்கத்(து) இன்னமுதர்
குழலழகர், வாயழகர் கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூஅழகர், எம்மானுர்!........"

(இன்னமுதர்—இனிய அமுதம் போன்றவர். குழல் அழகர்—சுருண்ட ரோம அழகு வாய்ந்தவர். புல்லாங்குழலோடு கூடிய அழகு வாய்ந்தவர். கொப்பூழ்—நாபி, தொப்புள். கமலம்—தாமரை. எம்மான்—எமது சுவாமி.]
என்பது போன்ற பிரபந்தப் பாசுரங்களை உருக்கமாகப் பாடிப் பொருளும் காட்டினுர்.

அப்போது அந்த விக்கிரகம் - என்ன ஆச்சரியம்! – ஒரு ஜகன் மோகன ஸ்வரூபமாக வளர்ந்து வருவதுபோலத் தோன்றியது. அந்தக் கண்ணழகுக்கும் வாயழகுக்கும் முடியழகுக்கும் ஈடாக ஒன்றுமே இருக்க முடியாதென்று துணிந்து, வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருந்தார் அந்த உத்தியோகஸ்தர்.

வேடர் குலத்தில் பிறந்த இவரே பின்னுளில் பிள்ளையுறங்கா வில்லிதாசர் என்ற பிரபலமான பெயரோடு ராமாநுஜருடைய பிரிய சீடர்களில் ஒருவரானுர். பொன்னுச்சி என்ற இவர் மனைவியும் பாகவத தருமத்தை உள்ளபடி அநுஷ்டித்துப் பேரும் புகழும் பெற்ற உத்தமிகளில் ஒருத்தியானுள்.

### திக் விஜயமும் தேக வியோகமும்

ராமாநுஜருடைய தேச யாத்திரையும் திக்விஜயங்களும் அறிவையும் அநுபவத்தையும் வளர்த்ததுபோல் பக்தி விசுவாசங்

களையும் தன்னம்பிக்கையையும் கருணையையும் சமுத்திரம்போலப் பெருகச் செய்தன. ராமாநுஜர் காஷ்மீரத்திலுள்ள ஸ்ரீநகரம் வரை சென்று ஆழ்வார் கொள்கைகளை விதைத்து வந்தார் என்றும், மைசூர் ராஜ்யத்தில் பல வருஷங்கள் தங்கி அரசனையும் பிறரையும் வைஷ்ணவர்கள் ஆக்கினரென்றும் குருபரம்பரைகள் தெரிவிக்கின்றன.

இவர் நூற்றிருபது வயது வாழ்ந்தார் என்பது வைஷ்ணவர்களின் அபிப்பிராயம். மரணம் நெருங்கிவிட்டதை அறிந்துகொண்டதும் பக்கத்திலுள்ள சீடர்களை நோக்கி, "நீங்கள் பகவானையே சரணாகதி பண்ணியிருப்பதால், உங்கள் ஆத்ம யாத்திரையைக் குறித்தாவது தேக யாத்திரையைக் குறித்தாவது கவலைப்பட வேண்டாம்" என்றும், "கைங்கர்யம் ஒழியப் புருஷார்த்தம் இல்லை; பாகவத அபசாரம் ஒழிய மோட்ச விரோதம் இல்லை!" என்றும் உபதேசித்துவிட்டுக் கோயில் உத்தியோகஸ்தர்களையும் வேலைக்காரர்களையும் மற்றச் சீடர்களையும் கைகூப்பி வணங்கி, "நான் தெரிந்தோ தெரியாமலோ எந்தக் காலத்திலாவது செய்கையாலும் சொல்லாலும் எண்ணத்தாலும் உங்களுக்கு அதிருப்தி விளைவித்திருந்தால் மன்னிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

அவர்கள் எல்லோரும் நடுங்கி, "ஸ்ரீரங்கநாதனிடத்தில் குறையிருந்தால் அல்லவா தங்களிடத்திலும் இருக்க முடியும்?" என்று கதறினார்கள். கடைசியாக ராமாநுஜர், "திவ்யப்பிரபந்தங்களைப் பொருளோடு ஓதுவதும் ஓதுவிப்பதும் விசேஷ கைங்கர்யம்" என்று உபதேசித்துவிட்டுச் சீடர்கள் உபநிஷத வாக்கியங்களையும் பிரபந்தங்களையும் கோஷிக்கக் கேட்டுக்கொண்டே தேக வியோகமானார்.

## ரூப சம்பத்தும் குண சம்பத்தும்

ராமாநுஜர் சிவந்து, நெடியராய், ஆஜானுபாகுவாய், ஸர்வ லட்சண சம்பன்னராக இருந்தாரென்றும், அவருடைய வடிவழகும் நடையழகும் கண்ணுக்கு இனியனவாய்ச் சீடர்களையும் பிறரையும் குளிரப் பண்ணின என்றும் குருபரம்பரைகள் சொல்லுகின்றன.

உண்மையில், ராமாநுஜருடைய குண சௌந்தரியந்தான் அந்தப் பொன்மேனியிலே பிரதிபலித்து எத்தனையோ உள்ளங்களை வசமாக்கி மலரச் செய்தது என்றும் சொல்லவேண்டும்.

ராமாநுஜர்மீது சீடர்களுக்குப் பேரன்பு இருந்ததென்றால், அவர்கள்மீதும் அவருக்குப் பேரன்பும் ஒப்பற்ற கருணையும் இருந்தன என்பது தெரிகிறது. ராமாநுஜப் பெருவெள்ளம் என்று பிரசித்தி பெற்ற இவருடைய சிஷ்ய சமூகத்தில் சகல ஜாதிக்காரர்களுக்கும் இடமுண்டு; ஸ்திரீகளுக்கும் இடம் உண்டு. இவர் வடமொழிக்குச் சமமான பதவியைத் தமிழுக்கும் கொடுத்து, 'விஷய கௌரவந்தான் முக்கியம்' என்று வற்புறுத்தியதோடு, தமிழர்கள் பேசும் பாஷையிலிருந்த பிரபந்தங்களை வேதமாகவே போற்றி விளங்கச் செய்தார்.

ஜாதி முதலான பேதம் இல்லாமல் எல்லாருக்கும் மோட்ச வாசலைத் திறந்து வைக்கவேணும் என்று துணிந்து, ஏழைகளும் பணக்காரர்களும் பண்டிதர்களும் பாமரர்களும் ஸ்திரீகளும் புருஷர்களும் பாலர்களும் விருத்தர்களும் பிராமணரும் மற்ற வகுப்பினரும் அவனுடைய குழந்தைகள் என்றும், அவன் குலம் முதலியவற்றைப் பாராமல் குணத்தையும் பக்தியையுமே மதிக்கிறான் என்றும், தமது ஒழுக்கத்தாலும் உபதேசங்களாலும் விளக்கிக் காட்டினார்.

வைசியரான திருக்கச்சிநம்பிகளையும் தம்முடைய ஆசாரியர்களில் ஒருவராகக் கொண்டு அவரைத் தம்முடைய மனைவி, 'சூத்திரர்' என்று எண்ணி நடந்ததைக் காரணமாகக் காட்டி அவளை விலக்கித் துறவு பூண்டது, வாழ்க்கையின் தொடக்கத்திலேயே இவருக்கு உயர்ந்த லட்சியங்கள் இருந்தன என்பதைத் தெரிவிக்கிறது.

இவருடைய ஒப்பற்ற கருணை, பஞ்சமர்களையும் உயர்த்த முயன்றது; ஜைனர்களையும் வைஷ்ணவர்கள் ஆக்கியது. இவர் ஒரு முஸ்லிம் ஸ்திரீயையும் அவளுடைய சகோதரனையும் வைஷ்ணவ சமயத்தில் சேர்த்துக்கொண்டதாகச் சில குருபரம்

பரைகள் சொல்லுகின்றன. இப்படிப்பட்ட ஆச்சரியமான அன்பும் கருணையும் இவருடைய ரூப சௌந்தரியத்திற்கு ஆச்சரியமான வசீகர சக்தியைக் கொடுத்திருக்க வேண்டும்.

ராமாநுஜருடைய வசீகர சக்தி உத்தமர் உள்ளங்களில் அறியாமை இருளைப் போக்கி ஒளி காட்டி வழி காட்டியது; வேஷக் காரர்களையும் மோசக்காரர்களையும் நடுங்கச் செய்தது; குற்றத்தை உணர்ந்து பணிவோடு சார்ந்தவர்களுக்கும் அருள் செய்தது.

இப்படி யெல்லாம் செய்த அந்த வடிவழகையும் நடை யழகையுங்கூட இதோ பாருங்கள் இந்தக் கவிதைக் கண்ணுடியில்:

**உதிப்பன உத்தமர் சிந்தையுள்;**
**ஒன்னலர் நெஞ்சம் அஞ்சிக்**
**கொதித்திட மாறி நடப்பன;**
**கொள்ளைவன் குற்றம் எல்லாம்**
**புதித்தஎன் புன்கவிப் பாவினம்**
**பூண்டன; பாவு தொல்சீர்**
**எதித்தலை நாதன் இராமா**
**நுசன்தன் இணை அடி யே.**

[உதிப்பன – உதயம் செய்வன. ஒன்னலர் – பகைவர். கொள்ளை - மிகுதியான. வன்குற்றம் – கடுங்குற்றம். புன்கவி - அற்பமான கவி. பாவினம்-பாடல்களின் கூட்டம். பாவு-பரவிக் கொண்டிருக்கும். தொல்-பழைய. எதித்தலை நாதன்–சந்நியாசி களுக்குத் தலைவரும் நாதருமாயிருப்பவர். இணையடி-ஒன்றுக் கொன்று ஒப்பான சேர்த்தி அழகையுடைய திருவடிகள்.]

திசையெங்கும் பரவிக்கொண் டிருந்தனவாம், யதிராஜா என்ற புகழ் பெற்ற ராமாநுஜருடைய கல்யாண குணங்கள். அந்தக் குண சௌந்தரியங்களோடு கூடிய ரூபசம்பத்து அப்படியே உதயம் செய்கிறதாம் அவர் அருளுக்கு இலக்கான உத்தமர் சிந்தையில். இரண்டு அடிகளும் இரண்டு சூரியர்களைப்போல் பிரகாசித்து உதவுகின்றனவாம். அந்தப் பாதங்கள் மாறி மாறி

அடியிட்டு வரும்போதே துவேஷபுத்தி உள்ளவர்களின் நெஞ்சு அஞ்சிக் கொதிக்கிறதாம்.

'இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த திருவடிகள், குற்றங் களையே ரத்தினங்களைப்போல் பதித்து வைத்திருக்கும் என் னுடைய அற்பமான கவிதையையும் ஆபரணமாக அணிந்து கொண்டன!' என்று பெரும் பணிவோடு பேசுகிறுர் அமுதனுர். இந்த விதமாக ராமாநுஜர் குணுதிசயத்தைப் பிரபந்தங்களே பெரும்பாலும் உருவாக்கின என்று சொல்லலாம்.

* * * *

'ராமாநுஜர் தமிழில் ஒரு நூல்கூட எழுதவில்லை; வட மொழியில் ஒன்பது நூல்கள் இயற்றியிருக்கிருர். தம்முடைய நூல்களில் ஆளவந்தாரையும் புகழ்ந்து பேசுகிருர். ஆழ்வார்களையும் திவ்யப் பிரபந்தங்களையும் குறித்துத் தமது வட மொழி நூல்களில் பிரஸ்தாபிக்க வில்லை. இதனுல் தமிழ்ப் பிரபந்தங்களை இவர் தமது விசிஷ்டாத்வைதத்திற்கு இன்றி யமையாத வழிகாட்டியாகக் கொண்டார் என்பது பொருத்தமில்லை என்று கருதுவோரும் இந்நாளில் உண்டு.

ராமாநுஜரால் புகழப்பெற்ற ஆளவந்தாரே தம்முடைய தோத்திரத்தில் ஆழ்வாருக்கு ஒரு வணக்க சுலோகம் இயற்றி யிருக்கிருர். ராமாநுஜருடைய அதிமுக்கிய அந்தரங்க சீடரான கூரத்தாழ்வானும் ஆழ்வாரைக் கொண்டாடிப் பேசுகிருர். ஆசாரி யருக்கும் சீடருக்கும் இடையிலுள்ள ராமாநுஜருக்கு மாத்திரம் தமிழ்ப் பிரபந்தங்களில் ஈடுபாடு இல்லை யென்று துணிவது எவ்வாறுபொருந்தும்?

'இதுகொண்டு பாஷ்யகாரர் (ராமாநுஜர்) ஸூத்ர வாக்கி யங்களை (பிரம்மஸூத்ர வாக்கியங்களை) ஒருங்கவிடுவர்' என்று திருவாய்மொழி வியாக்கியானம் தெரிவிக்கிறது. ஆழ்வார் பாசுரங்களையும் கொள்கைகளையும் அநுசரித்தே ராமாநுஜர் வட மொழியில் தம்முடைய 'பிரம்மஸூத்ர பாஷ்யம்' என்ற ஸ்ரீபாஷ் யத்தை எழுதினுர் என்பது வெளிப்படை. ராமாநுஜர் எந்த

எந்த இடத்தில் ஆழ்வார் திருவாக்கை அநுசரித்து ஸ்ரீபாஷ்யம் எழுதியுள்ளார் என்பதைக் காஞ்சீபுரம் மகாவித்வான் ஸ்ரீ அண்ணங்கராசாரியார் ஒரு தனிப் புத்தகத்தில் விவரித் திருக்கிருர்.

அந்தக் காலத்திலே பிறர் கொள்கைகளை மறுத்து வட மொழியில் தாம் எழுதிய பிரம்மசூத்திர பாஷ்யத்திலே ஆழ்வார் களின் தமிழ்மறையை ஆதாரமாகக் காட்டினுல் பிற சித்தாந்தி களும் மத வாதிபரும் ஒப்புக்கொள்ளமாட்டார்களே என்றுதான் ராமாநுஜர் ஆழ்வார்களை வெளிப்படையாகக் குறிப்பிடவில்லை. அகில இந்தியப் பொதுநோக்குடன் ஆதிசங்கரரும் ஸ்ரீமத்வரும் எழுதிய நூல்களிலும் வடமொழி உபநிஷத வாக்கியங்கள் மேற் கோளாகக் காட்டப்பெற்றுள்ளன.

ராமாநுஜர், ஸ்ரீபாஷ்யத்தின் பொதுநோக்கினை உள்ளத்திற் கொண்டு ஆழ்வார்களையும் தமிழ்ப்பிரபந்தங்களையும் குறிப்பிட வில்லை யென்ருலும், அவர் பாடிய தமிழ்ப் பாடல்கள் சில, தமிழ்ப் பிரபந்தங்களுக்குத் தனியனுக அமைந்திருக்கின்றன. இவற்றுள், 'வாழி பரகாலன்' என்று தொடங்கும் பெரிய திருமொழித் தனியன் பிரசித்தமானது.

ஆசாரிய முதல்வரான நாதமுனி, நாலாயிர திவ்யப்பிரபந் தத்தை ஆழ்வார் அருளால் திருக்குருகூரில் பெற்று வெளியிட்டார் என்பதும், திருவாய்மொழிக்கு, 'பக்தாம்ருதம்' என்று தொடங்கும் சுலோகம் ஒன்றை வடமொழித் தனியனுக அமையுமாறு எழுதி யுள்ளார் என்பதும் பிரசித்தமான செய்திகள். இப் பெரியார் தொடங்கி வைத்த பக்திமதப் பேரியக்கத்தையே இன்றி யமையாத பல சீர்திருத்தங்கள் செய்து நாடெங்கும் நிலை நிறுத்திப் பரவச் செய்தார் ராமாநுஜர் என்பதை அறியாதார் யார்?

எல்லாவற்றுக்கும் மேலாக, 'இராமாநுச நூற்றந்தாதி' இயற்றியவரும் ராமாநுஜர் காலத்தவருமான திருவரங்கத்து அமுதனுர் தமது அந்தாதியின் முதற்பாட்டிலேயே ராமாநுஜரை,

'பாமன்னு மாறன்
அடிபணிந்(து) உய்ந்தவன்'
[மாறன்–நம்மாழ்வார்.]

என்று குறிப்பிடுவதே ராமாநுஜருடைய ஆழ்வார்பக்தியை வெளியிடப் போதுமான சான்றல்லவா?

முதலாழ்வாருள் முதலாழ்வா ராகிய பொய்கைப்பிரான் வேதாந்தப் பொருளையும் செந்தமிழையும் கூட்டி உபய வேதாந்தத் திருவிளக்கை ஏற்றிவைத்தார் என்றும், அந்த விளக்கைத் தம் திருவுள்ளத்தில் ராமாநுஜர் ஏற்றிக்கொண்டாரென்றும், 'இராமா நுச நூற்றந்தாதி'யின் எட்டாவது பாசுரம் தெரிவிக்கிறது.

பூதத்தாழ்வார் ஞானம் என்னும் நிறைவிளக்கை ஏற்றி வைத்தாரென்றும், அதுவும் ராமாநுஜர் நெஞ்சிலே ஒளி காட்டிய தென்றும் அமுதனார் தெரிவிக்கிறார். பேயாழ்வாரைத் 'தமிழ்த் தலைவன்' என்று சிறப்பித்துப் பேசும் அமுதனார் இந்த ஆழ்வாரது 'பொன்னடி போற்றும் இராமாநுசன்' என்பதை ராமாநுஜருக்கு ஒரு பெருமையாகக் குறிப்பிடுகிறார்.

திருப்பாணாழ்வாரின் பிரபந்தத்தை, 'நான்மறைச் செம் பொருள் கூறும் செந்தமிழ்' என்பர் அமுதனார். இந்தப் பாண் பெருமாளையும் அடிபணிந்து உயர்ந்தவர் ராமாநுஜர் என்பது அமுதனார் கருத்து. திருப்பாணரைப்போல் திருமழிசையாழ்வாரும் ராமாநுஜருடைய பக்திக்கு உரியவரானார் என்றும் அமுதனார் தெரிவிக்கிறார்.

தொண்டரடிப்பொடி யாழ்வாரின் திருமாலையை அமுதனார், 'செந்தமிழில் பெய்யும் மறைத்தமிழ்மாலை' என்பர். 'இந்த ஆழ்வாரின் திருவடிகளைச் சரணமாக அடைந்த மெய்யன் இராமாநுசன்' என்று அமுதனார் கூறுவதால், தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமறைத் தமிழும் ராமாநுஜருக்கு வழி காட்டிய ஒரு பக்தி விளக்கே யாகும் என்பது திண்ணம்.

குலசேகரரிடம் ராமாநுஜருக்குள்ள பக்தியையும் அமுதனர் குறிப்பிடுகிருர். குலசேகரர்மீது ராமாநுஜருக்குள்ள பக்திக் காதலுக்கு,

இன்னமுதம் ஊட்டுகேன்
இங்கே வா பைங்கிளியே

என்று தொடங்கும் தனியனும் சான்று தருகின்றது.

பல்லாண்டு பாடிய பட்டர்பிரானும் ராமாநுஜருக்கு ஒரு வழி காட்டியவர் என்றும் அமுதனர் குறிப்பிடுகிருர். 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் அருளால் வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன் என்னும் மாமுனியே' என்ற வாக்கில் அமுதனர் தாம் கண்ணுரக் காணும் ராமாநுஜர் வாழ்க்கையின் ஒரு கோணத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிருர் எனலாம்.

ஆண்டாள் அருளால் ராமாநுஜர், மறை தாழ்ந்து கலிசூழ்ந்த காலத்திலே வாழ்ந்து ஆண்டாள் முதலான தமிழ்ப் பெருந் தொண்டர்கள் காட்டும் வழியே சென்று வேத நெறியையும் வேத வாழ்வையும் நிலைபெறச் செய்தார் என்ற குறிப்பையும் அமுதனர் வாக்கிலே காண்கிறேம்.

திருமங்கையாழ்வாரைத் 'தண் தமிழ் செய்த நீலன்' என்று கூறி இந்த ஆழ்வாருக்கு இனியர் ராமாநுஜர் என்கிருர். எல்லா ஆழ்வார்களுக்கும் மேலாக நம்மாழ்வாரைக் குறிப்பிட்டு இந்த ஆழ்வாரின் வாக்கே ராமாநுஜருக்குத் தனிப்பெரு நெறியைக் காட்ட உதவியது என்பதையும் உய்த்துணர வைக்கிருர் அமுதனர்.

நம்மாழ்வாரை, 'மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு உலகில்வரும் சடகோபன்' என்று அமுதனர் கூறுவது, இவருக்கு உறுதுணையும் 'உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவு'ப வருமான ராமாநுஜரின் அபிப்பிராயம் என்றே கருதத்தக்க நிலையில் அமைந்திருக்கிறது 'இராமாநுச நூற்றந்தாதி'யின் பதினெட்டாவது பாட்டு.

அடுத்த பாட்டில் திருவாய்மொழியைச் 'செந்தமிழ் ஆரணம்' என்று போற்றுகிருர் அமுதனுர். இவ்விதமாக இதை உலகறியச் செய்தவர் ராமானுஜர் என்ற குறிப்பையும் இப்பாட்டில் காணலாம்.

இந்த அந்தாதியின் இருபதாம் பாட்டில், 'தென்குருகைப் பிரான் அமுதத் திருவாய் ஈரத் தமிழின் இசை' நாதமுனி காலம் தொட்டு ஆசாரியர்களை வசீகரித்துவந்து ராமானுஜரையும் ஆட்கொண்டிருக்க வேண்டும் என்ற குறிப்பையும் காண்கிறோம்.

'திக்குற்ற கீர்த்தி இராமாநுசனை' நேரில் கண்டு நெருங்கிப் பழகும் பேறுபெற்றிருந்த அமுதனுர் இப்படியெல்லாம் கூறி இருந்தும் ராமானுஜர் தமிழ்ப்பிரபந்தங்களின் தொடர்பு இல்லாமலே தம் கொள்கைகளை நிலைநிறுத்தியிருக்கக் கூடும் என்று கருதுவது தவறே யாகும்.

ராமானுஜரை, 'இராமாயணம் என்னும் பத்திவெள்ளம் குடி கொண்ட கோயில்' என்பர் அமுதனுர். ஆழ்வார்களின் செந்தமிழாகிய பக்திவெள்ளமே ராமானுஜருக்கு ராமாயணத்தை யும் பக்திவெள்ளமாகக் காட்டியிருக்க வேண்டும். அந்தாதியின் அறுபத்து நாலாவது பாட்டில்,

பண்தரு மாறன்
பசுந்தமிழ் ஆனந்தம்
பாய்மதமாய்
விண்டிட எங்கள்
இராமா னுசமுனி
வேழம், மெய்ம்மை
கொண்டநல் வேதக்
கொழுந்தண்டம் ஏந்திக்
குவலயத்தே
மண்டிவந்து ஏன்றது

என்று வருவதைப் பாருங்கள்.

அமுதனர் வாக்கிலிருந்து, 'திருவாய்மொழியின் மணம் தரும் இன்னிசை' ராமாநுஜர் வாதங்களின் அடிப்படை நாதம் மட்டுமல்ல, இவர் வாழ்க்கையின் ஜீவநாதமும் ஆகும் என்றே துணியலாம்.

'கீதையின் செம்மைப் பொருள் தெரியப் பாரினில் சொன்ன இராமாநுச'ன் என்று அந்தாதியின் அறுபத்தெட்டாவது பாடல் தெரிவிக்கிறது. இந்தச் செம்மைப்பொருளுடன் வேதாந்தத்தின் செம்மைப்பொருளும் தெரிந்துகொண்டு ஊரறிய நாடறியச் சொல்வதற்கு ராமாநுஜருக்கு வழிகாட்டியவை பிரபந்தங்களே என்பது அமுதனரின் தேர்ந்த கருத்து.



## 8. கூரேசன் வெற்றி

'அந்த மடம் எங்கே? எங்கே?' என்று விசாரித்துக்கொண்டு வருகிறார்கள் ராஜ சேவகர்கள். விஷயத்தை அறிந்துகொண்ட சீடர் ஒருவர், குரு நீராடிக்கொண் டிருக்கும்போதே, அவருடைய காவியாடையைத் தாம் தரித்துக்கொண்டு அந்த வஸ்திரம் இருந்த இடத்தில் தம்முடைய வெள்ளை வஸ்திரத்தை வைத்துவிட்டு, ராஜ சேவகர்களோடு புறப்படுகிறார். இந்தச் சீடரைத் தொடர்ந்து போகிறார் குருவுக்கும் குருவான கிழவரும்.

நடந்ததை அறிந்துகொண்டதும் குரு, 'ஐயோ! அவர்களுக்கு என் நிமித்தமாக என்ன ஆபத்து வந்துவிடுமோ?' என்று கலங்குகிறார். எனினும் ஆழ்வார்களின் ஞானபொக்கிஷத்தைக் காப்பாற்றி அபிவிருத்தி செய்யவேண்டியது அவசியமல்லவா? அரசனுக்கு அவர்கள்மீது என்ன கோபம் இருக்க முடியும்? கடைசியாக மற்றவர்கள் வற்புறுத்துவதற்கு இணங்கி அந்த வெள்ளை வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டே ஸ்ரீரங்கத்தை விட்டுப் புறப்பட்டுச் சில சீடர்களோடு குரு மைசூரை நோக்கிப் போய்விடுகிறார்.

இப்படித் தப்பிப் போகிறவர் ராமாநுஜர்தான். இவரைக் காப்பாற்றிவிட வேணுமென்று ராஜ கோபத்திற்கு இலக்காகப் போகிறவர்கள் இவருடைய சீடரான கூரேசனும், குருவான பெரியநம்பியுமே.

ராமாநுஜருடைய செல்வாக்கும் கொள்கைகளும் அந்தக் காலத்துச் சோழராஜாவுக்குப் பிடிக்கவில்லை. அவன் தன்னுடைய

அதிகாரத்தால் அந்தப் 'புதிய மத'த்தைப் பரவ விடாமல் அடக்கி விட வேணுமென்று தீர்மானித்தான். எனவே, ராமாநுஜர் கொள்கைகளுக்கு விரோதமான சில கொள்கைகளை ஏட்டில் எழுதி வைத்துக்கொண்டு வித்வான்களிடம் கையெழுத்து வாங்கி வந்தான்; வைஷ்ணவர்களையும் நிர்ப்பந்தித்துக் கையெழுத்து வாங்கத் தொடங்கினான்.

அப்போது ராமாநுஜ கோஷ்டியைச் சேர்ந்த நாலூரான் என்பவன் அரசனுடைய மந்திரிகளில் ஒருவனாயிருந்தான். அவன் தன் ராஜபக்தியைக் காட்டுவதற்கு அதுதான் சந்தர்ப்பமென்று, 'மகாராஜாவே! தங்கள் கொள்கை நிலைபெற வேண்டுமென்றால், ராமாநுஜர் கையெழுத்தையும் வாங்கிக்கொள்ள வேண்டியது தான். யதிராஜா என்று சொல்லப்படும் அவரே வித்வான் களுக்கும் ராஜா' என்று சொல்லி வைத்தான்.

## குருவுக்காகக் கண்ணைக் கொடுத்தது

**சோ**ழனுடைய சபாமண்டபத்தை அடைந்த கூரேசனும் பெரியநம்பியும் அந்தச் சபையில் தங்கள் கொள்கையை விளக்கிச் சொல்ல முயன்றார்கள். அரசனோ விவகாரத்திற்கு இடம் கொடாமல், "நீங்கள் மகாவித்வான்கள். எந்தக் கட்சியையும் எளிதில் சிருஷ்டிக்கக்கூடியவர்கள்; அழிக்கக்கூடியவர்கள்" என்று சொல்லி, ஓலையை நீட்டி, "இந்தக் கொள்கையை ஒப்புக்கொண்ட தாகக் கையெழுத்துப் போடுங்கள்" என்று நிர்ப்பந்தித்தான்.

கூரேசன் அந்த முறையையும் கொள்கையையும் மறுத்துப் பரிகசித்தார். அதே சமயத்தில், "இவரல்லர் ராமாநுஜர்; ஆனால் ஏறக்குறைய அவருக்குச் சமானந்தான்" என்று நாலூரான் தெரிவித்தான்.

உடனே அரசன் கோபாவேசங்கொண்டு, "இவர்கள் கண் களைப் பிடுங்கிவிடுங்கள்" என்று, அருகே யமகிங்கரர்களைப் போல் இருந்த சில வேலைக்காரர்களுக்கு உத்தரவு செய்தான். அவ்வளவிலே கூரேசனும் அரசனைக் கடைசியாக ஒரு பார்வை

பார்த்துவிட்டு, "கொடுங்கோலனுகிய உன்னைப் பார்த்த கண்கள் எனக்குத்தான் ஆகுமா?" என்று தாமே கண்களைப் பிடுங்கி எறிந்துவிட்டாராம். பின்பு பெரியநம்பியைக் கிங்கரர்கள் பிடித்துக்கொண்டு போய் அரசனுடைய கொடுமையான உத்தரவை நிறைவேற்றினுர்கள்.

## பகவானையும் தியாகம் செய்தது

வயது முதிர்ந்து மிகவும் தளர்ந்திருந்த பெரியநம்பி வேதனை பொறுக்க முடியாமல் தேக வியோக மானுர். கூரேசனே கொள்கைக்காக உயிர்விடும் பாக்கியம் தமக்குக் கிடைக்க வில்லையே யென்று கிலேசித்துக்கொண் டிருந்தார். அப்போது சில வைஷ்ணவர்கள் அவசியமான சிகிச்சை செய்து அவரை ஸ்ரீரங்கத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அங்கே ஒரு நாள் இந்தத் தியாகமூர்த்தி ஸ்ரீரங்கநாதனைச் சேவிக்கவேணு மென்று கையாலே தவழ்ந்துகொண்டு போக, வாசல் காப்பவர் தடுத்து, "ராமாநுஜருடைய சீடர்களுக்கு உள்ளே பிரவேசிக்க அனுமதி கிடையாது; அந்த உறவை விட்டுவிட்டோமென்று நீர் ஒப்புக்கொண்டால், சேவிக்கவிடுகிறேம்!" என்று சொன்னுர்கள். கூரேசனே காதைப் பொத்திக்கொண்டு, "ராமாநுஜருடைய உறவை விட்டு அடையக்கூடிய பெருமாளுடைய உறவும் நமக்குத் தேவையில்லை!" என்று திரும்பிவிட்டார்.

## பூர்வ விருத்தாந்தம்

இப்படிப்பட்ட மகத்தான தியாகங்களுக்கென்றே இந்த வாழ்க்கை ஆரம்பத்திலிருந்து அர்ப்பணம் செய்யப்பட்டதுபோலத் தோன்றுகிறது. இவர் செல்வத்தாலும் செல்வாக்காலும் கூரம் என்ற பிரதேசத்தின் தலைவராக விளங்கியதால் கூரேசனென்று அழைக்கப்பெற்றுர்.

வைஷ்ணவர் ஆவதற்கு முன்னமே சாஸ்திரங்களில் மகா நிபுணராகவும் சிறந்த வள்ளலாகவும் இருந்தார். தந்தையார்

இவருக்குக் கல்யாணம் செய்ய எத்தனிக்க, இவர் மறுத்துப் பிரமசரிய விரதத்திலேயே காலங் கழித்துத் தமது வாழ்க்கையை வித்தைக்கும் வள்ளன்மைக்கும் அர்ப்பணம் செய்யவிரும்பினர்.

ஆனல் ஒரு பிராமணப்பெண்ணின் ஜாதகத்தைப் பார்த்த சோதிடர்கள் அந்தப் பெண்ணை மணம் செய்கிறவனுக்கு அப்போதே மரணம் என்று சொன்னதால் அவள் எவ்வளவோ படித்தவளாயிருந்தும் அவளை ஒருவரும் கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லை யென்றும், சமூகம் பழிக்குமென்று அஞ்சி அவளுடைய உற்ருரும் தாய் தந்தையருங்கூட அவள் இருப்பதைவிட இறப்பதே நல்லதென்று துணிந்தார்களென்றும் கேள்விப்பட்டுக் கூரேசன் தமது பழைய தீர்மானத்தை மாற்றிக் கொண்டு அந்த ஸ்திரீ ரத்தினத்தின் உயிரைக் காப்பாற்றுவதற்காக அவளைத் தாமே கல்யாணம் செய்துகொண்டார். பிறகு அவன் தமக்கும் தம்முடைய மனைவிக்கும் ஜீவனத்திற்காகக் கொஞ்சம் சேமித்து வைத்துக்கொண்டு பாக்கி ஐசுவரியங்களை எல்லாம் பாத்திரம் அறிந்து விநியோகம் செய்தார்.

திருக்கச்சிநம்பிகள் மூலமாகத்தான் இவர் முதல் முதல் ஆழ்வார்களின் கொள்கைகளைக் குறித்துக் கேள்விப்பட்டார். அவருடைய புத்திமதிக்கிணங்க ராமாநுஜரை ஆசாரியராக அடைந்து,

**'எந்தாய்! இனியான் உனை என்றும் விடேனே'**

*[எந்தாய்-என் அப்பனே. விடேன்-விடமாட்டேன்.]*

*என்ற சங்கற்பத்தோடு சாஸ்திர ஆராய்ச்சியும் சமய ஆராய்ச்சியும் செய்து வந்தார்.*

*ராமாநுஜர் காஞ்சீபுரத்திலிருந்து ஸ்ரீரங்கத்திற்குப் போகையில் கூரேசனும் கூடப் போனர். நாளடைவில் இவருடைய வைராக்கியம் முதிர்ந்து வந்தது. தம்முடைய ஊரில் முன்பு சேமித்து வைத்திருந்த உடைமைகளையும் பாகவதர்களுக்கு விநியோகம் செய்துவிட்டு மனைவியோடு ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பினர்.*

வரும்வழியிலே மதுராந்தகத்திற்குச் சமீபமாக இருந்த காட்டில், ஆண்டாள், "இங்கே கள்ளர் பயம் உண்டோ?" என்று கேட்டாள். அப்போது கூரேசன், "மடியில் கனமிருந்தால், வழியில் பயமிருக்கும்" என்று பதில் சொல்ல, அவளும் காதிலே ரகசியமாக, "ஆமாம், என் மடியிலே ஒரு தங்கக் கிண்ணம் இருக்கிறது" என்று ஒப்புக்கொண்டாளாம். "அதை ஏன் எடுத்து வந்தாய்?" என்று கேட்டதற்கு, "வெகு காலமாகத் தங்கப் பாத்திரத்தில் சாப்பிட்டுக்கொண் டிருந்த தங்களுக்கு இலையில் சாப்பிடுவது சரியாயிருக்குமா? எனவே, இந்த வட்டிலை மாத்திரம் கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள்.

கூரேசன் சிரித்துக்கொண்டு, "நாளை நாமே பிச்சையெடுத்துச் சாப்பிட வேண்டிய நிலையில் இருக்கும்போது, இந்தப் பாத்திரமும் வேணுமா ? உன்னுடைய சாஸ்திர ஞானமும் வைராக்கியமும் இவ்வளவுதானா ?" என்று அந்தப் பொன்வட்டிலை வாங்கி வீசி எறிந்துவிட்டு, "இனி நீ பயமில்லாமல் நடக்கலாம், வா" என்று சொன்னார். இந்தப் பரம பாகவத தம்பதிகளின் குணதிசயத்தை எவ்வளவு அழகாக வெளியிடுகிறது இந்தச் சிறு நிகழ்ச்சி.

இதை இன்னும் மறவாமல் போற்றும் வைஷ்ணவ சமூகம், 'பொன்வட்டில் பறித்தெறிந்த புகழுடையோன் வாழியே!' என்று கூரேசனை வாழ்த்திக்கொண் டிருக்கிறது. உண்மையில் இவருடைய ஞான பக்தி வைராக்கியங்களுக்குக் கொஞ்சமும் தாழ்ந்ததன்று இவருடைய தேவியான ஆண்டாளின் குண அழகு. ஸ்ரீபாஷ்யம் செய்யும்போது ராமாநுஜருக்கு விசேஷ உதவி செய்த இந்தக் கூரேசனுடைய சந்தேகங்களையும் போக்கக்கூடிய சக்தி இவளிடம் காணப்பட்டதென்று சொல்லுகிறார்கள்.

கூரேசன் தேவியோடு ஸ்ரீரங்கத்தை அடைந்து,

'அற்றேன் வந்தடைந்தேன்;
அடியேனை ஆட்கொண் டருளே'

[அற்றேன்–நான் எல்லா உடைமைகளையும் அற்றுத் தீர்ந்தவனாய்.]

என்று ராமநுஜர் அடிகளில் விழுந்து வணங்கினர். இவர் ஐசுவரியத்தைத் தியாகம் செய்து ஐசுவரிய கர்வத்தை அறவே ஒழித்துக்கொண்டதோடு,

'தொண்டக் குலத்திலுள் ளீர்! வந்(து)
அடிதொழு(து), ஆயிர நாமம்சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து, பல்
லாண்டுபல் லாயிரத் தாண்(டு)என்மினே'

[தொண்டக்குலம்–தொண்டர்கள் என்ற குலம். பண்டைக் குலம்--பழைய ஜாதியாகிய வர்ணபேதம்.]

என்ற பெரியார் வாக்கின்படி ஆசாரியருக்கும் பாகவதர்களுக்கும் தொண்டு செய்வதிலே ஜாதி கர்வத்தையும் ஒழித்திருந்தார்.

ஒரு சமயம் ராமாநுஜர் ஓர் ஊமைமீது இரக்கங்கொண்டு ஏதேதோ சமிக்ஞைபாலே உபதேசம் செய்துகொண் டிருக்க, அந்த விசேஷ கடாட்சத்தைக் கண்டு அதிசயித்த கூரேசன், 'ஐயோ! கூரேசனுகப் பிறந்து சாஸ்திரங்களைக் கற்றுக் கெட் டேனே!' என்று அழுது தமது வித்யா கர்வத்தைப் பூர்ணமாகப் போக்கிக்கொண்டாராம்.

இவருடைய ஜீவகாருண்யத்திற்கோ கங்குகரை யில்லை. 'ராமாநுஜர் மடத்தைச் சேர்ந்த பெரியவர் என்று பிரசித்தமாக இருந்த காலத்திலும், தண்ணீர்க் குடத்தை இடுப்பிலே எடுத்து வைப்பார் இல்லாமல் வருந்திய ஒரு பெண்ணுக்குத் தாமே போய் அந்தக் குடத்தைத் தூக்கிவைத்து உதவி செய்தாரென்று ஒரு குரு பரம்பரைக் கதை சொல்கிறது. இத்தகைய ஜீவகாருண்யமும் ஞானமும் வைராக்கியமும் பக்தியும் பணிவும் தன்னல மறுப்பும் கூரேசனுடைய தியாகத்தை ஒப்பற்ற துறவுச்செல்வமாக உயர்த்தி விட்டன.

இவர் ஒவ்வொரு நாளும் உபாதானம் பண்ணிக் கிடைத்ததில் நாளைக்கென்று வைத்துக்கொள்ளாமலே காலட்சேபம் நடத்தி வந்தார். ஒரு நாள் மழை பெய்துகொண் டிருந்ததால் உபாதான காலம் தவறிவிட்டது. அன்று,

'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்
றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமான்.................'

என்ற நம்மாழ்வார் வாக்கின்படி ரங்கநாதனே தாரகனென்று இவரும் இவர் மனைவியும் பகல் முழுவதும் உபவாசம் இருந்தார்கள். இரவில் கூரேசன், சன்னிதிக்கு வழக்கப்படி போய்ச் சேவித்துத் திரும்பிவந்து திருவாய்மொழிப் பாடல்களில் சிலவற்றைச் சொல்லிக்கொண்டே உறங்கிப் போய்விட்டார்.

ஆண்டாளோ, 'ஒரு காலத்தில் ராஜாவைப்போல் இருந்தவர் இன்று பட்டினி கிடக்கிறரே' என்ற மனவருத்தத்தால் உறக்கம் பிடிக்காமல் பக்கத்திலே உட்கார்ந்திருந்தாள். கோவிலில் வாத்திய கோஷம் கேட்டதும் ஆண்டாள் ரங்கநாதன் இருக்கும் திசையை நோக்கி, 'ஸ்வாமி! உம்முடைய பக்தர் பட்டினி கிடக்க, நீர் மாத்திரம் கோலாகலத்துடன் போஜனம் செய்வது நியாயமோ? ஆடுமாடுகளைக்கூட அவற்றின் எஜமானர்கள் பட்டினி போடுவதில்லையே!' என்று விண்ணப்பம் செய்துகொண்டாள். ரங்கநாதனும் அப்படியே நினைத்தாராம்.

உடனே மடைப்பள்ளியின் தலைவர் கோவிலிலிருந்து உணவுப் பொருள்கள் கொண்டுவந்து, 'அங்கீகரிக்க வேண்டும்!' என்று கூரேசனைப் பிரார்த்தித்தாராம். பசி தீர்ந்து நடந்ததை அறிந்துகொண்டதும், ஆண்டாள் அப்படி எண்ணினது பிசகென்றே கூரேசன் அபிப்பிராயப்பட்டாராம்.

ஆண்டாளோ, "ரங்கநாதன் தங்களுடைய நாதனுயிருக்கலாம். ஆனல் அடியாளுடைய நாதனும் பிரபுவும் களைத்து மெலிந்து தூங்கும்போது எப்படிச் சகிப்பேன் ?" என்று சுடச்சுடப் பதில் சொல்லிவிட்டாளாம். தியாக மூர்த்தியான கூரேசனும், இப்படிப்பட்ட மனைவியைத் தியாகம் செய்யத் துணியவில்லையென்றல் அதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது ? இந்த மனைவியே அந்த வாழ்க்கையின் பெரும் பகுதியையும் உருவாக்கியிருக்கவேண்டும் அல்லவா?

இத்தகைய குணதிசயம் வாய்ந்த கூரேசன் மூலமாகத்தான் ராமாநுஜர் ஸ்ரீரங்கநாதனுடைய சன்னிதியையே தம்முடைய சித்தாந்தத்தின் மத்தியப் பிரதேசம் ஆக்கிக்கொள்ளும் விசேஷ உரிமையும் பெற்ருரென்று சொல்ல வேண்டும். அந்த நாளில் திருவரங்கத்து அமுதனர் என்ற பெருஞ் செல்வர் அந்தக் கோவிலின் நிர்வாகத் தலைவரா யிருந்தார். அவருடைய தாயார் இறந்த பதினேராம் நாளில் நடைபெற்ற **ஏகாஹம்** என்ற சடங்கில் கூரேசன் பிதிர் ஸ்தானத்திலே அமர்ந்து போஜனம் பண்ணினர். அமுதனர் அபரிமிதமான தனத்தைத் தட்சிணையாகக் கொடுத்தும் இவர் திருப்தி சொல்லவில்லையாம். கோவிலின் உரிமைக்கு அறிகுறியான திறவுகோலைப் பெற்றுக்கொண்ட பின்புதான் திருப்தியடைந்ததாகச் சொன்னராம்.

கடைசியாக அந்தத் திறவுகோலை ராமாநுஜர் அடிகளில் வைத்து வணங்கியதும், "அமுதனர் தட்சிணையாகப் பொன்னும் மணியும் வாரிக் கொடுத்திருப்பாரே; அவை எங்கே?" என்று கேட்டார். உடனே கூரேசன், "அவை பொருளல்ல எனக்கு; எனவே, கை கழிந்து போயின" என்று பதில் சொன்னர். அமுதனர் மாளிகையிலிருந்து ராமானுஜர் மடத்திற்கு வரும் வழியில் கண்ட கண்ட ஏழைகளுக்கெல்லாம் தங்க மழையாகவும் ரத்தின மழையாகவும் அவற்றைக் கூரேசன் பொழிந்துவிட்டாராம்.

## துரோகிக்கும் அருள் செய்தது

இப்படியெல்லாம் தியாகத்திலேயே பழகிப் பழகி வந்த உள்ளந்தான் ராமாநுஜரால் பிரசாரம் செய்யப்பட்டுவந்த ஆழ்வார்களின் சித்தாந்தத்திற்காகக் கண்களையும் இழக்கத் துணிந்தது. 'இதற்கும் மேலான தியாகம் உண்டோ?' என்று அதிசயிக்கிருேம். ஆம் அதுவும் கூரேசன் வாழ்க்கையிலேயே காணப்படுகிறது.

மேலே சொன்ன சோழ அரசன் மரணம் அடைந்தபின் மைசூரிலிருந்து ராமாநுஜர் திரும்பியதும் கூரேசனுக்காக மிகவும்

அநுதாபம் கொண்டு, 'வரதராஜப் பெருமாளை ஸ்தோத்திரம் செய்து, நீ இழந்த கண்களை மீண்டும் பெற்றுக்கொள்ள வேண்டும்!' என்று வற்புறத்தினாராம். கூரேசன் வரதராஜனை ஸ்தோத்திரம் செய்தார்; ஆனால் தமக்குக் கண் வேணுமென்று கேட்கவில்லை. ராமநுஜர் கூரேசனுடைய அமிர்தவாக்கில் ஈடுபட்டு மெய்ம்மறந் திருக்கும்போதே, 'நான் பெற்றபேறு நாலூரானும் பெற வேண்டும்!' என்ற வேண்டுகோளோடு பிரார்த்தனை முடிந்துவிட்டது. என்ன தங்கமான இதயம் பார்த்தீர்களா ?

தாமும் பெரியநம்பிகளும் கண்களை இழப்பதற்குக் காரணமாக இருந்த துரோகிக்காகப் பரிந்து இவர் செய்த பிரார்த்தனை, சிலுவையிலே கொல்லப்பட்ட கிறிஸ்துநாதர் தாம் சாகுந் தருவாயில், 'தந்தையே! அவர்களை மன்னியும். அவர்கள் இன்னது செய்கிறோம் என்பதையே அறியாதவர்கள்!' என்று கடவுளை நோக்கிச் செய்துகொண்ட பிரார்த்தனையை ஞாபகப்படுத்துகிறது. கூரேசன் வெற்றி உண்மையான கூரேச விஜயம். இதுவே ஸ்ரீவைஷ்ணவத்தின் வெற்றி அல்லது விஜயமு மாகும்.

# 9. ராமானுஜருக்குப் பின்

**கா**வேரியில் வெள்ளம் அதி கம்பீரமாய் இருகரையும் புரண்டு போகிறது. ஓடம் கிடையாதபடியால் சிலர் அவசரமாக ஸ்ரீரங்கத்திற்குப் போக வேண்டியர்கள் *தாழி என்ற ஒருவகைச் சிற்றோடத்தில் போய்க்கொண்டிருக்கிறார்கள். சூரியன் அஸ்தமித்து மழையும் இருட்டுமாய் அக்கரை இக்கரை தெரியவில்லை. ஆனால் பிரவாகம் மேலும் மேலும் பொங்கிக் கரையிலுள்ள மரங்களைச் சாடுகிற ஓசை காதில் விழுகிறது.

இடையிடையே, 'பூமி இடிந்து போகுமோ?' என்று நடுங்கும்படி இடியிடிக்கும் சப்தமும் காதைச் செவிடுபடச் செய்கிறது. அந்த முழக்கங்களுக்கிடையே **தாழிக்காரர்கள்** கூச்சல் இடுகிறார்கள்: 'ஐயையோ! முழுகிவிடும்போல் இருக்கிறதே! ஒருவராவது இப்போது இறங்கினால்தான் மற்றவர்கள் கரை சேரலாம்; இல்லையென்றால் நாமெல்லாம் நட்டாற்றில் அமிழ்ந்து போக வேண்டியதுதான்!'

### என்ன தியாகம் என்ன விசுவாசம்

உடனே ஒரு குரல், 'நீங்கள் நூறு பிராயம் இருப்பீர்கள்! உலகுக் கெல்லாம் ஓர் உயிரான நம்பிள்ளையைக் கரையிலே கொண்டுவிடுங்கள்' என்று தாழிக்கரரர்களை வாழ்த்துகிறது. அதே நிமிஷத்தில் ஒரு ஸ்திரீ ஆற்றிலே குதித்துவிட்டாள் என்பது

---

* தாழி: தோற்றத்தில் தாழிபோல் இருக்கும் சிறு ஓடம். இது இந்நாளில் பரிசு அல்லது பரிசல் என்று சொல்லப்படுகிறது.

அந்தகாரத்தைப் பிளந்துகொண்டு வந்த மின்வெட்டிலே தெரிந்து விடுகிறது. தாழி வேகமாய்க் கரைசேர நம்பிள்ளை மகா வியா கூலத்தோடு, 'அந்த அம்மை—ஐயோ! விழுந்துவிட்டாளே!' என்று பலகாலும் புலம்பிப் பரிதவிக்கிருர்.

அப்போது, "இதோ இருக்கிறேன், ஸ்வாமி! வருத்தப்பட வேண்டாம்" என்று மறுபடியும் கேட்கிறது அந்தக் குரல். நம்பிள்ளை, 'நல்லவேளை; மரத்தையோ திடரையோ பற்றியிருக்கிருள்; கரைக்கு அருகேதான் இருக்கவேண்டும்' என்று ஊகித்துத் தாழிக் காரர்களின் உதவியால் அவளைக் கரையேற்றுகிருர்.

அவளும் அவர் அடிகளில் விழுந்து, "ஆசாரியரே! தாங்கள் என் ஆத்மாவைக் கரையேற்றியதுபோல், ஆற்றிலே முழுகிப் போகிறபோதும் ஒரு கோரை மேடாக வந்து உடம்பையும் ரட்சித் தீர்களே!" என்று விண்ணப்பம் செய்துகொள்கிருள். நம்பிள்ளை யும் அவளுடைய மகத்தான தியாகத்தைக் குறித்து ஆச்சரியப் பட்டுக்கொண்டே, "உம்முடைய நம்பிக்கை கொஞ்சமோ? ஆம்; ஆம்; இந்த மகாவிசுவாசம் அப்படியும் ஆகாதோ!" என்று ஆனந்தம் அடைகிருர்.

இந்த ஸ்திரீ நம்பிள்ளை என்ற வைஷ்ணவ ஆசாரியரின் பிரபந்தக் காலட்சேபங்களைக் கேட்டுக் கேட்டுப் பக்தியையும் நம்பிக்கையையும் தியாக புத்தியையும் வளர்த்துக்கொண்டவள். 'நாம் உடல், பொருள், ஆவி அழிய மாறியாகிலும் பிறரைப் பேண, ஈசுவரன் நம்மைப் பேணி ரட்சிப்பான்' என்ற சித்தாந்த உண் மையை உணர்ந்து ஒழுகியவள்.

இப்படிப்பட்ட சிஷ்ய சம்பத்தையுடைய நம்பிள்ளை, ராமா நுஜருக்குப் பின் பாகவத தருமத்தைப் பேணி வளர்த்த-பிரசித்த மான-ஆசாரியர்களில் ஒருவர். வைஷ்ணவராவதற்கு முன் நம்பூர் வரதராஜர் என்ற பெயரோடிருந்து, பிறகு, 'நம் முடைய பிள்ளை' என்று குருவால் அபிமானிக்கப் பெற்றதால் நம் பிள்ளை என்று பெயர் பெற்றவர்.

ஆழ்வார்களின் பிரபந்தங்களையும் கொள்கைகளையும் பரப்பு வதையே பொழுதுபோக்காகக் கொண்டவர். 'வியாக்கியான சக்கரவர்த்தி' என்று கொண்டாடப் பெறும் பெரியவாச்சான் பிள்ளையும் பிரசித்திபெற்ற குருபரம்பரை ஆசிரியரான பின் பழகிய பெருமாள் ஜீயரும் இவருடைய சீடர்கள் அல்லது ஞானபுத்திரர்கள்தாம்.

## கணவனைத் திருத்திய மனைவி

இவருடைய குணாதிசயம், பொறாமை கொண்டவர்களையும் வசீகரித்து வழிப்படுத்தியது. தோழப்பர் என்பவர், 'நம்பிள்ளைக்கு மாத்திரம் ஏன் இந்தப் பெருமதிப்பு? நாம் ராமாநுஜருடைய பிரிய சிஷ்யரான முதலியாண்டானுடைய பேரன் அல்லவா?' என்று எண்ணமிட்டுப் பலரிடத்திலும் நம்பிள்ளையைத் தூஷித்து வந்தார்.

ஒரு நாள் நம்பிள்ளை சீடர்களோடு பெருந்திரளாகக் கோவி லுக்கு வரும்போது, தோழப்பர், 'பகவத் ஸன்னிதியிலும் உமக்கு இவ்வளவு ஆடம்பரமா? இவ்வளவு மரியாதையா?' என்று நேருக்கு நேராய்த் தூஷணை செய்ய ஆரம்பித்துவிட்டார். நம் பிள்ளையோ பதில் ஒன்றும் சொல்லாமலே ரங்கநாதனைச் சேவித்துத் திரும்பினர்.

இந்தச் செய்தியைத் தோழப்பரின் மனைவி கேள்விப்பட்டாள். அவள், நம்பிள்ளையின் காலட்சேபங்களைக் கேட்டவள்; அவருடைய குணாதிசயங்களில் ஈடுபட்டவள். அதனால் அவள் அன்று தன் கணவரை வழக்கம்போல் எதிர்கொண்டு உபசரிக்கவில்லை.

'ஏன் இந்த உதாசீனம்?' என்று அதிசயித்த அவரை நோக்கி, "ஆழ்வாரின் அவதாரம் என்று சொல்லும்படி விளங் கும் என்னுடைய ஆசாரியரை வாய்கூசாமல் நிந்தனை செய்த உம்மோடு எனக்கு என்ன உறவு உண்டு? நிலம் பிளந்தால் இழையிட்டுத் தைக்க முடியுமா? கடல் உடைந்தால் கட்டமுடியுமா? மலை முறிந்தால் தாங்க முடியுமா? தங்கள் பாகவத அபசாரமும்—

அந்தோ!—தீர்த்துக்கொள்ள முடியாதே!'' என்று சொன்னாள் மனைவி. தோழப்பர் சிறிது நேரம் திகைத்து நின்றார்.

பிறகு யோசித்துக் கலக்கம் தீர்ந்து, மனைவியைப் பார்த்து, "நீ சொன்ன தெல்லாம் சரி; நான் தப்புச் செய்தேன்'' என்று சொல்லிவிட்டு நம்பிள்ளையிடம் மன்னிப்புக் கேட்க வேணுமென்று தீர்மானித்தார். அப்படித் தீர்மானித்து வெளியே வந்த அதே சமயத்தில், அந்த வீட்டு வாசலில் காத்துக்கொண் டிருந்த ஒருவர் திடீரென்று எதிரே வந்து, "அடியேனை மன்னிக்க வேணும்!'' என்று வணங்கினார்.

தோழப்பர், "எதற்காக?'' என்று ஆச்சரியமாகக் கேட்க, "முதலியாண்டான் பேரனான தங்கள் உள்ளம் கலங்கும்படி செய்துவிட்ட மகாபாவி வேறு என்னதான் செய்ய முடியும்?'' என்று பதில் கிடைத்தது. தோழப்பர் திகிலடைந்து அந்தப் பரம தயாளுவான நம்பிள்ளையின் அடிகளில் விழுந்து, "நீரே, லோகாசாரியர்!'' என்று வாயார மனப்பூர்வமாகப் புகழ்ந்தார்.

## சிந்தின வார்த்தை கொண்டே சிறப்படைந்தது

கூரேசனுடைய பேரனும் நம்பிள்ளையின் சிஷ்ய சம்பத்தைக் கண்டு முதல் முதல் பொறாமைகொண் டிருந்தாராம். நம்பிள்ளையின் குணாதிசயம் முதலியாண்டான் பேரனைத் திருத்தியதுபோல் நம்பிள்ளையின் மேதை கூரேசன் பேரனையும் திருத்திப் பணிகொண்டது.

இவர் ஒரு சமயம் பின்பழகிய பெருமாள் ஜீயரைத் தம்மோடு அழைத்துக்கொண்டு ராஜசபைக்குப் போயிருந்தார். அங்கே ராஜா, ராமாயண விஷயமாக ஒரு சந்தேகக் கேள்வி கேட்டதும், கூரேசன் பேரனார் யோசனையில் ஆழ்ந்தார். ராஜா வேறு விஷயத்தைக் கவனித்துக்கொண் டிருக்கையில், 'நம்பிள்ளை அதற்கு என்ன சமாதானம் சொல்லக்கூடும்?' என்பதைப் பின்பழகிய பெருமாள் ஜீயர் மூலமாகத் தெரிந்துகொண்டார். அதை ராஜாவிடம்

சொன்னதும், அவன் சிரக்கம்பம் செய்து கூரேசன் பேரனுக்குப் பொன்னும் மணியும் வெகுமானமாக அள்ளிக் கொடுத்தான்.

அந்த நிமிஷம் முதல் அவருடைய உள்ளம் மாறிவிட்டது. அவர் பின்பழகிய பெருமாள் ஜீயர் கையைப் பிடித்துக்கொண்டே வந்து நம்பிள்ளையின் அடிகளில் அந்தத் திரவியங்களைக் குவித்து,

'நந்தினம் முத்தெறி நம்பூர் வரதர்தம் மாளிகையில்
சிந்தின வார்த்தைகொண் டேசில நாடு திறைகொள்வரே'

[நந்தினம்—சங்குக் கூட்டம். முத்தெறி—முத்து எறிகிற. வரதர்—வரதராஜர் என்ற நம்பிள்ளை. திறை—கப்பம்.] என்று சொல்லி வணங்கினாராம், கண்ணும் கண்ணீருமாக.

நம்பிள்ளை மாளிகையிலிருந்து சிந்தின ஒரு வார்த்தைக்காகத் தமக்கு அவ்வளவு பொருள் கிடைத்ததென்பதும், அப்படிப்பட்ட வார்த்தைகளைக் கொண்டு சில நாடுகளையே கப்பமாகக் கொள்ள லாம் என்பதும் அவர் கருத்து. பிறகு அந்தத் திரவியங்களோடு தம்மையும் நம்பிள்ளை அடிகளில் காணிக்கையாகச் சமர்ப்பித்தார்.

## உபதேசமே ஒழுக்கம்; ஒழுக்கமே உபதேசம்

நம்பிள்ளையின் குரு நஞ்சீயர். இவர் நூறு தரம் திருவாய் மொழிக்குப் பொருள் சொல்லிக் காலட்சேபம் நடத்தினார். இவருடைய சொல்லே சாஸ்திரமாய் இருக்குமென்றும், கடைக்கண் பார்வையே ரட்சகமாக இருக்குமென்றும் சீடர்கள் கொண்டா டினார்கள். தம்முடைய அந்தரங்க சீடரான நம்பிள்ளைக்கு இவர் ஒரு சமயம், 'ஸ்ரீ வைஷ்ணவத்வம் ஒருவனுக்கு எப்போது பிறக்கிறது?' என்பதைக் குறித்துச் சுருக்கமாகத் தமது கருத்தை வெளியிட்டார்:

"வைஷ்ணவர்கள் எந்த வகுப்பினராயினும், 'திருவுடை மன்னர்', 'நிலத்தேவர்', 'பெருமக்கள்', 'பெருந்தவத்தர்', 'பேராளன் பேரோதும் பெரியோர்' என்றெல்லாம் நம்குல நாதர் களான ஆழ்வார்களால் கொண்டாடப் படுகிறார்கள். 'அவர்கள்

எங்கள் குலதெய்வமே!' என்றார் திருமங்கை ஆழ்வார். எனவே பக்தர்களைச் சாமானியர்களாக மதிக்கலாகாது. அவர்களைக் கண்டதும் குறைந்த பட்சம் ஒருவனுக்குத் தன் மனைவி மக்கள் மீதுள்ள அன்பாவது பிறக்க வேண்டும்."

உண்மையில் அந்த ஆத்ம பந்துக்களே பந்துக்கள். அவர்கள் கடுகடுத்துப் பேசினாலும் நெஞ்சிலே குரோதம் தட்டாமல் அதைப் போகமாக அநுபவிக்க வேண்டும். அப்படிப்பட்டவனுக்குத்தான் ஸ்ரீவைஷ்ணவத்வம் பிறக்கிறது?' இந்த 'வைஷ்ணவத்வம்' நம்பிள்ளையை இலக்கியமாகக் கொண்டிருந்ததுபோல் நஞ்சீயரிடத்திலும் விசேஷமாகப் பிரகாசித்ததென்று சொல்லவேண்டும்.

## தர்க்கபிட்சையும் ஞானபிட்சையும்

நஞ்சீயருடைய குரு கூரேசனுடைய புத்திரரான பட்டர். ராமாநுஜர் காலஞ் சென்றதும், இவர் ஆசாரிய ஸ்தானம் வகித்து வைஷ்ணவப் பிரசாரம் செய்து வந்தார். நஞ்சீயர் அக்காலத்தில் ஆழ்வார்களின் வைஷ்ணவக் கொள்கைகளை மறுத்து வந்த வேதாந்தியாகப் பிரசித்தி பெற்றிருந்தார்.

ஒரு நாள் பட்டர் இவரிடம்போய், "நான் பிட்சைக்கு வந்தேன்" என்றார். உடனே, "போம், நம்முடைய சத்திரத்திற்கு" என்றார் வேதாந்தி. "எனக்கு வேண்டியது சோற்றுப் பிட்சை யல்ல" என்றார் பட்டர். "பிட்சைக்கு வந்தாலும் ஏதோ கொஞ்சம் வித்வானாக இருக்கக்கூடும் என்று எண்ணிய வேதாந்தி, *"கா பிக்ஷா?" என்று கர்வத்தோடு கேட்க, "தர்க்க பிக்ஷா?" என்று கம்பீரமாகப் பதில் சொன்னார் பட்டர்.

இப்படித் தர்க்கபிக்ஷை கேட்டவர் அந்தத் தர்க்க சாஸ்திரியான வேதாந்திக்குக் கடைசியாக ஞானபிக்ஷை அளித்துச் சீடர் ஆக்கிக் கொண்டு, ஆழ்வார்களின் அருளிச்செயலான நாலாயிரத்தையும் ஓதி உணரும்படி நியமித்தார். இந்த வேதாந்தி துறவியாகி

*கா பிக்ஷா—என்ன பிக்ஷை (வடமொழி).

வைஷ்ணவத்தைப் பரப்புவதில் குருவுக்கு விசேஷமாக உதவி புரிந்து வந்தார். எனவே, பட்டர் இவரை விசேஷமாகக் கடாட்சித்து, 'நம்முடைய ஜீயர் வந்தார்!' என்று வாரியெடுத்து அணைத்துக்கொண்டாராம். அன்று தொட்டு வேதாந்தி நஞ்ஜீயர் என்று பெயர் பெற்ருர்.

## பறப்பதன் குஞ்சு தவழுமோ

பட்டருடைய மேதா விலாசத்திற்கு உரிய அறிகுறிகள் அவருடைய குழந்தைப் பருவத்திலேயே காணப்பட்டன என்று குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன. ஐந்தாவது வயதில் இவர் வீதியிலே விளையாடியபோது, * 'ஸர்வக்ஞ பட்டர் வந்தார்!' என்று காளம் ஊதிக் கட்டியம் கூற ஒரு வித்வான் அதி சம்பிரமமாகப் பல்லக்கில் ஏறிப் போனுர்.

அப்போது பட்டர் அவர் பார்க்க ஒரு கையில் புழுதியை அள்ளிக்கொண்டு பல்லக்கின் எதிரே போய் நின்று, "நீர் ஸர்வக்ஞர் (அதாவது, எல்லாம் தெரிந்தவர்) என்பது உண்மையானுல், இது எவ்வளவு சொல்லும்?" என்று கேட்டாராம். அதற்கு எப்படி அளவு சொல்லுகிறதென்று அந்தச் சகலகலாவல்லவர் பிரமித்து வாயடைத்திருந்தார். குழந்தை பட்டர் மற்றச் சிறுவர்களைப் பார்த்து, "இது ஒருகைப் புழுதியென்று சொல்லத் தெரியாத இவருக்கோ ஸர்வக்ஞர் என்ற பட்டம்? அழகு, அழகு! காளத்தையும் விருதுகளையும் பறியுங்களடா! பறியுங்கள்!" என்று சொல்லிச் சிரித்தாராம்.

அந்த மழலைச் சொல்லைக் கேட்டு, அந்த முக விலாசத்தையும் பார்த்துக்கொண்டே இருந்த வித்வான், அவர் கூரேசருடைய புத்திரரென்று தெரிந்து, "அம்மம்ம! பறப்பதன் குஞ்சு தவழுமோ?" என்று ஆச்சரியப்பட்டு அவரைத் தம் பல்லக்கிலே தூக்கி வைத்துக்கொண்டு கூரேசனுடைய மாளிகையில் சேர்த்தாராம்.

* ஸர்வக்ஞ பட்டர்—எல்லாம் தெரிந்த பிராமணர்; சகல கலாவல்லர்.

## ஆசாரிய லட்சணம்

இவர் மேதாவிலாசத்திற்குக் கொஞ்சமும் குறைந்ததன்று குணாதிசயம். இவருடைய நுண்ணறிவை அழகு செய்தன இதயத்திலே அலையெறிந்த எல்லையில்லாத அன்பும் கருணையும். ஒரு நாள் பட்டரும் சீடர்களுமாகப் பெருங் கூட்டமாயிருந்து காலட்சேபம் நடந்துகொண் டிருக்கையில், ஒருவர் எழுந்து நின்று, "பட்டரே, உம்முடைய லட்சியத்திற்கும் நமக்கும் சம்பந்தமில்லை" என்று சொல்லிச் சபையை விட்டுப் புறப்பட்டார்.

உடனே பட்டரும் எழுந்து, "நீ விட்டாலும் நாம் விடுவோமோ ?" என்று சொல்லிக்கொண்டே அவரைத் தொடர்ந்து போய்ப் பிடித்துக்கொண்டு வந்து தம் பக்கத்திலே வைத்துக்கொண்டு விசேஷ உபதேசம் செய்து திருத்தி அந்தரங்க சீடர் ஆக்கிக்கொண்டார். இத்தகைய ஆசாரிய லட்சணம் உள்ள இடத்தில் சிஷ்ய சம்பத்திற்கும் குறைவுண்டோ?

## விளக்கில் கொளுத்தின விளக்குப் போலே

பட்டருடைய குணாதிசயத்தையும் மேதையையும் கூட இளமையிலேயே ஒருவாறு உருவாக்கிய சக்தி இவர் தாயான ஆண்டாளுடைய சக்தியென்று சொல்லலாம். இவள் கூரேசனுக்கும் சாஸ்திர விஷயமான சந்தேகங்களைத் தீர்க்கக் கூடிய அறிவாற்றல்களோடு இருந்தவள், குணசௌந்தரியத்திலும் நிகரற்றவளாக இருந்தாள்.

பட்டருக்கு விரோதியாயிருந்து அவர் உள்ளத்தைக் கலக்கி உபத்திரவித்துக்கொண் டிருந்த வீரசுந்தரன் என்பவன் இறந்ததும், 'பாபிஷ்டன் போனான்!' என்று பட்டருடைய சீடர்கள் சந்தோஷித்துக் கூத்தாடி அந்தச் செய்தியை ஆண்டாளுக்கு அறிவித்தார்கள். அவளோ மிகவும் கிலேசித்து அவர்களை நோக்கி, "பிள்ளைகளே! நீங்கள் ஒன்றும் அறியீர்கள்; பட்டர் விஷயத்திலே மகா அபராதம் செய்தவன், 'இப்படிச் செய்தோமே' என்ற அநு

தாபமும் இல்லாமல் செத்துப் போனனே; ஓர் ஆத்மா நல்ல கதி பெருமல் அநியாயமாகப் போய்விட்டதே! என்று எரிகிறது என் உள்ளம்'' என்று சொன்னுள். தன் புத்திரனுடைய பரம விரோதியைக் குறித்தும் இவ்வளவு தூரம் இரங்கிய தாயுள்ளத்தைப் பார்த்தீர்களா?

இப்படி எல்லாம் ராமாநுஜருக்குப் பின்னும் விளக்கில் கொளுத்தின விளக்குப்போலே வந்துகொண் டிருந்தன, ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே ஞானமும் தியாகமும் பாகவத தருமத்தைப் பேணிவளர்த்த சக்தி விசேஷங்களும். பட்டர் காலத்திலும் நஞ்சீயர் காலத்திலும் ராமாநுஜருடைய ஆத்மசக்தி நன்ருய்ப் பிரகாசித்து வைஷ்ணவ சமூகத்தில் ஒற்றுமைக்குக் குறைவு ஏற்படாமல் செய்து வந்தது.

நம்பிள்ளை காலத்திலேயே அந்தச் சக்தி ஒருவாறு குன்றிப் பொருமையும் பிளவும் ஏற்பட்டுச் சச்சரவுகளும் ஆரம்பமாயின என்று ஊகிக்கலாம். ஆனல் நம்பிள்ளையின் அபார அறிவுத் திறமையும் ஒழுக்க வன்மையும் பாகவத தருமத்தையும் சமுதாயத்தையும் கொஞ்ச காலம் அரண் செய்து காப்பாற்றி விட்டன.

## 10. தாயாதிகளான தத்துவ ஞானிகள்

### திருவனந்தபுரத்தில் ஆலயப்பிரவேச பீதி

'அடடா, புலையன் வந்துவிட்டானே கோவிலுக்குள்!' என்று சத்தம் போட்டார்கள் நம்பூத்ரிமாரும் போத்திமாரும். 'பக்தராயிருந்தால் என்ன; ஞானியாய்த்தான் இருந்தால் என்ன! புலையர் புலையர்தாமே!' என்றுர் சிலர். 'ஐயையோ! கர்ப்பக் கிருகத்திலும் புகுந்துவிட்டானு? அதோ, அதோ, பத்மநாபன் திருவடிக்குப் பக்கத்திலேயே போய் நிற்கிறுன்! அநியாயம்! கலிகாலம்!' என்றெல்லாம் கதறிக்கொண்டும் பதறிக்கொண்டும் கதவை அடைத்துப் பூட்டிக்கொண்டு வெளியே வந்துவிட்டார்கள்.

இப்படிப்பட்ட ஆலயப்பிரவேச பீதியும் கதவடைப்பும் சுமார் அறுநூறு வருஷங்களுக்கு முன்னமே ஒருநாள் திருவனந்தபுரத்திலே ஏற்பட்டனவென்றுல், அதை யாரல் நம்பமுடியும்? எனினும் அது அப்படியே நடந்ததென்று * வைஷ்ணவ குரு பரம்பரை வரலாறு தெரிவிக்கிறது.

அந்த நாளில் திருவனந்தபுரத்தில் புலையர் வகுப்பில் தோன்றிய **விளாஞ்சோலைப்பிள்ளை** என்ற ஒரு பெரியவர் இருந்தார். ஊருக்கு வெளியே விளாமரங்களை அதிகமாகவுடைய ஒரு சோலையில் வசித்துவந்த காரணத்தால் அவருக்கு அந்தப் பெயர் வந்தது. பத்மநாப ஸ்வாமியிடம் விசேஷ பக்தியோடு பரம பாகவதாராக அவர் விளங்கினுர்.

---

* பிள்ளை லோகார்யஜீயர் எழுதிய யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம், ஆனந்தா பிரஸ் பதிப்பு, பக்கம் 21.

அவரைத் திடீரென்று கோவிலுக்குள் பார்த்துக் கூச்சலிட்டவர்கள் வெளியே வந்ததும்,-ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம்! அந்தப் பெரியார் கொஞ்ச நேரத்திற்கு முன்புதான் தேகவியோகமானதாகக் கேள்விப்பட்டார்கள். பிறகு அவர்கள், 'பிரத்யட்சமாய்க் கண்டோமே, பத்மநாபன் அவரைத் தன்னோடு சேர்த்துக் கொண்டதை! ஆ, ஆ! இப்படிப்பட்ட பக்தர் விஷயத்திலும் அபசாரப்பட்டோமே!' என்று பச்சாத்தாபத்தோடு அந்த அதிசயத்தை எல்லோரும் அறியச் செய்தார்களாம்.

இந்தக் கதை தமது காலத்தில் நம்பூத்ரிமாருக்குள் பிரசித்தமாக இருந்ததாய்க் குறிப்பிடுகிறார், சுமார் 500 வருஷங்களுக்கு முன்னிருந்த பிள்ளை லோகார்யஜீயர். இத்தகைய பெருமை வாய்ந்த விளாஞ்சோலைப்பிள்ளை இயற்றிய சப்தகாதை என்ற ஏழு பாடல்கள் தென்கலை வைஷ்ணவர்களால் வேறு ஆசாரியருடைய பாடல்களோடும் ஆழ்வார் பாடல்களோடும் பாராயணம் செய்யப் படுகின்றன.

## அன்னியர் படையெடுப்பு

விளாஞ்சோலைப்பிள்ளை, ஸ்ரீரங்கத்திலே கி. பி. பதின்மூன்றுவது நூற்றாண்டிலும் பதினான்காவது நூற்றாண்டின் தொடக்கத்திலும் புகழ் பெற்றிருந்த ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியரான பிள்ளை லோகாசாரியரின் முக்கியமான சீடர்களில் ஒருவர். இந்த ஆசாரியருடைய சீடர்களில் ஆண்களும் பெண்களும் பலவேறு ஜாதியினரும் நாட்டின் பல பகுதிகளிலிருந்து வந்தவர்களும் கருத்து ஒருமித்துப் பக்திமதத்தை வளர்ப்பதிலேயே கண்ணுயிருந்தார்கள்.

அக்காலத்திலேதான் தென்இந்தியாவில் முதல் முதல் மகம்மதியர் படையெடுப்பு ஏற்பட்டது. அலாவுதீன் கில்ஜி என்ற டில்லி மன்னனுடைய சேனாபதியான **மாலிக் காபுர்** என்பவன் ராமேச்வரம் வரையிலும் வந்து கோவில்களை இடித்துப் பாழாக்கி ஏராளமான பொருளைக் கொள்ளையடித்துக்கொண்டு போனான்.

அவனும் அவனுடைய போர்வீரர்களும் இழைத்த கொடுமை களுக்குக் கணக்கே யில்லை. அவன் திரும்பும்போது சமயபுரம் முதலான இடங்களில் சுல்தான்களை நியமித்தான்.

சமயபுரம் சுல்தான் ஸ்ரீரங்கம் கோவிலைப் பாழாக்க வந்ததும், ஸ்ரீரங்கநாத விக்கிரகத்தை எங்கேயாவது ஒளித்து வைக்க வேண்டுமென்று எடுத்துக்கொண்டு போனார்கள் வைஷ்ணவர்கள். அப்போது தொண்டு கிழவராயிருந்த பிள்ளை லோகாசாரியாரும் அவருடைய சீடர்களில் சிலரும் மெய்காப்பாளர்களைப்போல் அந்த விக்கிரகத்தைப் 'பந்தோபஸ்து'ச் செய்து கொண்டுபோனார் களாம். அந்தச் சீடர்களில் விளாஞ்சோலைப்பிள்ளையும் ஒருவர்.

## எப்படிப்பட்ட குரு

ஜோதிஷ்குடி அல்லது சோதிடக்குடி என்ற கிராமத்தில் ஸ்ரீரங்கநாதனோடு தங்கியிருக்கும்போது பிள்ளை லோகாசாரியர் நோயுற்று மிகவும் தளர்ந்து, படுத்த படுக்கையில் இருந்தே தம்மைச் சூழ்ந்திருந்த சிஷ்யர்களைப் பார்த்து, "இனி ஆசாரிய ஸ்தானம் வகிக்கக் கூடியவர் வைதிகத்தோடு லௌகிகத்திலும் அதிநிபுண ராக இருக்கவேண்டும். அப்படிப்பட்டவர் இப்போது மதுரையில் ராஜகாரியங்களிலே ஈடுபட்டிருக்கும் திருவாய்மொழிப்பிள்ளை என்பவர்தாம். அவர் பால்யத்திலே என்னிடம் சமய உண்மைகளை ஒருவாறு தெரிந்துகொண்டார். லௌகிக விஷயங்களில் அதிக மாகத் தலையிட்டுக்கொண்டதால் அவருடைய பயிற்சி பூர்த்தியாக வில்லை. இந்த விஷயத்தில் நீங்கள் அவருக்கு வேண்டிய உதவி செய்ய வேண்டும்" என்று சொன்னார்.

அப்போது சில ரகஸ்ய உண்மைகளை அவருக்குத் தெரிவிக்கும்படி விளாஞ்சோலைப்பிள்ளைக்குக் கட்டளையிட்டார். வைஷ்ணவ சமயத்தின் வேறு சில அம்சங்களை நன்றாக எடுத்துச் சொல்லும்படி வேறு சில சீடர்களுக்கும் கட்டளையிட்டார். பிள்ளை லோகாசாரியார் தேக வியோக மானதும், விளாஞ்சோலைப்பிள்ளை

குருவின் அபிப்பிராயப்படி தமது சொந்த ஊரான திருவனந்த புரத்திற்குப் போய்விட்டார்.

## ஆ! எப்படிபட்ட சீடர்கள்!

ஊருக்குப் போனதும், விளாஞ்சோலைப்பிள்ளைக்கு ஒரே கவலைதான். திருவாய்மொழிப்பிள்ளையை எப்படிக் கண்டு பேசுவது? அவருடைய தற்கால மனநிலை எப்படியோ? இந்த உயிர் உடம்பை விட்டுப் பிரிவதற்கு முன் குருவின் விருப்பம் நிறைவேற வேணுமே! அவருடைய மனக்கண் முன் அடிக்கடி தோன்றின, பிள்ளை லோகாசாரியருடைய உருவமும் அவர் ஸ்ரீரங்கத்தில் சமயப்பிரசாரம் செய்துவந்த பிரபாவமும், முதிர்ந்த வயதிலும் மரணவஸ்தையிலும் காட்டிய தியாக உணர்ச்சியும்.

ஒரு சமயம் குருவின் வைபவங்களை நினைத்துக்கொண்டே தியானத்தில் அமர்ந்தவர் தம்மை அப்படியே மறந்து சமாதி நிலைக்குப் போய்விட்டார். அவ்விதமாகச் சில தினங்களே கழிந்து விட்டனவாம்; உடம்பிலே சிலந்தி நூல் இழைத்ததுகூடத் தெரியவில்லையாம். நிஷ்டை கலைந்து விழித்துக்கொண்டதும் கண்ணெதிரே யாரைப் பார்த்தார்? ஆம்; பிராமண சிரேஷ்டரும் மதுரை ராஜ்யாதிபதியுமான திருவாய்மொழிப்பிள்ளைதான் தம்மை வணங்கியவர்! குருநாதரின் எண்ணம் பலிக்காமல் போகுமா? பிள்ளை லோகாசாரியரின் அருமை பெருமைகளே அந்தத் தியானத்திற்கும் சமாதிக்கும் விஷயமாயிருந்தன என்று தெரிந்து கொண்டதும், திருவாய்மொழிப்பிள்ளைக்கு எத்தனையோ பால்ய நினைவுகளும் கனவுகளும் பொங்கியெழுந்தன! பிள்ளை லோகா சாரியரின் இதயத்தையே பார்த்துவிட்டார் விளாஞ்சோலைப் பிள்ளையின் உபதேசங்கள் மூலமாக.

கடைசியாகத் திருவாய்மொழிப்பிள்ளை, 'இவருடைய சம்பந்தத்தால் மறுபடியும் எனக்கு அந்த ஆசாரிய சம்பந்தம் கிடைத்துவிட்டது! மேலும் புடம் போட்ட பொன்போல் இருக்கும் இந்தப் பெரியாரின் தரிசனமே இப்போது எனது ஜாதி கர்வத்தை

யும் அதிகார கர்வத்தையும் போக்கிவிட்டது!' என்று சந்தோஷித்து விடை பெற்றுக்கொண்டார்.

ஆசாரியர் ஆணைப்படி அவருக்கு உபதேசிப்பதற்காகவே உயிரை வைத்துக்கொண் டிருந்தவர்போலத் தோன்றிய இவர், அவர் தம்மைப் பிரிந்தபின், நீண்டநாள் உயிரோடு இருக்கவில்லை! விளாஞ்சோலைப்பிள்ளை காலமானதைக் கேள்விப்பட்டதும் புத்திரன் பிதாவுக்குச் செய்யும் முறைப்படி அந்தியக்கிரியை முதலியவற்றைத் திருவாய்மொழிப்பிள்ளையே சிறப்பாக நடத்தி வைத்தாராம்.

## இதிகாச ரகஸ்யமே தியாகந்தான்

திருவாய்மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப்பிள்ளை போன்ற சிஷ்ய ரத்தினங்களைக் கொண்டே குருவான பிள்ளை லோகாசாரியரின் பிரதாபங்களை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலா மல்லவா? இவர் குணாதிசயத்திற்குக் குறைந்ததன்று இவர் மேதாவிலாசமும். இவர் பதினெட்டு ரகஸ்ய கிரந்தங்களில், பிரபந்த சாரமான கொள்கைகளே வைதிக சமயத்தின் மறை பொருளான கொள்கைகளென்று சித்தாந்தம் செய்திருக்கிறார்.

'ரகஸ்யங்கள்' என்றால் பலருக்கும் தெரியாமல் மறைக்க வேண்டிய சமய ரகஸ்யங்கள் என்பது பொருளல்ல; குருமுகமாகச் சீடர்கள் கற்றுக்கொள்ளவேண்டிய-உபதேச பரம்பரையில் வந்த-விசேஷமான கருத்துக்கள் என்பதுதான் பொருள். இந்த ரகஸ்ய கிரந்தங்களில் அதி முக்கியமானது ஸ்ரீவசனபூஷணம்.

ரத்தினங்கள் பதித்த ஆபரணத்தை ரத்தினபூஷணமென்று சொல்வதுபோல், பூர்வாசாரியர்களுடைய வசனங்கள் நிறைந்தாய் ஓதுகிறவர்களை உண்மையாகவே அழகு பெறச் செய்கிறது என்ற காரணத்தால் இதற்கு ஸ்ரீவசனபூஷணம் என்று பெயர் கிடைத்திருக்கிறதாம். இந்த நூல் 461 சூத்திரங்களாகச் செய்யப்பட் டிருக்கிறது; பெரிய பெரிய விஷயங்களை நுட்பமாகவும் எளிமையாகவும் வெளியிடுகிறது.

உதாரணமாக, ஒரு சூத்திரத்தை எடுத்துக்கொள்ளுங்கள் : 'இதிகாச சிரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது. மஹாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது?' இது ஸ்ரீவசனபூஷணத்தின் ஐந்தாவது சூத்திரம். ராமாயணத்தில் கதாநாயகனுடைய தியாகத்தையும் வென்றுவிடுகிறது கதாநாயகியின் தியாகம் என்பது குறிப்பு.

ராமன் சாதுக்களையும் தேவர்களையும் காப்பாற்றுவதற்காகச் சிங்காசனத்தைத் துறந்தானென்றால் சீதை அந்தத் தியாகத்தோடு தேவமாதர்களைச் சிறையிலிருந்து விடுவிப்பதற்காகத் தானே சிறையிருந்தாளாம். மஹா பாரதத்தின் விசேஷமான பெருமையோ பாண்டவர்களுக்காகத் தூது போன கிருஷ்ண பகவானுடைய எளிமைதானும். எவ்வளவு பொருள் பொதிந்த உண்மை எவ்வளவு லேசாக வெளியிடப்படுகிறது.

## பாகவதர் குணாதிசயம்

இன்னும் ஒரு சூத்திரத்தை நோக்குவோம் :

**'குற்றம் செய்தவர்கள் பக்கல், (1) பொறையும், (2) கிருபையும், (3) சிரிப்பும், (4) உகப்பும், (5) உபகார ஸ்மிருதியும் நடக்கவேணும்.'** *(365-ஆவது சூத்திரம்)*

*[பொறை-பொறுமை. உபகார ஸ்மிருதி-உபகார நினைவு.]*

குற்றம் செய்தவர்கள் விஷயத்திலே முதலாவது காட்ட வேண்டியது பொறுமை. பதில் தீங்கு செய்யக்கூடாது; தீங்கு செய்ய நினைக்கவும் கூடாது; நெஞ்சிலே வருந்தியிருக்கவும் கூடாது. இப்படிப்பட்ட பொறுமை மட்டும் போதுமா? அவர்கள் விஷயத்தில் கிருபையும் காட்டவேண்டுமாம். 'நாம் பொறுத்திருந்தாலும் இவர்களைக் கடவுள் தண்டிக்கப்போகிறாரே என்று இரக்கப்பட வேணுமாம். பொறுமையோடும் கிருபையோடும் சிரிப்பும் வேண்டுமென்கிறார் பிள்ளை லோகாசாரியர்.

'நாமும் துன்பத்தில் அவர்களைப்போல் வருத்தப்படுவோம் என்றல்லவா நினைக்கிறார்கள்?' என்ற நினைப்பே பக்தர்களுக்குச்

சிரிப்பை உண்டாக்கப் போதுமானது. எனினும் அந்தச் சிரிப்பிலும் இகழ்ச்சி கிடையாது; தற்பெருமை கிடையாது. அது துன்பத்தை வென்று எதிரிக்கும் இதம் செய்ய விரும்பும் சிரிப்பு. பாகவதர்கள் குற்றஞ் செய்கிறவர்களையும் உகந்து திருத்த விரும்புகிறார்களாம். எனவே சிரிப்போடு உகப்பும் வேண்டும் என்கிறார். கடைசியாக, 'நம்முடைய குறைகளை நாம் மறந்துவிடாமல் நினைப்பூட்டி, உபகாரம் செய்யப் பார்க்கிறார்களே!' என்ற நினைவோடு நன்றி பாராட்டவும் வேண்டுமாம்.

## மேதாவியரான சகோதரர்கள்

இப்படிப்பட்ட பல உயர்ந்த கொள்கைகளையுடைய ஸ்ரீவசன பூஷணத்திற்கு ஓர் அரணாகப் பிள்ளை லோகாசாரியரின் தம்பியான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் **ஆசாரிய ஹ்ருதயம்** என்ற நூல் இயற்றியிருக்கிறார். ஸ்ரீவைஷ்ணவத்தின் பிரதமாசாரியரான நம்மாழ்வாரின் இதயத்தை வெளியிடுவதால் இதை ஆசாரிய ஹ்ருதயம் என்று சொல்லுகிறார்கள். மேதாவிகளும் சகல சாஸ்திர நிபுணர்களுமான இந்தச் சகோதரர்கள் ராமலட்சுமணர்களைப் போலவும் பலராம கிருஷ்ணர்களைப் போலவும் வாழ்ந்தார்களென்று குருபரம்பரைகள் சொல்லுகின்றன.

## வேதாந்த தேசிகர்

இவர்கள் ஸ்ரீரங்கத்திலே பிரசித்தி பெற்று விளங்கிய காலத்தை ஒட்டி **வேதாந்ததேசிகர்** என்ற பிரபல வைஷ்ணவ ஆசாரியரும் காஞ்சீபுரத்திலே பிரசித்தி பெற்றிருந்தார் என்பர். இவரும் பிள்ளை லோகாசாரியரைப்போல், 'ரகஸ்யங்கள்' என்ற சிறு நூல்களை இயற்றியிருக்கிறார். பல வேறு பெரிய நூல்களும் இயற்றியிருக்கிறார். இவர் பக்தர் மட்டும் அல்லர்; தத்துவஞானி மட்டும் அல்லர். அப்பைய தீட்சிதர் என்ற அத்வைத சிரேஷ்டரால், **'கவிதார்க்கிக ஸிம்மம்'** (கவிகளுக்கும் தர்க்க வாதிகளுக்கும் ஸிம்மம் போன்றவர்) என்று புகழப்பெற்றிருக்கிறார்.

இவரும் பிள்ளை லோகாசாரியரைப்போல நூறு வயதுக்கு மேல் வாழ்ந்தவரென்று சொல்லுகிறார்கள். பிள்ளை லோகாசாரியருடைய நூல்களெல்லாம் தமிழிலே செய்யப்பட் டிருக்கின்றன. வேதாந்த தேசிகருடைய நூல்களில் சில தமிழிலும் பெரும் பாலானவை வடமொழியிலும் செய்யப்பட் டிருக்கின்றன.

நம்மாழ்வார் திருவாய்மொழியின் ஸாரமும் தாத்பரியமும் கூட இவரால் வடமொழியில் செய்யப்பட் டிருக்கின்றன. இவர் திருவாய்மொழிக்குச் செய்திருந்த வியாக்கியானம் இப்போது கிடைக்கவில்லை. ராமானுஜர் செய்த ஸ்ரீபாஷ்யத்தைப் பல தடவையும் விளக்கிக் காலட்சேபம் செய்ததோடு அதற்கு அரணாக வடமொழியில் நூல்களும் செய்திருக்கிறார்.

கோவில்களில் தமிழ்ப்பிரபந்தங்கள் ஓதுவதையும் பல வேறு ஜாதியினரான ஆழ்வார்களை வழிபடுவதையும் அந்தக் காலத்து வைதிகர்களில் பலர் ஆட்சேபித்தார்கள்; அவர்களுடைய கட்சியைக் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவத்தை ஸ்தாபிப்பதில் இவரும் பிள்ளை லோகசாரியரைப்போல விசேஷமாகப் பாடுபட்டிருக்கிறார். இவர் கடைசியாக எழுதியது தமிழ் நூலான 'ரகஸ்ய த்ரய ஸாரம்' என்பது. இதில் இவருடைய தேர்ந்த கொள்கைகளைக் காணலாம்.

பிள்ளை லோகாசாரியர் ஆண்டிலும் அறிவிலும் முதிர்ந்து வைஷ்ணவப் பிரசாரம் செய்துகொண் டிருந்த காலத்திலே வேதாந்ததேசிகர் தோன்றி, அவருக்குப் பின்னும் சமயப்பிரசாரம் செய்துவந்தார் என்பது தெரிகிறது. பதினாலாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே—மகம்மதியர் தென்னாட்டில் அதிகாரம் செலுத்திக் கொண்டிருந்த காலத்திலே—பிள்ளை லோகாசாரியர் காலஞ் சென்றார்.

பதினாலாம் நூற்றாண்டின் இடையே விஜயநகர ராஜ்யம் தோன்றி மகம்மதியர் ஆட்சியினின்றும் தென் இந்தியாவை விடு வித்தது; மகம்மதியர் பாழாக்கிய கோவில்களையும் புதுப்பித்தது.

இந்த இந்துராஜ்யத்தைச் சேர்ந்த கோபணார்யன் என்ற சேனாதிபதி சமயபுரம் சுல்தானைத் தோற்கடித்து ஸ்ரீரங்கநாதனை மறுபடியும் ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டை செய்தான். அந்த விக்கிரகத்தை மகம்மதியர் பயத்தால் வேறு இடத்திற்குக் கொண்டு போகும்போது பிள்ளை லோகாசாரியர் உடன் சென்றாரென்றால், அதை மறுபடியும் ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டை செய்யும் காலத்தில் வேதாந்ததேசிகர் கூடவே இருந்தாரென்று தெரிகிறது.

## தாயாதிச் சண்டை

இப்படியெல்லாம் வைஷ்ணவத்திற்காகவே உயிர் வாழ்ந்த இந்த இரண்டு ஆசாரியர்களுடைய சீடர்களுக்கிடையே நாளடைவில் சச்சரவுகள் தோன்றின. இந்தச் சச்சரவுகளுக்குக் காரணம் இந்த ஆசாரியர்களுக்குப் பிரதானமான கொள்கைகளில் ஒற்றுமை இருந்தபோதிலும், சிற்சில விஷயங்களில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டிருந்ததுதான்.

இந்த அபிப்பிராய பேதங்களைப் பிரமாதப்படுத்தித்தான் சச்சரவுகள் விளைந்திருக்க வேண்டும். வேதாந்ததேசிகருக்கும் பிள்ளை லோகாசாரியரின் சகோதரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்குமே கொள்கை விஷயமான விவகாரங்கள் ஏற்பட்டன என்பர்.

காஞ்சீபுரத்தில் வாழ்ந்த வேதாந்ததேசிகர் பெரும்பாலும் வடமொழி நூல்கள் செய்தார்; வடமொழியிலுள்ள ஸ்ரீபாஷ்யத்தை விசேஷமாகப் பிரசாரம் செய்தார். திவ்யப்பிரபந்தங்கள் ஒரு விதத்திலும் ஸம்ஸ்கிருத வேதங்களுக்குத் தாழ்ந்தவை யல்லவென்றும், சில அம்சங்களில் அவை வேதங்களைக் காட்டிலும் சிறந்தனவென்றும், தமிழ் வேதங்களின் உதவியால் வடமொழி வேத வேதாந்தங்களில் விளங்காமல் இருந்த பகுதிகளும் விளங்கினவென்றும் தேசிகர் ஒப்புக்கொண்ட போதிலும், இவருடைய சீடர்கள் வடமொழியிலுள்ள பிரமாண நூல்களையே விசேஷமாகப் போற்றினார்கள். எனவே, இவர்கள் **வடகலையார்** என்று பெயர் பெற்றார்கள்.

பிள்ளை லோகாசாரியருடைய சீடர்கள் தென்மொழியான தமிழிலுள்ள பிரபந்தங்களுக்கு ஏற்றம் கொடுத்ததால் தென் கலையார் என்று பெயர் பெற்றார்கள். இந்தக் கலா பேதம் கலைச் சண்டையாக முற்றி முதிர்ந்தது.

ஒரே சமூகத்தினரான சகோதர வைஷ்ணவர்களுக்குள் ஏற்பட்ட அபிப்பிராய பேதங்கள் எவ்வளவு விபரீதமாக வளர்ந்து விட்டன! மகம்மதியர் படையெடுப்புக்குக் காரணமே தென்கலையார் செய்துவந்த தவறான பிரசாரந்தான் என்றுகூட அந்தக் காலத்திலே வடகலையார் அபிப்பிராயப்பட்டார்களாம். பிள்ளை லோகாசாரியரைப்போல் தேசிகரும் கஷ்ட நஷ்டங்கள் அடைந்த தால் தென்கலையாரும் இதே விவகாரத்தைத் தங்கள் சார்பாக மாற்றி உபயோகித்திருக்கவும் கூடும்!

பிள்ளை லோகாசாரியரும் வேதாந்ததேசிகரும் தாயாதிகள் என்று கருதுவோரும் உண்டு. 'தாயாதிச் சண்டைதானே ஒரு பாரதமாகவும் வளர்ந்துவிடுகிறது!' என்று சொல்லி இவர்கள் கலாபேதச் சண்டைகளுக்கு இதிகாச ஆதாரம் காட்டுவதும் உண்டு.

## பிள்ளை லோகாசாரியர் யார்?

நம்பிள்ளையின் சீடரான வடக்குத் திருவீதிப்பிள்ளையின் புதல்வர் இவர். வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவாய்மொழிக்கு நம்பிள்ளை சொல்லும் பொருள்களைக் கேட்டுக் கேட்டுப் பழுத்த ஞானம் பெற்று அவற்றை அப்படியே எழுதி வைத்துக்கொண்டார். இதுதான் ஈடு முப்பத்தாறுயிரப்படி என்பது.

நம்பிள்ளையின் சீடர்களில் இவரைக் காட்டிலும் முக்கிய மானவர் பெரியவாச்சான்பிள்ளை என்ற வியாக்கியான சக்கர வர்த்தி. இவருக்கு அடுத்தபடியாகப் பேர் பெற்றிருந்தவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. பிள்ளை லோகாசாரியரும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் அருமைப் புதல்வர்கள்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை தமது மூத்த புதல்வரை நம்பிள்ளையிடம் கொண்டுபோய்க் காட்டி, "இவன் உங்கள் அருளால் பல்வேறு சாஸ்திரங்களிலும் நிபுணனாக வாழ வேண்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்டாராம். நம்பிள்ளையும் கருணைகூர்ந்து அந்தப் பிள்ளையைத் தமது ஞானபுத்ரராக அங்கீகரித்தார். நம்பிள்ளையின் நிகரற்ற புலமைக்கும் அறிவுச் சிறப்பிற்கும் ஒழுக்க உயர்விற்கும் பிரசார வன்மைக்கும் தியாக உணர்ச்சிக்கும் ஏற்றபடி, 'லோகாசாரியர்' என்ற பட்டம் இருந்தது. அவரது ஞானப்பிள்ளையை, 'லோகாசாரியர் பிள்ளை' என்று மக்கள் கொண்டாடுவா ராயினர். 'லோகாசாரியர் பிள்ளை' என்பது 'பிள்ளை லோகாசாரியர்' என்று மருவியது.

பிள்ளை லோகாசாரியர் நம்பிள்ளையிடத்திலும் தமது தந்தை யாரிடத்திலும் வடமொழியிலுள்ள சாஸ்திரங்களையும் ஆழ்வார் களின் பிரபந்தங்களையும் நன்கு கற்று, ஆழ்வார் பாசுரங்களின் ஆழ்ந்த பொருளில் விசேஷமாக ஈடுபட்டார். 'ஸ்ரீவசனபூஷணம்' முதலிய பதினெட்டுப் புத்தகங்களை இவர் எழுதியுள்ளார். இவற்றுக்கு, 'அஷ்டாதச ரஹஸ்யம்' என்று பெயர்.

இந்த ரஹஸ்ய நூல்கள் தமிழில் மணிப்பிரவாள நடையில் ஸூத்ரமாக எழுதப்பெற்றுள்ளன. இவை ஆண்களோடு பெண் களும் சரிசமானமாகக் கற்றுணரும்படி எழுதப்பெற்றன என்பர். அரிய பெரிய இரகசியங்களை இப்படி வெளியிட்டிருக்கும் தனிச் சிறப்பு ஆசாரிய பரம்பரையில் இவருக்கே உரியதாகும் என்றும் கூறுவது உண்டு. இவர் கருத்தைப் பின்பற்றியே கடைசி ஆசாரியரான மணவாள மாமுனிகள் பொருட்சிறப்பும் நடை யழகும் வாய்ந்த வியாக்கியானம் எழுதியுள்ளார்.

இவர் தந்தையாரான வடக்குத் திருவீதிப்பிள்ளையைப் பிள்ளை லோகாசாரியரின் திருத் தகப்பனார் என்று சிறப்பித்துப் பேசுவது உண்டு. தமது தம்பியான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாருக்கும் ஆசாரியர் இவரே.

## வேதாந்த ஆசிரியரின் கருணை

ஸ்ரீநிகமாந்த மகா தேசிகன் என்று போற்றப் பெறுகின்ற வேதாந்ததேசிகரை வடமொழி இலக்கியத்தில் வல்லவர்களும் நன்கறிவர். வடமொழியில் காவியங்களும் ஒப்பற்ற தோத்திரங்களும் இவர் இயற்றியிருக்கிருர். இவருக்கு ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களின்மீது அளவற்ற பக்தியும் ஈடுபாடும் உண்டு.

'செய்யதமிழ் மாலைகள்நாம்
தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள்
தெளிகின்ருேமே!'

என்று இவர் கூறுவதைக் கேளுங்கள்.

'நாலாயிரம் நமக்கு வாழ்வு' என்று கூறும் தேசிகர் தம்மைச் 'சந்தமிகு தமிழ்மறையோன்' என்று அறிமுகப் படுத்துவதில் பெருமை கொள்கிருர். தமிழை, 'பாவளரும் தமிழ்' என்றும், 'பண்ணமரும் தமிழ்' என்றும் குறிப்பிடுகிறவர் திருப்பாணுழ்வாரை, 'நம்பாண நாதன்'' என்றும்,

'பாவளரும் தமிழ்மறையின்
பயனே கொண்ட
பாண்பெருமாள்'

என்றும் பாராட்டிப் பரவசமாகிருர்.

வேதாந்ததேசிகரை மணவாள மாமுனியும் பாராட்டி இவர் கருத்துக்களையும் பொன்போல் போற்றுகிருர் என்பதற்கு மணவாள மாமுனியின் வியாக்கியானங்களிலேயே அகச்சான்றுகள் உண்டு. வேதாந்ததேசிகரின் வாக்கை மேற்கோளாகவும் மணவாள மாமுனி காட்டியுள்ளார். 'வேதாந்ததேசிகர் விஸ்தரித்துப் பேசியபின் பிறர் என்ன சொல்ல இருக்கிறது!' என்ற தோரணையில் மணவாள மாமுனி, தேசிகர் வாக்கை ஆதாரமாகக் கொண்டு பேசுவது உய்த்துணரத்தக்கது. இதனுல்

தேசிகர் கொள்கைகளுக்கும் மணவாள மாமுனியின் கொள்கைகளுக்கும் ஸாராம்சத்தில் கருத்து விரோதம் இல்லையென்று துணியலாம்.

தென்கலையாகிய தமிழ்மொழியிலும் வடகலையாகிய ஸம்ஸ்கிருத மொழியிலும் தக்க புலமை வாய்ந்திருந்த தேசிகரை, 'செந்தமிழும் ஆரியமும் தேர்ந்த பொதுத் தேசிகன்' என்று முருகதாச சுவாமிகள் பாராட்டியிருப்பது பொருத்தமானதே. இவரது வடமொழிக் கவித்திறத்தைக் கூரேசனின் புதல்வரான பட்டரின் கவித்திறத்துடன் ஒப்பிடுவதும் உண்டு.

நாதமுனியின் பக்திப் பேரியக்கம் ஆளவந்தார் காலத்தில் தழைத்து வளர்ந்ததென்றும், ராமாநுஜர் காலத்தில் பூர்ண வளர்ச்சி பெற்றதென்றும், இந்தக் கற்பக தருவை ஸ்ரீ வேதாந்த தேசிகர் அரண் செய்து பாதுகாத்தாரென்றும் சொல்லலாம். இப்பெரியாரை,

'செஞ்சொல் தமிழ்மறைகள்
தெளிந்துரைப்போன் வாழியே'

என்று வாழ்த்துவது பொருத்தமே.

'திருமால் தாளில் தலைவைத்தோம் சடகோபன் அருளினாலே' என்று இவர் கூறுவது ராமாநுஜரின் திருவுள்ளத்தை உள்ளபடியே பிரதிபலிப்பதுதான். இவர் திருவாய்மொழிக்கு, 'எழுபத்தீராயிரப்படி' என்று ஒரு விஸ்தாரமான வியாக்கியானம் இயற்றினரென்றும், அது இப்போது கிடைக்கவில்லை என்றும் கூறுவோர் உண்டு.

'அறிவிலிகள் சிலர், "க-ப-ச-ட" என்று வ்யாகரணத்திலுள்ள அக்ஷர வரிசைகளைப் படித்துக்கொண் டிருக்கட்டும்; மற்றும் சிலர், பேசுவதில் திறமை பெற்றிருப்பதாக எண்ணிக்கொண்டு, "கடம், படம்" என்று உரத்திக் கத்திக்கொண் டிருக்கட்டும்; நாமோ வெனில், மகிழம்பூ மாலையினின்றும் பெருகுகிற குறைவற்ற செந்தேன் பெருக்கின் சிறப்புடைய குணபூர்த்தியுள்ள நம்மாழ்வாரின் திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு ஆனந்திக்கிறோம்' என்று

பொருள்படும் வேதாந்ததேசிகரின் சுலோகம் ஒன்று முதற் பாதி கடின உச்சரிப்புக் கூடியதாகியும் பிற்பாதி நளினமான சொற்க ளாலும் அமைந்திருக்கிறது. இந்த வாக்கிலேயே ஆழ்வார்களின் தமிழிசை இவருள்ளத்தை எப்படி ஆட்கொண் டிருக்கிறது என் பது இனிது புலனுகும்.

ஆழ்வார்களின் சரணுகதி மார்க்கத்தில் வேதாந்த அடிப் படையை ராமாநுஜரைக் காட்டிலும் தேசிகரே தெளிவுபடுத்தி விளக்கியுள்ளார் என்பதை. * 'தேசிகப் பிரபந்த'த்தின் முன் னுரையில் ஸ்ரீ வி. வி. ஸ்ரீநிவாஸையங்கார் சுட்டிக்காட்டுகிருர். இவர் ஆழ்வார் அருளிச்செயல்களை, 'த்ரமிடோபநிஷத்' (தமிழ் உபநிடதம்) என்று பாராட்டியிருப்பது பிரசித்தம்.

'நமக்கு அறிவு இருப்பது எல்லாருக்கும் உபகாரம் செய்ய' என்று தேசிகர், 'ரஹஸ்ய த்ரய ஸாரம்' என்ற தமது நூலில் கூறியுள்ளார். உலகத்திற்கு நாம் செய்யும் தொண்டு இறைவ னுக்குத் திருப்தியளிக்கும் தொண்டே யாகும்.

> 'உடல்மிசை உயிரெனக்
> கரந்தெங்கும் பரந்துளன்'

என்ற நம்மாழ்வார் வாக்கின்படி உலகம் அனைத்தும் இறைவனது உடலாதலால் லோகோபகாரம் இறைவன் உகந்த தொண்டே என்பது குறிப்பு.

பக்தியே வைஷ்ணவத்தின் ஆணிவேர் என்பதும், பிரபத்தி என்ற சரணுகதியே ஜீவநாடி என்பதும், அன்புருவாகிய அழகனைச் சரணமடைந்து, 'கைங்கரியமே புருஷார்த்தம்' என்று தொண் டாற்றுவதே உத்தம வைஷ்ணவ லட்சணம் என்பதும் ஸ்ரீவேதாந்த தேசிகரின் தேர்ந்த கொள்கை. இந்த ஆசிரியரை ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரிய மணிமாலையில் விலையற்றதொரு மணியாக மதிக்க வேண்டும்.

---

* ஒப்பிலியப்பன் சன்னிதி வங்கிபுரம் ஸ்ரீராம தேசிகாசாரியரின் பதிப்பின் ஆங்கில முன்னுரை இங்கே குறிக்கப்படுகிறது.

# 11. கடைசி ஆசாரியர்

மகம்மதியர் படையெடுப்பின் பயனாகத் தென்னிந்தியாவில் கலகங்களும் கள்ளர் பயமும் ஏற்பட்டிருந்ததால் ஸ்ரீரங்கநாத விக்கிரகத்தைப் 'பந்தோபஸ்து'ச் செய்ததுபோல் ; மற்ற முக்கிய மான திருப்பதிகளிலுள்ள பிரதான விக்கிரகங்களையும் விலையுயர்ந்த பொருள்களையும் ஒளித்துக் காப்பாற்றவேண்டியது அவசிய மாயிற்று. ஆழ்வார்திருநகரியிலுள்ள நம்மாழ்வார் விக்கிரகத்தை யும் ஆபரணங்கள் முதலியவற்றையும்பக்தர்கள் எடுத்துக்கொண்டு வெகுதூரம் போய்த் தென்மேற்கே யுள்ள உன்னதமான ஒரு மலையில் ஏறிக் காடடர்ந்த, நிர்மானுஷ்யமான பகுதியில், அகாத மான சரிவு ஒன்றைக் கண்டு விக்கிரகத்தை ஒரு பெட்டியில் வைத்துச் சங்கிலி கட்டிக் கீழே இறக்கிவிட்டார்கள். பிறகு நகை களையும் திரவியங்களையும் அங்கேயே ஓரிடத்தில் புதைத்து வைத்துத் தங்கள் இடம் போய்ச் சேர்ந்தார்கள்.

## ஆழ்வாருக்காக உயிரைக் கொடுத்தவர்

கலகம் தெளிந்த பின் அவர்கள் சங்கிலியோடும் ஊஞ்சற் பலகைகளோடும் மறுபடியும் போய் விக்கிரகத்தை எடுக்க முயன்றார்கள். ஆனால் அந்தப் பயங்கரமான பள்ளத்தாக்கில் துணிந்து இறங்கக்கூடியவர் யார்? மலைப்பாம்பு, புலி, கரடி முதலான எந்த வடிவத்தில் காத்திருக்கிறதோ ஆபத்து?

அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கண் கலங்கி யிருக்கையில், 'அதற்கென்ன? அடியேன் இறங்குகிறேன்!'

என்று ஒருவர் முன்வந்து ஊஞ்சற்பலகையில் ஏறிக்கொண்டார். மற்றவர்கள் சங்கிலியை மெள்ள மெள்ளச் சரிவிலே விட்டு மலைமீது கவலையோடு இருந்தார்கள். தோழப்பரோ கீழே இறங்கிப் பெட்டியை நெடுநேரம் தேடிக் கண்டுபிடித்துத் திறந்து பார்த்து ஆழ்வாரைச் சேவித்து மறுபடியும் பூட்டி ஜாக்கிரதையாகத் தொங்கு பலகையிலே வைத்துக் கட்டிச் சங்கிலியை அசைத்தார்.

அவர் ஓலையும் எழுத்தாணியும் கொண்டுபோய் இருந்ததால் அங்கே நடந்ததை யெல்லாம் எழுதிப் பெட்டியோடு வைத்திருந்தார். 'எப்படியோ பிழைத்திருக்கிறார்; எல்லாம் ஆழ்வார் கிருபைதான்!' என்று அவர்களும் சந்தோஷத்தோடு விக்கிரகத்தை வணங்கி எடுத்து வைத்துக்கொண்டு, தோழப்பர் திரும்பி வரும்படி மறுபடியும் பலகையைக் கீழே இறக்கினார்கள்.

சங்கிலி மறுபடியும் குலுங்க, அவர் ஏறிக்கொண்டாரென்று மேலே சாவதானமாய்த் தூக்கினார்கள். அந்தோ, வெறும் பலகைதான் வந்து சேர்ந்தது. தோழப்பர் எங்கே தட்டி விழுந்து விட்டாரோ? வேறு என்ன விபத்து நேர்ந்ததோ? 'ஐயோ, என்ன துர்ப்பாக்கியம்!' என்று முதல் முதல் அவர்களுடைய நண்பர்கள் திகிலடைந்தபோதிலும், கடைசியாக, 'ஆழ்வார் கைங்கர்யத்தில் உயிரைவிட்டவரே பாக்கியசாலி!' என்று அந்த வீரமரணத்தை விசேஷமாகக் கொண்டாடினார்கள்.

## சங்கிலித் தொடரின் பூர்த்தி

இந்தத் தோழப்பர்தான் சில பக்தர்களையும் சேர்த்துக் கொண்டு திருவாய்மொழிப்பிள்ளையின் உதவியால் வசதிகளோடு வந்து ஆழ்வார் விக்கிரகத்தை மீட்டுக்கொள்ள முயற்சி செய்தார். அந்த முயற்சியில் அவர் தம்மையே தியாகம் செய்துவிட்டாரென்று தெரிந்துகொண்ட திருவாய்மொழிப்பிள்ளை, ஆழ்வாரை மீண்டும் ஆழ்வார்திருநகரியில் பழைய உறங்காப்புளி நிழலிலே பிரதிஷ்டை செய்து தாமும் தம்முடைய அரசியல் பதவிகளைத் துறந்து ஆழ்வாருடைய கைங்கர்யத்திலும் அவருடைய சித்தாந்தத்தைப் பரப்புவதிலும் காலம் கழித்து வந்தார்.

திருவாய்மொழியில் வல்லவராயிருந்து அந்தக் கொள்கைகளை ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் பிரசாரம் செய்து வந்ததால் இவரைத் திருவாய்மொழிப்பிள்ளை யென்று வழங்கினார்கள். பிள்ளை லோகாசாரியர் விருப்பத்திற்கு இணங்க அவருக்குப் பின் ஆசாரிய பீடத்தில் அமர்ந்த இவரையும் நாளடைவில் பல சீடர்கள் அடைந்து சமய ஞானம் பெற்றார்கள். இவர் ஆழ்வார்திருநகரியிலிருந்து ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தைப் பரிபாலனம் செய்து வந்தார்.

திருவாய்மொழிப்பிள்ளை மரணத் தருவாயில் பெருங் கிலேசத்தோடு இருப்பதைக் கண்டசீடர்கள், "பரமபாகவத சிகாமணியான தங்களுக்கு மரண பயம் இருக்க முடியாதே; பின் ஏன் இந்தத் துயரம்? எங்களைத் தெளிவிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அப்போது குரு, "வேறு என்ன கவலையிருக்கிறது எனக்கு? ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களிலே மகா விசுவாசமும் ருசியும் உடையவராய் இந்தப் பக்திமதத்தை நமக்குப் பின் வளர்க்கப்போகிறவர் யார்? என்றுதான் துயரப்படுகிறது இந்த உள்ளம்!" என்று பதில் சொன்னார்.

உடனே, "அதற்கென்ன? அடியேன் இருக்கிறேன்!" என்று அந்தச் சீடர்களில் ஒருவர் முன்வந்து அடிபணிந்தார். "வார்த்தை போதுமா?" என்று திருவாய்மொழிப்பிள்ளை முகமலர்ந்து மெள்ளக் கேட்டதும், சீடர் குருவின் அடிகளைத் தொட்டுப் பிரதிக்ஞை செய்தார்.

பிறகு குரு அகமகிழ்ந்து சீடரை அருகே அழைத்து, "ஸம்ஸ்கிருத சாஸ்திரங்களிலே பலகாலும் கண் வையாமல், திருவாய்மொழி முதலான பிரபந்தங்களை ஆராய்ந்து பரவச் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாய் இரும். இனி நீர் ஸ்ரீரங்கத்தில் நித்தியவாசம் செய்துகொண்டே ஆழ்வார்களின் சித்தாந்தத்திற்குப் புதிய உயிர் அளிக்கவேண்டும்" என்று கட்டளையிட்டார்.

இவர்தாம் பின்னாளில் மணவாள மாமுனிகள் என்றும், பெரிய ஜீயர் என்றும் பிரசித்தி பெற்று, பிள்ளை லோகாசாரியரின்

வேலையைப் பூர்த்தி செய்தவர். எனவே தாமே ஒரு ரத்தினமாய் அமைந்ததோடு குருபரம்பரை என்ற சங்கிலித் தொடரில் கடைசியாக ஓர் அரிய ரத்தினத்தைக் கோத்து மாலையைப் பூர்த்தி செய்தவர் திருவாய்மொழிப்பிள்ளை என்றும் சொல்லலாம்.

## வடகலையும் தென்கலையும்

'செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்' – அதாவது தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் ஒருங்கே பெரும் பயிற்சியுள்ளவர்– என்று மதிக்கப்பெற்ற மணவாள மாமுனிகள், குருவின் ஆணைக் கிணங்க,

'தென்னரங்கர் சீரருளுக்(கு) இலக்காகப் பெற்றோம்;
திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்;
மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோம்;
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்!'

*[மாறன் கலை–நம்மாழ்வார் பிரபந்தங்கள்.]*

என்றபடி ஸ்ரீரங்கத்தில் அமர்ந்து தென்கலையாகிய தமிழ்ப்பிரபந் களைக்கொண்டே தமிழர்களை உய்விக்க முயன்றார்.

திருவாய்மொழியைத் திராவிட வேத ஸாரமென்றும், உபநிஷத்துக்குச் சமானமென்றும் பழைய ஆசாரியர்கள் கருதினர்கள். 'வடகலை'யை ஸ்தாபித்த வேதாந்ததேசிகரும் திருவாய்மொழியைத் திரமிட உபநிஷதம் (அதாவது, தமிழ் உபநிஷதம்) என்று ஒப்புக்கொள்ளுகிறார்.

'எத்திசையும் வாழ' ஆழ்வார்கள் பாடிவைத்த, 'நாலாயிரமும் எங்கள் வாழ்வே என்று ஒப்புக்கொள்ளுகிறார். எனினும் அவர் வடமொழி வேத வேதாந்தங்களை அறிவுக்கு விசேஷ உணவாகக் கொண்டார். அவற்றை விளக்கிக் காட்டப் பிரபந்தங்கள் பெரிதும் பயன்பட்டன. மணவாள மாமுனிகளுக்கோ ஞானப்பசிக்கும் நல்ல உணவு தமிழ்ப்பிரபந்தங்களே; இதயப்பசிக்கும் அவையே அமுதம்!

'ஊழிதொறும் ஊழிதொறும் உலகம்உய்ய
உம்பர்களும் கேட்டுய்ய; அன்பினுலே
வாழியெனும் பூதம்பேய் பொய்கை மாறன்
மழிசையர்கோன் பட்டர்பிரான் மங்கைவேந்தன்
கோழியர்கோன் தொண்டர்துகள் பாணன்கோதை
குலமுனிவன் கூறியநூல் ஓதி; வீதி
வாழியென வரும்திரளை வாழ்த்துவார்தம்
மலரடி,என் சென்னிக்கு மலர்ந்தபூவே.''

*[ஊழி–நெடுங்காலம். உம்பர்-தேவர்கள். உய்ய–உஜ்ஜீவிக்க. மழிசையர்கோன்-திருமழிசையாழ்வார். பட்டர்பிரான்–பெரியாழ்வார். மங்கைவேந்தன்-திருமங்கையாழ்வார். கோழியர்கோன்-குலசேகராழ்வார், தொண்டர்துகள் – தொண்டரடிப்பொடியாழ்வார். பாணன் – திருப்பாணுழ்வார். கோதை – ஆண்டாள். சென்னி-தலை.]*

என்று மணவாள மாமுனிகள் கூறுவதைக் கேளுங்கள்.

இவ்வளவும் கேட்டபிறகு தமிழ்ப்பிரபந்த விஷயமான அபிப்பிராயத்தில் வடகலையாருக்கும் தென்கலையாருக்கும் உள்ள வேற்றுமை அவ்வளவு பிரமாதமான தல்ல, சூட்சுமமானதுதான்! என்று தோன்றுகிறதல்லவா? எனினும் இந்த வேற்றுமை விதையிலிருந்து வேறு அபிப்பிராய பேதங்களும் விளைந்து விட்டன! (வேற்றுமையிலும் ஒற்றுமை கண்டு வந்த பழைய வேதாந்த மனப்பண்பு எப்படி மாறிப்போய், ஒற்றுமையிலும் வேற்றுமை காணத் தொடங்கிவிட்டது பார்த்தீர்களா?)

## சமுதாய வளர்ச்சியின் இரண்டு சக்திகள்

உதாரணமாகப் பக்தியும் பகவத் பாகவத கைங்கரியமுமே ஸந்திபாவந்தனம் முதலான வைதிக கர்மங்களைக் காட்டிலும் முக்கியமானவை யென்று தென்கலையார் கருதினுர்கள். சாமானியர்களுக்கே வைதிக கர்மங்கள் உபாயமென்றும், ஞானிகளுக்கு அவை அபாயமென்றும், அவற்றை விட்டுப் பகவானைச் சரணுகதி

செய்கிறவர்களே அவனை அடைகிருர்கள் என்றும் பிள்ளை லோகா சாரியர் சித்தாந்தம் செய்தார். தேசிகரோ, ஞானமும் சக்தியும் உள்ளவர்கள் வைதிக கர்மங்களை அனுஷ்டிக்க வேணுமென்றும் அவற்றை அக்ஞரும் அசக்தரும் விட்டால் பாதகம் இல்லையென்றும் சொல்லுகிருர்.

பகவானையே சரணமாக அடைந்து கைங்கரியம் செய்துகொண் டிருப்பதே பரம புருஷார்த்தம் என்பது வைஷ்ணவத்தின் முக்கிய மான கோட்பாடு. 'நமக்கு அறிவு இருப்பது எல்லாருக்கும் உபகாரம் செய்ய' என்று ஒப்புக்கொள்ளும் தேசிகர், 'கைங் கர்யமே புருஷார்த்தம்' என்ற கொள்கையையும் ஒப்புக்கொள்ளு கிருர். சரணுகதி அல்லது பிரபத்தி எல்லா ஜாதியினருக்கும் உரியதென்றும் ஒப்புக்கொள்ளுகிருர்; பாகவதரை ஜாதி கருதி அவமதிப்பது மன்னிக்கத்தகாத குற்றமென்றும் ஒப்புக்கொள்ளு கிருர். எனினும், 'சுரபியானுலும் கோத்வம் போகாது'—அதா வது அமிர்தத்தைக் கொடுக்கும் தெய்வப் பசுவான காமதேனு வானுலும், பசு என்ற ஜாதி போகாது—என்பது தேசிகர் கொள்கை.

பிள்ளை லோகாசாரியர் இந்தக் கொள்கையை ஒப்புக்கொள்ள வில்லை. பக்த குலம் என்ற தொண்டக்குலமே நாலு வர்ணத் துக்கும் மேலான ராஜகுலம் என்பது பிள்ளை லோகாசாரியர் கருத்து. 'அக்ஞர் பிரமிக்கிற வர்ணுச்ரம வித்யா விருத்தங்கள்' பிணத்தை அலங்கரிப்பது போல்தான்—என்றெல்லாம் ஆசார்ய ஹ்ருதயம் முதலான பிரபந்தங்களில் சொல்லியிருப்பது அபாய கரமான கொள்கை யென்று கருதினுர் தேசிகர். பிறப்பால் வரும் ஜாதி, மரணம் வரை அப்படியே இருக்கும் என்பதும், பக்த சிரேஷ்டர்களும் வர்ணுச்ரம தர்மத்தை மீறக்கூடாது என்பதும் தேசிகர் அபிப்பிராயம்.

சமுதாய வளர்ச்சியில் வளர்ச்சியை மட்டுப்படுத்தும் சக்தியை யும் பார்க்கிருேம்; வளர்ச்சியையே லட்சியமாகவுடைய சக்தியை யும் பார்க்கிருேம். இந்த இரண்டு சக்திகளையும் முறையே

'கன்ஸர்வேடிஸம்' (Conservatism) என்றும், 'லிபரலிஸம்' (Liberalism) என்றும் இங்கிலீஷில் சொல்லுகிருர்கள்.

இவை இரண்டும் சமுதாய வளர்ச்சிக்கு அவசியமானவை தாம்; இவை ஒன்றையொன்று எதிர்ப்பதும் அந்த வளர்ச்சிக்கு அவசியந்தான்! பாகவத சமுதாயத்திலும் இந்த இரண்டு சக்தி களும் வேலை செய்திருக்க வேண்டும். இவற்றுள் ஒன்று, 'வட கலை'; மற்றது, 'தென் கலை.'

தென்கலை வடிவமான சக்தியைப் பலப்படுத்திய பிள்ளை லோகாசாரியரின் வேலையைத்தான் திருவாய்மொழிப்பிள்ளை தெற்கே தொடர்ந்து செய்துகொண் டிருந்தார். அந்தச் சக்தியை மேலும் அபிவிருத்தி செய்வதற்காகவே மணவாள மாமுனிகள் ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்தார். மகம்மதியர் ஆதிக்கம் போய்க் கால மும் வசதியாக இருந்தது. பிள்ளை லோகாசாரியரின் அஷ்டாதச (பதினெட்டு) ரகஸ்யங்களும் விளைந்த நிலமாகிய அந்த ஸ்தலத் திலே துறவியாயிருந்து மணவாள மாமுனிகள் அமைதியாக ஸ்ரீவசன பூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் முதலான நூல்களுக்கும் விளாஞ்சோலைப்பிள்ளையின் சப்தகாதைக்கும் வியாக்கியானம் செய்து அவர்களுடைய கொள்கைகளை உறுதியான அடிப்படை மீது ஸ்தாபித்தார்.

### மணவாள மாமுனிகளின் மடாலயக் காட்சி

ருசியுடையவர் எல்லாரும் சரணுகதி பண்ணிப் பேறு பெறலாம் என்று பலவேறு வகுப்பினரையும் இவர் சீடர்களாகச் சேர்த்துக் கொண்டார். துரபிமானம் இல்லாத பாகவதர்களை யெல்லாம் குரு வுக்குச் சமமாக மதிக்க வேணுமென்று உபதேசித்தார். ஆசாரியன் தன்னை ஆசாரியன் என்று நினைக்கக் கூடாதென்றும், சிஷ்யன் திருந்தவேணும் என்ற நோக்கத்தோடுதான் உபதேசம் செய்ய வேணும் என்றும், சிஷ்யனிடமிருந்து பொருளும் பணிவிடைகளும் பெறலாம் என்ற நோக்கத்தோடு உபதேசிக்கக் கூடாதென்றும் பிரசாரம் செய்து அதை அனுஷ்டித்தும் காட்டினர்.

மணமுள்ள பொருளைச் சேர்ந்திருக்கும் பொருளும் மணம் பெறுவதுபோல், குணமுள்ளவர்களைச் சேர்ந்திருப்பவர்களும் குணம் பெறுவார்கள் என்று சொல்லிப் பாகவத சங்கத்தின் அவசியத்தை வற்புறுத்தினர். இவர் காலத்திலே ஸ்ரீரங்கம், 'நல்லார்கள் வாழும் நளிர் அரங்கம்' என்றும், 'தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்'' என்றும் போற்றத்தக்க பெருமைக்குப் பெரிதும் உரியதாக இருந்தது.

அங்கே, 'கடைசி ஆசாரி'ய ரென்றும், 'பொய்யிலாத மண வாள மாமுனி' யென்றும் போற்றப்பட்ட இவர் மடம் எப்படி யெல்லாம் ஞான ஒளியையும் அருளொளியையும் பரப்பிக்கொண் டிருந்தது என்பதையும், ஜாதிமுதலான வரம்புகளைப் பாராமல் ராமாநுஜரைப்போல் அவர் அருளால் இவரும் ஆசை உடைய வர்களை யெல்லாம்—துவேஷம் உள்ளவர்களையும் கூட—எப்படித் திருத்தினர் என்பதையும் பின்வரும் செய்யுள் மூலமாய் ஒருவாறு கண்டு கொள்ளலாம்;

'வாதுசெய என்றுசில வாதியர்கள் வந்தவரும்
[மனமுருகி நிற்பர் ஒருபால்;
'வாழி/ஜய/ வாழி!உல குய்ந்ததினி' என்று கழல்
[வாழ்த்தும் ஒலி கேட்கும் ஒருபால்,
'போதும்இனி வாதம்;உன பாதம்அருள்!' என்றுபுகழ்
[தந்துசிலர் நிற்பர் ஒருபால்,
'பொங்கிவரும் எங்கள்வினை மங்கஅருள்' என்றுசிலர்
[போற்றிசெய நிற்பர் ஒருபால்,
ஈதியை ஒழிக்குமறை நூற்றமிழ் தெரிந்து,சிலர்
[ஏற்றமுற வாழ்வர் ஒருபால்;
பேதமுற ஞானியர்கள் ஆதுலர்கள் பேதையர்கள்
[சூழஅடி தாழ்வர் ஒருபால்;
மாதகவி னுல்உலகம் ஏழையும் அளிக்களன
[வந்தஎதி ராஜன் அடிசேர்
மாமுனிவர் தீபம்,அரு ளாளர்மண வாளமுனி
[மன்னுமடம் வாழும் வளமே!'

*[வாதியர்கள்—தர்க்கிப்பவர். ஒரு பால்—ஒரு பக்கம். உய்ந்தது- உஜ்ஜீவித்தது; பிழைத்தது. கழல்—திருவடி. உன்—உன்னுடைய. மறை நூற்றமிழ்—தமிழ் வேதமான பிரபந்தங்கள். ஆதுலர் - ஏழைகள். மா தகவு—பெருங்குணம்; பேரொழுக்கம். எதிராசன்—ராமாநுஜர்.]*

## பிரபந்தங்களுக்கு வாழ்வைக் கொடுத்தவர்

வாதம் செய்ய வந்தவர்கள் வந்த நோக்கத்தை மறந்து அவருடைய முக வசீகரத்திலும் வாக்கு வசீகரத்திலும் ஈடுபட்டு மனமுருகி நிற்பார்களாம். வாதம் செய்துகொண் டிருந்தவர் களும் அவருடைய பொறுமையையும் ஞானத்தையும் கண்டு ஆச்சரியப்பட்டு, 'போதும், இந்த விவகாரங்களெல்லாம்; இனி உம்முடைய அருள்தான் வேண்டியது!' என்று அவர் திருவடிகளை நோக்கிக்கொண்டே நிற்பார்களாம்.

ஒருபுறம் ஜயகோஷம் செய்து, குருவை வாழ்த்திக்கொண் டிருக்கும் ஓசை காதில் விழுகிறதாம். ஒரு புறம் தங்கள் தீவினையைப் போக்கிக்கொள்ள வந்திருப்பவர்கள் கூடி நிற்கும் காட்சி தென்படுகிறதாம். வேறொரு பக்கத்தில் தமிழ்வேத பாராயணம் செய்து, பயத்தை ஒழித்து, வாழ்க்கை நடத்துகிறவர் களின் கூட்டம் காணப்படுகிறதாம். இன்னொரு பக்கத்தில் பண்டிதர்களோடு பாமரர்களும் ஞானிகளோடு அஞ்ஞானிகளும் ஆண்டிகளோடு அரசர்களும் பேதமில்லாமல் வந்து அடி வணங்குகிறார்களாம்.

இப்படி எல்லாம் சோபிக்கின்றனவாம், முனிவர்களுக்கும் தீபமாக விளங்கும் அருளாளரான மணவாள மாமுனிகளின் மடாலயத்திலே வாழ்வும் வளமும்! இப்படிப்பட்ட மங்கள தீபம் என்றும் வாடா விளக்காக இருக்க வேணும் என்று ஆசைப் பட்டவர்கள்,

'அடியார்கள் வாழ, அரங்க நகர்வாழச்
சடகோபன் தண்டமிழ்நூல் வாழக்,—கடல்சூழ்ந்த

மண்ணுலகம் வாழ மணவாள மாமுனியே!
இன்னம்ஒரு நூற்றாண்(டு) இரும்!'

*[சடகோபன்—நம்மாழ்வார். தண்டமிழ் நூல்—உள்ளத்தைக் குளிர்விக்கும் தமிழ்ப்பிரபந்தம்.]*

*என்று ஆசைதீர மனம் குளிர்ந்து வாழ்த்தினார்கள். அவருடைய வாழ்வே பிரபந்தங்களுக்கும் வாழ்வு என்று கண்டு,*

'...............................மணவாள முனி
தோற்றியபின் னல்லவோ, தமிழ்வேதம் துலங்கியதே?'

*என்று குதூகலம் அடைந்தார்கள். ஆழ்வார் விக்கிரகத்தை மீட்டுப் பிரதிஷ்டை செய்யத் தோழப்பர் உயிரைக் கொடுத்தார் அல்லவா? மணவாள மாமுனிகளோ தமது வாழ்வையே கொடுத்து, ஆழ்வார் பிரபந்தங்களான தமிழ்வேதத்தைப் பிராணப் பிரதிஷ்டை செய்து வைத்தார்.*

* * *

*ஆழ்வார் திருநகரிக்கு அருகிலுள்ள சிக்கில்கிடாரம் என்னும் கிராமத்தில் பிறந்து ஸ்ரீரங்கத்தில் சிறப்பாக வாழ்ந்தவர் மணவாள மாமுனி. இவர் ஸ்ரீரங்கத்தில் வசித்திருந்த மடம் சன்னிதியாகி, இவரது பரம்பரையினரால் பரிபாலிக்கப் பெற்று வருகிறது. இவர் காலட்சேபம் செய்துவந்த மண்டபம் அண்மையில் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது.*

*மணவாளமாமுனியை, 'மன்னுபுகழ் மாமுனிவன்' என்றும் கூறுவது உண்டு. இவரைப் 'பெரிய ஜீயர்' என்றும் 'வரயோகி' என்றும், 'வர வர முனி' என்றும் 'ராமாநுஜரின் பொன்னடி' என்றும் பல பெயர்களால் வழங்குகிறார்கள். அழகிய மணவாளர் என்பது இவரது பிள்ளைப் பெயர்.*

*இவருடைய மேனி வெண்ணிறமாக இருக்குமென்றும் ஆகவே, இவரை, 'வெள்ளை ஜீயர்' என்று கூறுவது உண்டென்றும், 'ஜீயர்' என்று கூறுவதும் உண்டென்றும் சொல்லுகிறார்கள். முதலாவது வானமாமலை ஜீயர் முதலான எண்மர் இவருடைய சீடர்கள். இவர்களை, 'அஷ்டதிக்கஜங்கள்' என்று சிறப்பித்துப் பேசுகிறார்கள்.*

## 12. பிரபந்தங்களும் வியாக்கியானங்களும்

'ஆழம் தெரியாமல் இறங்கிவிட்டோமோ? சரி; அதனுல் என்ன ? கொஞ்ச தூரந்தானே; நீந்திடலாம்' என்று எண்ணி, ஏடுகளைத் தலையிலே சேர்த்துக் கட்டிக்கொண்டு ஜாக்கிரதையாகப் போகிறுர் வரதராஜர். எதிர்பாராத நிலையில் காவேரியிலே தண்ணீர் அதிகரித்துக்கொண்டு வருகிறது, சுழிகளும் அலைகளுமாக. இவரோ நீச்சலடிப்பதில் வல்லவரான தால் அந்த வெள்ளத்தை லட்சியஞ் செய்யாமால் கடந்துபோய் அக்கரையில் ஏறிவிடுகிறுர்.

ஆனுல் அப்படித் தம் உயிரைக் காப்பாற்றிக்கொண்டதில் இப்போது திருப்தி இல்லை. ஓர் அலை வந்து அந்த ஏடுகளை அடித்துக்கொண்டு போய்விட்ட தல்லவா ? குரு எவ்வளவோ சிரமப்பட்டு எழுதிவைத்திருந்த அருமையான நூல். வேறு பிரதி யும் கிடையாதே; அந்த நூலுக்காக உயிரையும் கொடுத்திருக் கலாமே!

### ஒரு வியாக்கியானத்தின் மறுபிறப்பு

வரதராஜர் பெருந் துயரத்தோடு தென்கரையிலுள்ள தமது ஊருக்குப் போய் உணவுகொள்ளாமல் படுத்துக்கொண்டார், 'இவர் எழுத்து முத்தைப்போல இருக்கிறது; நன்ருகப் பிரதி செய்துகொண்டு வருவார்; ஆயினும் திருவாய்மொழி வியாக்கி யானம் அல்லவா ?' என்று குரு யோசனையில் ஆழ்ந்ததும், தாம் அந்தக் குறிப்பறிந்து, 'அடியேனையும் தங்கள் உள்ளத்துக்கு இசைந்தபடியே திருத்திப் பணிகொள்ள லாகாதோ ?' என்று

பிரார்த்தித்ததும் அவர் விசேஷ கடாட்சம் செய்து தம்மைப் பாகவத ராக்கி அந்த வியாக்கியானத்தை வாசித்துக் காட்டி, 'இப்படியே தப்பாமல் எழுதித் தாரும்' என்று ஏட்டைக் கையிலே நம்பிக் கொடுத்ததும், தாம் ஊருக்குப் போய் எழுதிவருவதாக வாக்களித்ததும் அவருடைய ஞாபகத்தில் மாறி மாறி வந்து கொண்டே யிருந்தன.

'இனி நாம் என்ன செய்யலாம்?' என்ற கவலையில் முழுகிச் சோர்ந்து தம்மை மறந்திருக்கையில், 'ஏன் காணும் துக்கப்படுகி றீர்? இவ்வளவுதானு உம்முடைய பக்தியும் விசுவாசமும்? குருவை நினைத்துக்கொண்டு எழுத ஆரம்பித்தால், நாமே அந்த நினைவிலிருந்து காரியசித்தி செய்துவைக்க மாட்டோமா?' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக்கொண்டாராம்.

அஸாதாரணமான தம்முடைய ஞாபகசக்தியைக் குறித்துப் பகவானே அந்த விதமாக ஞாபகப்படுத்தி வைத்தாரென்று சந்தோஷித்துப் பொழுது புலர்ந்ததும், வரதராஜர் குரு சொன்ன பொருளொன்றும் தப்பவிடாமலே இயன்ற வரையில் அந்த வியாக்கியானத்தை எழுதிப் பார்க்கலாமென்று துணிந்தார்.

எழுதி முடிந்ததும் சீடர் ஸ்ரீரங்கம்போய் ஆசாரியரான நஞ்சீயரை அடைந்து, பயபக்தியோடு தாம் கொண்டுவந்த பிரதியைக் காட்டினர். அவர் ஜாக்கிரதையாக வாசித்துப் பார்த்தார். ஆம்; தாம் செய்த வியாக்கியானந்தான்; சந்தேகமே இல்லை; ஆனல் பல இடங்களிலும் விசேஷமான அர்த்தங்கள் காணப்படுகின்றனவே! இந்த அர்த்தங்கள் நம்மாழ்வாருடைய பாசுரங்களுக்கு மிகவும் பொருத்தமாயிருக்கின்றன.

இவ்விதமாக நஞ்சீயர் எண்ணமிடுகையில், வரதராஜர் நெஞ்சு படபடக்க, 'அவர் என்ன சொல்லப் போகிருரோ?' என்று ஆவலோடு எதிர்பார்த்த வண்ணமாக இருந்தார். கொஞ்ச நேரம் கழிந்ததும், "நீர் பயப்பட வேண்டாம்; உண்மையைச் சொல்லும்!" என்று குரு கேட்கச் சீடரும் நடந்ததை விண்ணப்பஞ்

செய்து, தாம் எழுதியதில் தவறுகள் இருந்தால் மன்னித்துத் திருத்திக்கொள்ள வேணுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்.

குருவோ அந்தப் புத்தி விசேஷத்தைக் கொண்டாடி, "மகா சமத்தர்; நன்றாக எழுதினீர்; வாக்கியங்களும் பொருள்களும் முன்னிலும் அழகாக இருக்கின்றன?" என்று சீடரை வாரி எடுத்து அணைத்துக்கொண்டு, "நீர் **நம்பிள்ளை** (நம்முடைய பிள்ளை)!" என்று குதூகலப்பட்டார். அன்று தொடங்கி வரதராஜர், நம்பிள்ளை என்று பெயர்பெற்று, அறிவிலும் குணத்திலும் பிதாவுக்கும் மேலான ஸத்புத்திரனைப்போல விளங்கினர். இவ்விதமாக வெளிப்பட்ட வியாக்கியானத்தை வைஷ்ணவர்கள், 'ஒன்பதினுயிரப்படி' (ஒன்பதினுயிரம் * கிரந்தமுள்ளது) என்று சொல்லுகிறார்கள்.

## மற்ற வியாக்கியானங்கள்

இதற்கு முன் ராமாநுஜர் தம்முடைய சிஷ்யர் ஒருவரைக் கொண்டு திருவாய்மொழிக்கு, 'ஆறுயிரப்படி' வியாக்கியானம் ஒன்று செய்வித்தார். ராமாநுஜர் வேதாந்த சூத்திரங்களுக்கு வடமொழியில் செய்த **ஸ்ரீபாஷ்யம்** என்ற பேருரையும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியைத் தழுவியதுதான் என்பது ஆசாரியர்களின் கருத்து. 'பாஷ்யக்காரரும் சூத்திர வாக்கியங்களை இது கொண்டு ஒருங்கவிடுவர்' என்று ஒரு பிரபல ஆசாரியர் கூறுவதைக் கேளுங்கள்.

ஸ்ரீபாஷ்யத்தையும் மற்ற வடமொழிப் பிரமாண நூல்களையும் காஞ்சீபுரத்திலிருந்து பிரசாரம் செய்துகொண் டிருந்த ஆசாரிய பரம்பரையை நாளடைவில் **வடகலை**யென்றும், திருவாய்மொழி வியாக்கியானங்களையும் மற்றப் பிரபந்தங்களின் வியாக்கியானங்களையும் ஸ்ரீரங்கத்திலிருந்து பிரசாரம் செய்துகொண் டிருந்த ஆசாரிய பரம்பரையை நாளடைவில் **தென்கலை**யென்றும் குறிப்பிடுவது வழக்கமாயிற்று.

* கிரந்தம்—உயிரும் உயிர் மெய்யுமான 32.

நஞ்சீயர் செய்த வியாக்கியானத்தை நம்பிள்ளை எழுதி வைத்ததுபோல், இவருடைய சீடர் ஒருவர் இவர் சொல்லிக் கொண்டிருந்த பொருள்களையும் தப்பாமல் கேட்டு ஞாபகத்தில் கொண்டு ஒவ்வொரு நாளும் இரவில் எழுதிவைத்தார். அப்படி எழுதி முடித்ததை அந்தச் சீடர் நம்பிள்ளையிடம் காட்டி, "தாங்கள் சொன்னபடியே எழுதியிருக்கிறேன்; கால், கொம்பு, சுழிகளில்கூட நான் கூட்டவுமில்லை; குறைக்கவுமில்லை!'' என்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்.

நம்பிள்ளையோ ஏடுகளைப் பிரித்துப் பார்த்துவிட்டு, "இவ்வளவு விரிவாகச் செய்தும் நாம் வாயாலே சொன்னதைத்தானே எழுதினீர்: நம்முடைய இதயத்தை அறிந்து ஒன்றும் எழுதவில்லையே! இப்படி நம்மையும் கேளாமல் சிஷ்பாசாரியக் கிரமமில்லாமல் எழுதப்பட்டிருக்கும் இந்த நூலால் என்ன பிரயோஜனம் ஏற்படப்போகிறது ?'' என்று சொல்லிக்கொண்டே அந்தக் கிரந்தங்களில் தண்ணீரைச் சொரிந்து கறையானுக்கு விருந்தாகக் கொடுத்தார்.

அவருடைய சிஷ்பரில் வேறொருவரான வடக்குத் திருவீதிப் பிள்ளை என்பவரும் இவர் திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்வதை இவர் அறியாமலே எழுதி வைத்திருந்தார். இது சுருக்கமாகவும் இல்லாமல் அதிவிஸ்தாரமாகவும் இல்லாமல் அமைந்திருக்கிறது என்று தீர்மானித்த குரு, "நன்றாக எழுதப்பட்டிருக்கிறது; எனினும் அனுமதியில்லாமல் செய்யப்பட்டதே!'' என்று சொல்லி ஏட்டைக் கட்டி தமது மடத்திற்குள்ளே வைத்துக் கொண்டார்.

இதுதான் பின்னாளில், 'ஈடு முப்பத்தாறாயிரப்படி' என்று பிரசித்திபெற்ற வியாக்கியனமாக வழங்கத் தொடங்கியது. இந்த வியாக்கியானம் எழுதிய வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரர்தான் பிரசித்திபெற்ற பதினெட்டு ரகஸ்ய கிரந்தங்களின் ஆசிரியரான பிள்ளை லோகாசாரியர்.

நம்பிள்ளைக்குப் பிரிய சிஷ்யராய் ஆசாரிய நியமனமும் பெற்று அந்த இருதயமும் தம்முடைய மேதாவிலாசமும் ஒருங்கே பிரதி

பலிக்கும்படி வியாக்கியானம் செய்தவர்தான் வியாக்கியான சக்கரவர்த்தியென்று கொண்டாடப்பெறும் பெரியவச்சான்பிள்ளை. இந்த வியாக்கியானம், 'இருபத்து நாலாயிரப்படி' என்ற பெயரோடு மிகவும் பிரசித்தமாக விளங்குகிறது.

திருவாய்மொழிக்கு வியாக்கியானம் செய்திருப்பதுபோல் பெரியவாச்சான்பிள்ளை மற்றப் பிரபந்தங்களுக்கும் வியாக்கியானம் செய்தார். பெரியவாச்சான்பிள்ளையின் சீடர்களில் ஒருவரான வாதிகேசரி அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் என்பவரும் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்திருக்கிறார்.

## உலக்கையும் கொழுந்துவிட்டது

இந்த ஜீயர் முப்பத்திரண்டாம் வயது வரை அக்ஷராப்யாஸமே யில்லாமல் திரிந்துகொண் டிருந்தாராம். ஒரு சமயம் சாஸ்திர பரிசீலனம் செய்துகொண் டிருந்தவர்களைப் பார்த்து, "நீங்கள் இப்போது படிக்கிற தென்ன?" என்று கேட்டார். அவர்கள் "முஸல கிஸலயம் * படிக்கிறோம்!" என்று சிரிக்காமல் பதில் சொன்னார்கள்.

முஸல கிஸலயம் என்ற சாஸ்திரம் எதைக் குறித்துச் சொல்லுகிறதென்று இவர் பெரியவாச்சான்பிள்ளையைக் கேட்க, அவர் இரங்கி, "உலக்கையும் கொழுந்துவிடுமோ? ஐயோ? உம்மை அறிவற்ற தடியர் என்றல்லவா அந்தச் சாஸ்திரிமார் பரிகசித்து விட்டார்கள்?" என்று வருத்தப்பட்டார்.

உடனே அவர் ரோசத்தோடு கண்ணும் கண்ணீருமாய்ப் பெரியவாச்சான்பிள்ளை அவர்களின் அடிகளில் விழுந்து, "அடியேனும் வித்வானாகும்படி கடாக்ஷிக்க வேணும்!" என்று பிரார்த்தித்தார். அந்த வயதிற்கு மேல் அவருக்குப் பெரியவாச்சான்பிள்ளை அரிச்சுவடி கற்பிக்கத் தொடங்கிக் காவியம், நாடகம், தர்க்கம், வியாகரணம், வேதம், வேதாந்தம், முதலான கலைகளையெல்லாம் ஒழுங்காகக் கற்பித்தாராம்.

---

* முஸல கிஸலயம்—உலக்கைக் கொழுந்து, உலக்கையின் தளிர்.

இவரும் மகாவித்வானுய், சாஸ்திர நிபுணராய் 'முஸல, கிஸலயம்' என்று ஒரு காவியம் செய்து, தம்மைப் பரிகசித்தவர்கள் கையிலே கொடுத்து, அவர்களை யெல்லாம் வாய்மூடித் தலைகவிழச் செய்தாராம். பிறகு மகா விரக்தராய்த் துறவு பூண்டு, சில வைஷ்ணவ கிரந்தங்கள் செய்து, கடைசிபாகத் திருவாய் மொழியின் பழைய வியாக்கியானங்களை யெல்லாம் பரிசீலனை செய்து அவற்றின் சாரமான அர்த்த விசேஷங்களைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் வெளியிட்டுப் 'பன்னீருயிரப்படி' என்ற தம் முடைய வியாக்கியானத்தைச் செய்து முடித்தாராம்.

## பகவத் விஷயம்

திவ்யப் பிரபந்தங்களில் முக்கியமான திருவாய்மொழியை 'பகவத் பிரபந்தம்' என்றும், இதற்கு ஏற்பட்டிருக்கும் வியாக்கி யானங்களின் தொகுதியை, 'பகவத் விஷயம்' (அதாவது, பகவானைக் குறித்துச் சொல்லும் விஷயம்) என்றும் சொல்வது உண்டு. பகவத் விஷயம் பொதுவாக வேதம், இதிகாசம், புராணம் முதலான நூல்களிலும் மற்றப் பிரபந்தங்களிலும் காணப்பட்ட போதிலும், திருவாய்மொழியையும் அதன் வியாக்கியானங்களையுமே, 'பகவத் விஷயம்' என்று சிறப்பித்துப் பேசுகிருர்கள் வைஷ்ணவர்கள்.

தாமிரபருணி யாறு அகஸ்திய பர்வதமான பொதிகை மலையில் தோன்றி மண்ணுடின நீரோடு புரண்டு வந்து ஆழ்வார் திருநகரியில் ஸ்படிகம்போலத் தெளிந்த தீர்த்தமாவதுபோல், சாமானிய வைதிகர்களால் கலக்கப்பட்ட வேதம் ஆழ்வாருடைய உள்ளத்திலே விழுந்து, தெளிந்து, ஆழ்ந்த பொருளை அறிவிக்கிற தென்பது வைஷ்ணவ ஆசாரியர்களின் கொள்கை. இத்தகைய சிறப்புவாய்ந்த திருவாய்மொழியின் பெருமை பெரிதோ, இதன் வியாக்கியானங்களின் தன்மை பெரிதோ?—என்று சந்தேகிக்கும் படி அவ்வளவு சிலாக்கியமாக அமைந்திருக்கின்றன வியாக்கி யானங்கள்.

திருவாய்மொழிக்கு, வடகலை சம்பிரதாயத்தை ஸ்தாபித்த வேதாந்ததேசிகரும் விரிவாக வியாக்கியானம் ஒன்று எழுதி

யிருந்தார். அது இப்போது கிடைக்கவில்லை. இவர் திருப்பாணாழ் வாரை, 'நம் பாணநாதன்' என்று அபிமானித்து அவருடைய பிரபந்தத்திற்கும் வியாக்கியானம் செய்திருக்கிறார்.

திருவாய்மொழிக்கு, 'பதினெண்ணாயிரப் படி' என்ற வடகலை வியாக்கியானமும் உண்டு. இது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கி யானத்தின் ஸாராம்சங்கள் சிலவற்றை எடுத்துக்கொண்டு வேறு சிலவற்றையும் சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது. திருவிருத்தம் முதலான வேறு பிரபந்தங்களுக்கும் வடகலை வியாக்கியானங்கள் உண்டு; இந்தப் பிரபந்தங்களுக்குத் தென்கலை வியாக்கியானங் களும் உண்டு.

## வியாக்கியானப் பெருமையும் பிரபந்தங்களின் பெருமையும்

இப்படி வியாக்கியானங்கள் பலவாகக் காணப்பட்ட போதி லும், பெரியவாச்சான்பிள்ளை ஒருவரே எல்லாப் பிரபந்தங்களுக் கும் சுருக்கமும் பெருக்கமும் இல்லாமல் மிகவும் அழகான வியாக்கி யானங்களை இயற்றியிருக்கிறார். மற்ற வியாக்கியானங்களைக் காட்டிலும் இவை அருமையான ஆழ்பொருள் உடையன.

இதற்கு ஓர் உதாரணமாக, முதலாழ்வாரான பொய்கை யாழ்வாரின் முதல் திருவந்தாதிக்குப் பெரியவாச்சான்பிள்ளை செய்திருக்கும் வியாக்கியான முன்னுரையில், * '"இன் கவி பாடும் பரம கவிகள்'—'செந்தமிழ் பாடுவார்' — என்னும் இவர்கள் அவதரித்தது ஒரே தேசங்களிலே யாகிலும், ஞானப் பெருமையாலே இன்ன இடத்தவரென்று நிச்சயிக்கப் போகாதிறே" என்ற வாக்கியத்தை எடுத்துக்கொள்வோம்.

முதலாழ்வார்களில் பொய்கையாழ்வார் காஞ்சீபுரத்திலும், பூதத்தாழ்வார் மகாபலிபுரத்திலும், பேயாழ்வார் மயிலாப்பூரிலும் அவதரித்தார்களென்று குருபரம்பரைகள் தெரிவிக்கின்றன.

* இது பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியர் எடுத்துக் காட்டியிருக்கும்—பழைய ஏட்டுப் பிரதிகளிலுள்ள—பிழையற்ற பாடம்; அச்சுப்பிரதிகளில் அச்சுப் பிழைகளோடு காணப்படுகிறது.

எனினும் இவர்களுடைய ஞானப்பெருமையைப் பார்த்தால் இவர்களை இன்ன ஊர்க்காரர்தாம் என்று நிச்சயிக்க முடியாது என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை. 'யாதும் ஊரே! யாவரும் கேளிர் (உறவினர்)!' என்றபடி உலகமே இவர்களுக்கு ஊர்; எல்லாரும் இவர்களுடைய ஊர்க்காரர்!' என்றுதான் சொல்ல வேண்டுமாம்.

இன்னும் பார்த்தால்,

**'வைகுந்தமோ, வையமோ, நும் நிலையிடமே?'**

*[வையம்—பூலோகம். நும்—உங்களுடைய.]*

என்றுகூடச் சந்தேகிக்கவேண்டி யிருக்கிறதாம். முதலாழ்வார்களும் நம்மைப்போல் இந்த லோகத்தில் சஞ்சரித்தது என்னவோ, வாஸ்தவந்தான்! ஆனால் அவர்களுடைய சஞ்சார ஸ்தலம் பூமியே ஒழிய நிலையான விலாசம் (Address) பரமபத ராஜ்யமாகத்தான் இருக்க வேண்டும்—என்று சங்கைகொள்ளும் படி யிருக்கிறதாம், ஸ்ரீவைஷ்ண ஞானதீபத்தை முதல் முதல் ஏற்றி அஞ்ஞான இருளைப் போக்கிய அந்த மகிமையை யோசிக்கும்போது.

இவ்வளவு ஞானப்பெருமை வாய்ந்தவர்களுக்குக் கவிஞர் என்ற பெருமையும் உண்டு என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை. 'இன்கவி பாடும் பரமகவிகள்' என்று நம்மாழ்வாரும், 'செந்தமிழ் பாடுவார்' என்று திருமங்கையாழ்வாரும் முதலாழ்வார்களைத் தான் சிறப்பித்துக் கூறுகிறார்கள் என்பது இந்த உரையாசிரியர் கருத்து.

முதலாழ்வார்களில் பொய்கையாழ்வாரைக் 'கவிஞர் போரேறு'-அதாவது, கவிகளுள் சிங்கம் போன்றவர்-என்று குறிப்பிடுகிறார் ராமானுஜருடைய அந்தரங்க சீடர்களில் ஒருவரான முதலியாண்டானும்.

**'சேவடியை நீட்டித் திசைநடுங்க, விண்துளங்க,**
**மாவடியின் நீஅளந்த மண்'**

*[சேவடி—சிவந்த அடி. விண்—ஆகாசம். துளங்க—அசைய. மாவடிவு—பெரிய ரூபம்.]*
*என்றும்,*

**'அடியும் படிகடப்பத் தோள்திசைமேல் செல்ல,**
**முடியும் விசும்பளந்த தென்பர்'**

*[படி—பூமி. கடப்ப—கடந்து செல்ல. விசும்பு ஆகாசம்.]*

*என்றும், மகாவிஷ்ணு உலகமளந்ததை வருணிக்கும் பொய்கை யாழ்வார் கவிஞரல்லவா? இந்தக் கவித்துவ சக்தியை,*

**'நின்றதோர் பாதம் நிலம்புதைப்ப, நீண்டதோள்**
**சென்றளந்த தென்பர், திசையெல்லாம்'**

*என்று இதே விஷயத்தை வ்ருணிக்கும் பூதத்தாழ்வார் வாக்கிலும்*

**'படிவட்டத் தாமரை பண்டுலகம் நீரேற்று**
**அடிவட்டத் தால்அளப்ப, நீண்ட—முடிவட்டம்**
**ஆகாயம் ஊடறுத்(து) அண்டம்போய் நீண்டதே!**

*[படிவட்டத்தாமரை—தாமரைப் பூவைப் போன்ற பூமி. பண்டு—முற்காலத்தில். நீர்—தானத்திற்கு அறிகுறியான நீர். அடிவட்டம்—திருவடி. முடிவட்டம்—கிரீடம்.]*

*என்ற பேயாழ்வார் வாக்கிலும், ஒருவாறு காணலாம். பேயாழ்வார்,*

**'வந்துதைத்த வெண்திரைகள் செம்பவள வெண்முத்தம்**
**அந்தி விளக்கும் அணிவிளக்காம்'**

*[உதைத்த—தள்ளுகிற. திரைகள்—அலைகள்.]*

*என்று திருவல்லிக்கேணிக் கடற்கரையை வருணிப்பதிலும் கவிஞரின் மனோபாவம் வெளிப்படுகிற தல்லவா? ஞானத்தைக் கலையாக்கினர்கள் என்பது உரையாசிரியர் குறிப்பென்று ஊகிக்கலாம்.*

*ஆனல் கவித்வ சக்தி, தொண்டரடிப்பொடி யாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரர் ஆகிய நால்வரிடத்திலும்*

தான் அதிக அளவில் காணப்படுகிறது. இவர்களிலும், கவிக் கிரீடம் குலசேகரருக்கே உரியதென்று சொல்லலாம். எனினும் ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாரும் நம்மாழ்வாருமே விசேஷ மாகப் பிரசித்தி பெற்றவர்கள். இவர்களிடத்திலும் கவித்வ சக்தி இல்லையென்று சொல்லமுடியாது.

இவர்களும் தங்கள் ஞானபக்தியைக் கலையாக்கித் தருகிருர்கள். இந்தக் 'கலைவெள்ள'த்திலே நீந்திக் கரை கண்டவர்கள் பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் செய்த ஆசாரியர்கள். இந்த வியாக்கியானங்களில் ஆழ்வார்களின் இருதயத்தோடு நாதமுனிகள் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களின் இருதயத்தையும் பார்க்கிருேம்.

## 13. வியாக்கியான சக்கரவர்த்தி

தெருவெல்லாம் நீர் தெளிப்பதும் தோரணம் கட்டுவதுமாக இருக்கிறார்கள். நகரமெல்லாம் திவ்யமாக அலங்கரிக்கப் படுகிறது. மேளங்கள், தாளங்கள், சங்குகள், சின்னங்கள் முதலான வாத்தியங்கள் கோஷிக்கின்றன. இன்று என்ன விசேஷம்? என்ன கூட்டம்! வைஷ்ணவர்களும் ஜீயர்களும் திரள் திரளாக வருகிறார்களே! அவர்களுக்கிடையே அந்த அழகான ரதத்தில் ஒரு சக்கரவர்த்தியைப்போல் வருகிறவர் யார்? அவருக்குத்தான் எவ்வளவு மரியாதை! தூபம் காட்டுகிறார்கள்; ஆரத்தி எடுக்கிறார்கள்; மங்களம் பாடுகிறார்கள்; ஜயகோஷம் செய்கிறார்கள். அவர்மீது மேல்மாடங்களிலிருந்து பூமழை பெய்கிறார்கள்.

கூட்டம் கோபுரவாசலை அடைந்ததும், உள்ளே யிருந்து எதிர்கொண்டு வந்தவர்கள், ரதத்திலிருந்து இறங்கியவரை—ஆம் வியாக்கியான சக்கரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளையைத் தான்—முகமலர்ச்சியோடு அழைத்துக்கொண்டு போகிறார்கள். சரி; ஸ்ரீரங்கநாதனுடைய கோவிலுக்குள்ளேதான்.

அவரோடு வந்த பல்வேறு வகுப்பினரான பாகவதர்களும்—ஆண்களோடு பெண்களும், ஆண்டிகளோடு அரசர்களும் வித்தியாசமில்லாமல்—உள்ளே போகிறார்கள். 'ஆம் நாமும் போவோம்!' என்று அந்தக் கூட்டத்தோடு போக முயல்கிறார் ஒரு பிராமண ஸ்ரீவைஷ்ணவர். வேத சாஸ்திர நிபுணர்; எனினும் துவாரபாலர்கள், "விடமாட்டோம்!" என்கிறார்கள்! "ஏன்?" என்று திடுக்கிட்டு விழித்துக்கொண்டார் அந்த ஸ்ரீ வைஷ்ணவர்.

## கதையும் புதைபொருளும்

மறுநாள் கவலை தோய்ந்த முகத்தினராய் அவர் பெரிய வாச்சான்பிள்ளையைப் பார்க்கப் போனார். நோயுற்றிருந்த அந்தப் பெரியார் அந்த நண்பரை அன்போடு பக்கத்தில் அமரச்செய்து, "நாம் வந்த காரியம் ஆகிவிட்டது; பரமபதம் போகிறோம்!" என்று ஏதோ ஒரு ஸ்தல யாத்திரைக்குச் சன்னத்தராக இருப்பதுபோல் அமைதியாக மெள்ளப் பேசினார். அதற்கு அவரும், "தாங்கள் சகல வைபவங்களோடும் போய்க் கோவிலுக்குள்ளே பிரவேசிப்பதாகக் கனா கண்டேன்!" என்று சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை அவரைக் கையாலே அணைத்துக் கொண்டு, "இப்போது நீர் சொன்ன நல்ல செய்திக்கு என்ன பிரதியுபகாரம் செய்யப்போகிறேன்?" என்று புளகாங்கிதரானார். அவரோ கவலையோடு அந்தக் கனவிலே வாசல் காப்பவர் தம்மைச் சன்னதிக்குள் விடவில்லை யென்று தெரிவித்துக் கொண்டார்.

பிறகு பெரியவாச்சான்பிள்ளை கொஞ்சம் யோசனை செய்து, "நீர் கண்ணைக் கட்டிக்கொண்டு போய் அங்கேயுள்ள விக்கிரகங்களில் ஒன்றை எடுத்து வரவேணும்" என்று அந்த ஸ்ரீ வைஷ்ணவரைக் கருணையோடு நோக்கி ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினாராம். அவரும் அப்படியே செய்து தமக்குக் கிடைத்த திருப்பாணாழ்வார் விக்கிரகத்தைப் பெரியவாச்சான்பிள்ளையிடம் காட்டினாராம்.

அப்பால் பெரியவாச்சான்பிள்ளை, "நல்லது, அன்பரே! உம்முடைய நெஞ்சை நீர் சோதித்துப் பார்த்துக்கொள்ள வேணுமென்றே பகவான் இப்படிக் கிருபை பண்ணினான். ஜாதி கர்வத்தால் உமக்கு ஏற்பட்ட அபசாரங்களுக் கெல்லாம் பச்சாத்தாபம் அடைந்து, பஞ்சமர் என்று கருதப்பட்ட இந்த ஆழ்வாரை ஆராதிப்பதே பிராயச்சித்த மாகும்" என்று அவர் சொன்னாராம்.

இது பழநடை விளக்க*மென்னும், "மூவாயிரப்படி குரு பரம்பரா ப்ரபா்வம்' என்ற நூலில் காணப்படுகிறது. கதை பெரியவாச்சான்பிள்ளையின் பெருமையை அழகாக வெளியிடு கிறது. ஆழ்வார்களுடைய பிரபந்தமென்ற பக்திப் பூங்கோயி லுக்கு ரட்சையாக ராமானுஜர் ஸ்ரீபாஷ்யமென்ற ஞானக்கோட்டை கட்டினரென்றால், பெரியவாச்சான்பிள்ளை தமது வியாக்கியான மென்ற அதிசயமான அகழியை வெட்டி வைத்தாரென்று சொல்லலாம்.

எனவே, 'விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திலே யிருந்து ஸ்ரீ வைஷ்ணவர்களாக இருக்குமவர்களுக்குத் திருப்பல்லாண்டு முத லான திவ்யப்பிரபந்தம் ஒழியே வேறு கதியில்லை. பூர்வாசாரிய ஸம்பிரதாய பரம்பரையாலே திவ்யப்பிரபந்த தாத்பரியங்களை அறிகைக்குப் பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின வியாக் யானங்களை யொழிய வேறு கதியில்லை. ஆகையால் ஸ்ரீ வைஷ்ண வர்கள் எல்லாரும் பெரியவாச்சான்பிள்ளை சம்பந்தம் பெற்று அவருக்குச் சிஷ்யகோடியா யிருப்பார்கள்' என்று பழநடை விளக்கம் சொல்லுகிறது. இத்தகைய ஒப்பற்ற கைங்கர்யத்தைச் செய்து முடித்த பெரியார், 'வந்த காரியம் பூர்த்தியாகிவிட்டது!' என்ற சித்த சமாதானத்தோடு தமது 95-ஆவது வயதில் மரணத்தை எதிர்நோக்கி யிருந்தார் என்று கருதுவதில் ஆச்சரியம் இல்லை.

வாதப் பிரதிவாதங்களை விட்டு நாம் இக்கதைப் போக்கை மாத்திரம் நோக்கினால், பெரியவாச்சான்பிள்ளையின் வாழ்க்கையை யும் வியாக்கியானத்தையும் நன்றாக அறிந்தவர்களே கதையை அமைத்தார்கள் என்பதை ஊகித்தல் கூடும். இவர் வாழ்க்கையின் ஸாரத்தையும் நாம் இப்போது இவருடைய வியாக்கியானத்தி லிருந்துதான் ஊகித்து உணர முடியும். இந்த வியாக்கியானம் சாமானிய உரையன்று; இதிலே இவருடைய ஜீவநாடி துடிக்கிற தென்று சொல்லலாம்.

---

* பழநடை விளக்கம்: அநேக வித்வான்கள் பரிசோதித்துக் கி. பி. 1895-இல் வெளியிடப்பட்டது; பக்கம் 53-57.

எனவே வியாக்கியானத்தைப் பார்த்து, அதன் மூலமாக இவர் குணநிசயத்தையும் உற்று நோக்கினால், ஜாதி கர்வம் முதலான குற்றங்களையும் மரண பயம் முதலான பயங்களையும் ஒழித்துக் கைங்கரிய நெறி என்ற ராஜமார்க்கத்தில் சென்று கொண்டிருப்பதே இவர் வாழ்க்கையில் தனிப்பெரு நோக்காமக இருந்திருக்க வேணுமென்று தீர்மானிக்கலாம். இந்த உண்மைக் குத்தானே கதையும் ஓர் அழகான வடிவம் கொடுத்திருக்கிறது.

## கைங்கர்ய லட்சணம்

இந்த உண்மையை வியாக்கியான சக்கரவர்த்தி தமது வியாக்கியானங்களில் பல இடங்களிலும் குறிப்பாகவும் வெளிப் படையாகவும் காட்டுகிறார். ஆதிசேஷன் பகவானுக்கு மெத்தை யாகவும் குடையாகவும் சிங்காசனமாகவும் பாதரட்சைபாகவும் தெப்பமாகவும் ரத்தின தீபமாகவும் பூம்பட்டாகவும் இருக்கிறான் என்று பொய்கையாழ்வார் பாடுகிறார் அல்லவா? அதுவே **கைங்கரிய லட்சணம்** என்பது பெரியவாச்சான்பிள்ளையின் குறிப்பு.

இறைவன் அடியை வணங்கி அவன் அருளால் வழி கண்டு அவன் காட்டும் கைங்கரியத்தைச் செய்யவேணும் என்கிறார். கைங்கரிய நெறியிலேயே இந்திரியங்கள் அடங்கி நல்வழிப்படும் என்பதும், நல்லொழுக்கம் நிலைபெறும் என்பதும் இவர் கருத்து. பக்தியும் கைங்கரியமும் ஒன்றுக்கொன்று இன்றியமையாதன என் பதையும் பக்தியின் கனியே கைங்கரியம் என்பதையும் இவர் குறிப்பிடுகிறார். கைங்கரியமே பக்தர்களின் தவம் என்பதையும் வற்புறுத்துகிறார்.

மோட்ச லோகத்திலும் கைங்கரியம் உண்டு; மோட்சங் கூட வேண்டாம். பயப்படாமல் கைங்கரியம் செய்துகொண் டிருப்பது போதும்!—என்ற அபிப்பிராயங்களையும் ஆதரிக்கிறார். வைதிககர்மங்களைக் காட்டிலும் பக்தி பண்ணிக் கைங்கர்யம் பண்ணும் பாகவத தர்மமே மேலானது என்று சித்தாந்தப்படுத்து

கிருர். கைங்கரியத்திலும் பகவத் கைங்கர்யத்தைக் காட்டிலும் பாகவத கைங்கர்யமே மேலானது என்கிருர்.

வைஷ்ணவ சமூகத்துக்குச் செய்யும் கைங்கர்யந்தான் கைங்கர்யம் என்பது இவர் கொள்கை அன்று. திருவிருத்தம் என்ற நம்மாழ்வார் பிரபந்தத்திற்கு வியாக்கியானம் செய்யும்போது 'பராநர்த்தம் (பிறர் துன்பம்) நெஞ்சிலே படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்ருடுகிருர்!' என்று நம்மாழ்வாரைக் குறித்து இவர் கூறுவதால், 'நாடு அல்லது லோகத்திற்குச் செய்யும் பணி' என்ற விரிந்த பொருளிலும் கைங்கரியம் என்ற பதத்தை இவர் உபயோகப்படுத்துகிருர் என்று தெரிகிறது.

### கைங்கர்ய—தத்துவம்

உலகமெல்லாம் இறைவனுக்கு உடல் என்ற கொள்கை வைஷ்ணவத்தில் மிகவும் முக்கியமானது. கடவுளேயும் உலகத்தையும் தனியாகப் பிரிக்க முடியாது.

'அடியோ மோடும் நின்னேடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு'

என்ற பெரியாழ்வார் வாக்கின்படி, கடவுள் ஆத்மாவாகவும் நாம் அவனுக்குச் சரீரமாகவும் இருக்கும் இருப்பு எப்போதும் உண்டென்பர் வைஷ்ணவர்கள். எனவே உலகத்திற்குச் செய்யும் கைங்கர்யம் உண்மையில் பகவானுக்குச் செய்யும் கைங்கர்யமே யாகும். நாம் ஒரு பெரியாரது உடம்புக்குக் கைங்கர்யம் செய்தால் அந்தக் கைங்கர்யம் அந்தப் பெரியாருக்குச் செய்யும் கைங்கர்யமாகவே கருதப்படுகிற தல்லவா? அந்தச் சரீரத்திற்குச் செய்யும் கைங்கர்யம் சரீரியான பெரியவருக்கு உகப்பை விளேவிப்பதோடு அவர் சரீரத்திற்கும் நலம் செய்கிறது.

இப்படியே பகவானுடைய சரீரமாகிய உலகத்திற்குச் செய்யும் கைங்கர்யமும் உலகத்திற்கு நன்மை செய்வதோடு சரீரியான பகவானுக்கும் உகப்பாகுமென்ற ஆழ்ந்த பொருளே உள்ளத்தில்

கொண்டுதான், '(நம்மாழ்வார்) நாட்டுக்காக............மன்ருடு கிருர்' என்ற கருத்தைப் பெரியவாச்சான்பிள்ளை வெளியிட்டிருக்க வேண்டும்.

'அன்பில் அன்றி ஆழி யானை
யாவார் காண வல்லரே ?'

(ஆழியான்–மகாவிஷ்ணு.)

விரிந்த அன்பு நெறியாகிய கைங்கர்ய மார்க்கத்திலேதான் பகவானைக் காண முடியும் என்ற திருமழிசையாழ்வார் கருத்து, பெரியவாச்சான்பிள்ளை வாழ்க்கைக்கும் உபதேசங்களுக்கும் ஜீவ நாதமாக இருந்திருக்க வேண்டும்.

அன்பு மயமான கைங்கர்யத்தை ஜாதி கர்வம் முதலான குற்றங்கள் கெடுத்துப் பலவிதமான பாகவத ஆபாசங்களுக்கும் காரணமாகும் என்ற அபிப்பிராயத்தைப் பெரியவாச்சான்பிள்ளை, 'திருமாலை' என்ற தொண்டரடிப்பொடியாழ்வார் பிரபந்தத் திற்குத் தாம் செய்திருக்கும் வியாக்கியானத்தில் தெளிவுபடுத்தி யிருக்கிருர். ஜாதியைத் துலக்குவதே பக்தர்களைப் பழிப்பதாகும், பாகவதர்களை அபசாரப்படுத்துவதாகும் என்பது இவர் கொள்கை.

புலையரும் பக்தராஞல் அவர்கள் புலையர் அல்லர்; பக்தர்கள் தான்; அவர்களைப் புலைபர்கள் என்று சொல்லுகிறவர்கள் பிராமணர்களே யாஞலும், ஸ்ரீவைஷ்ணவர்க ளாஞலும், அவர் களே புலையர்கள்!-என்ற தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் கொள் கையைப் பெரியவாச்சான்பிள்ளை விசேஷமாக அரண்செய்து வற்புறுத்தியிருக்கிருர். மிலேச்ச தேசத்தில் வசிக்கும் பக்தரை, 'இங்கே வசிக்கிருரே; ஸ்ரீரங்கம்போன்ற புண்ணிய ஸ்தலங்களில் வசிக்கவில்லையே' என்று எண்ணிலும், பாவம்தாஞம்; பாகவத அபசாரம்தாஞம்.

## கருட கர்வபங்கம்

இதற்குத் திருஷ்டாந்தமாக ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளை லோகாசாரியர் கருடனைப்பற்றிய கதை ஒன்றைக் குறிப்பிடுகிருர்.

இது மகாபாரதத்திலுள்ள ஓர் உபகதையைத் தழுவிச் சில குரு பரம்பரைகளில் விவரமாக எழுதப்பட் டிருக்கிறது.

ஒரு மிலேச்ச சீமையில் பாகவதராகிய ஓர் அம்மையார் வசித்து வந்தாராம். ஒரு சமயம் அந்த வழியாகப் போய்க்கொண் டிருந்த கருடன் அந்த அம்மையாரின் விருந்தாளி யாகி அவர் வீட்டில் இளைப்பாறிக்கொண் டிருந்தானும். அப்போது அந்த அம்மை யாருடைய பக்தியை வியந்து, 'இவர்-ஐயோ!-இந்த மிலேச்ச தேசத்தில் இருக்கிறாரே!' என்று நினைத்துவிட்டானும்.

அவ்வளவுதான்; படுக்கையிலிருந்து மறுநாள் பட்சிராஜா எழுந்துவர-அதாவது, பறந்துவர-முடியவே இல்லையாம். ஏன் ? பாகவத அபசாரந்தான் அந்தச் சிறகுகளை உதிர்த்து அப்படி முடமாக்கி விட்டதாம். இந்த மானஸ அபராதத்தை ஒப்புக் கொண்டு பொறுத்துக்கொள்ளும்படி மனப்பூர்வமாக அந்த அம்மையாரைத் தண்டனிட்ட பிறகுதான் மீண்டும் இறகுகள் முளைத்தனவாம்..

## பாகவத கைங்கரியமும் லோக கைங்கரியமும்

பாகவத அபசாரம் மோட்ச விரோதி என்பதைப் பெரிய வாச்சான் பிள்ளை தமது வியாக்கியானங்களுக்கு இடையே வற் புறுத்தி இருப்பதுபோல், பாகவத கைங்கர்யம் பரம புருஷார்த்தம் என்பதையும் தெளிவாக வற்புறுத்தியிருக்கிறார்.

'தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாள்
ஆகிலும்சித(கு) உரைக்குமேல்
என்னடியார் அதுசெய்யார்! செய்தாரேல்
நன்றுசெய்தார்" என்பர் போலும்!'

[திறத்தகத்து-விஷயத்தில். தாமரையாள்-லட்சுமி. சிதகு-குற்றம்.]

என்று பாகவதர்களின் பெருமையைப் பேயாழ்வார் எடுத்துக் கூறுகிறார்.

லட்சுமி அருள் வடிவமானவள்; எப்பொழுதும் அடியார்கள் விஷயத்தில் பகவானிடம் அவர் சிபாரிசு செய்கிருளாம். அப்படிப் பட்ட லட்சுமியே பாகவதர்களைப்பற்றிக் குற்றம் சொன்னலுங்கூட அன்புக் கடவுளான விஷ்ணு நம்பத் தயாராக இல்லையாம். அடி யாரை ரட்சிப்பதில் தாயான மகாலட்சுமியும் தந்தையான மகா விஷ்ணுவும் ஒருவரோ டொருவர் போட்டி போடுகிருர்கள் என்று பொருள்பட வியாக்கியானம் செய்திருக்கிருர் பெரியவாச்சான் பிள்ளை.

இவ்வளவு பெருமை வாய்ந்த பாகவதர்களை,
'மார்வம் என்பதோர் கோயில் அமைத்து,
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி,
ஆர்வம் என்பதோர் பூஇட வல்லார்.'.
[மார்வம்–மார்பு; நெஞ்சு. ஆர்வம்–அன்பு.]

என்று பெரியாழ்வாரே புகழ்ந்து பேசி, அவர்களுக்கு யம பயம் கிடையாது என்கிருர். இந்த அன்பர்களுக்குப் பணி செய்வதே ஆனந்தம் என்பதும், இத்தகைய பணிக்கு ஜாதி கர்வம், வித்யா கர்வம், ஐசுவரிய கர்வம் முதலான குற்றங்கள் இடையூறு கள் என்பதும் பெரியவாச்சான்பிள்ளையின் கருத்து. பாகவத சிரேஷ்டர்கள் உலகம் எங்கும் திரிந்து தீதில்லாத நன்னெறி காட்டி உபதேசம் செய்துகொண்டு போவார்கள் என்பர் குலசேகர ஆழ்வார். இதனுலும் உறுதிப்படுகிறது, உலக நன்மைக்காகப் பணி செய்வதும் கைங்கர்யந்தான் என்ற பெரியவாச்சான் பிள்ளையின் அபிப்பிராயம்.

## இவர் மாட்சி

இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ உண்மைகளுக்கெல்லாம் ஒப்பற்றதோர் பொக்கிஷசாலையென்று சொல்ல வேண்டும், பெரிய வாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களை. இந்த உண்மைகளுக் கும் கொள்கைகளுக்கும் இடையே இந்த வியாக்கியானங் களினூடே, ஒரு பொற்சரடு போலச் செல்லுகிறது இவருடைய கவித்வ சக்தியோடு கூடிய மேதா விலாசம்.

இது இவர் வாக்கிற்கு விசேஷமான ஜீவசக்தியைக் கொடுத்து, மூலத்திற்கே ஒரு புதிய அழகு தருவதுபோல் இருக்கிறது. இந்த மேதையும் மனோபாவமும் பிரபந்த உலகின் இருண்ட பிரதேசங்களிலும் மின்னல்போல ஒளி வீசுகிறது. இந்த ஒளியில், ஆழ்வார்களுடைய இருதயத்தோடு ஆசாரியர் இருதயங்களையும் பார்க்கிறோம். அந்த இருதயங்களோடு ஒன்றுபட்டுச் சோபிக்கும் பெரியவாச்சான்பிள்ளையின் இருதயத்தையும் பார்க்கிறோம்.

சாதாரணமான பாடல்களையுங்கூட இந்த ஒளி அழகு செய்து காட்டுகிறது. சாதாரணமான வார்த்தைகளிலும் புதைபொருள் காட்டுகிறது, வைஷ்ணவக் கொள்கைகளுக்கு இசைந்தபடி! ஓர் உதாரணமாக 'மால்' என்ற தமிழ்ச் சொல்லை எடுத்துக் கொள்ளுங்கள். இதற்குப் 'பெருமை, வளமை' என்ற பொருள்களோடு, 'மயக்கம், ஆசை, காமம்' முதலான பொருள்களும் உண்டு; 'விஷ்ணு' என்ற பொருளும் உண்டு. இதை வைத்துக் கொண்டு ஒரு நாஸ்திகன், 'உங்கள் கடவுள் மயக்கம் கொண்டவன்; பித்தேறியவன்!' என்று விளையாட்டாகப் பரிகசிக்கலா மல்லவா? 'அதுவும் சரி' என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை.

'பித்தேறியிருக்கும் அவன்தான்; ஆம் உங்களை ரட்சிப்பதில் தான் அப்படிப் பித்தேறியிருக்கிறான்' என்ற பொருளை உள்ளிட்டு ரட்சணத்தில் பித்தேறியிருக்கும் அவன் 'மால்' என்கிறார். அப்படிப் பித்தேறியிருப்பதே அவன் பெருமையென்று சொல்லும் போது, பக்திமதத்தின் ஆழ்ந்த பொருளொன்றை ஒரு சிறு சொல்லைக்கொண்டே ரஸமாக வெளியிடுகிறார் அல்லவா ?

இதே மேதாவிலாஸம், சாதாரணமான புராணக் கதைகளிலிருந்தும் ஸாரமான பக்திப்பொருளைக் கடைந்து தருகிறது. உதாரணமாகத் தேவர்கள் அமிர்தம் கடைவதற்குப் பாற்கடலில் பள்ளிகொண்டிருந்த விஷ்ணுவின் உதவியை நாடினார்கள் என்ற கதையைப் பாருங்கள். 'கிடந்த அமுதத்தை விட்டுக் கடைந்த

அமுதத்தை விரும்பினார்களே!' என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

ஒரு பிரயோஜனத்தை விரும்பினாலும் பகவானிடத்திலேயே பெற்றுக்கொள்ளலாம். எனினும் அது ஆழ்வார்களின் பக்தி போன்ற உயர்ந்த உண்மையான பக்தியன்று, என்பது கருத்து. இதுவும் பக்தி மதத்தின் விசேஷமான கொள்கைகளில் ஒன்றல்லவா ? இத்தகைய மேதாவிலாஸத்தை நமது வியாக்கியான சக்கரவர்த்தியின் மாட்சி அல்லது சிறப்பியல்பு என்றுதான் சொல்ல வேண்டும்.

## 14. திருவளர்சோலை

'செல்வம் சேர்ந்தால், சேராததும் உண்டோ ?' என்று சாதாரணமாகச் சொல்வதுண்டு. செல்வர்கள் வாழ்க்கையில் பலவிதமான வசதிகளையும் தேடிக்கொள்வார்கள் என்பது யாவரும் அறிந்ததே. பெருஞ்செல்வர்கள் தற்கால உலகில் எண்ணியதை யும் விரும்பியதையும் எவ்வளவு எளிதில் பெற்றுக்கொள்ளலாம் என்பதை நாம் பிரத்தியட்சமாகப் பார்த்து வருகிறோம்.

எத்தனையோ பதவி வகிக்கிறார்கள்; எத்தனையோ பட்டம் கட்டிக்கொள்ளுகிறார்கள். சக்தியையும் செல்வாக்கையும் ஆயிரம் வகையில் பெருக்கிக்கொள்கிறார்கள். லட்சுமி கடாட்சம் போது மானபடி இருந்தால் முடிமன்னராகவும் பரிணமித்துவிடலாம். சுகபோகங்களை அநுபவிப்பதுபோல் அவர்கள் வாழ்க்கையின் உயர்தர இன்பங்களையும் அநுபவிக்கக் கூடும். இந்த விஷயத்தை மனசில் வைத்துக்கொண்டு பின்வரும் பாட்டைக் கேளுங்கள்:

'சேரா தனஉள வோ,பெருஞ்
  செல்வர்க்கு ? வேதம்செப்பும்
பேரா யிரம்,திண் பெரும்புயம்
  ஆயிரம், பெய்துளவத்
தாரார் முடிஆ யிரம், குரு
  கூர்ச்சட கோபன்சொன்ன
ஆரா அமுதக் கவிஆ
  யிரம், அவ் அரியினுக்கே.''

[சடகோபர் அந்தாதி.]

[செப்பும்-சொல்லும். திண்-வலிய. புயம்-புஜம்; தோள். பெய்-பெய்த; (இங்கே) சாத்திய. தார்-மாலை. ஆர்-பொருந்திய. குருகூர்-ஆழ்வார் திருநகரி, சடகோபன்-நம்மாழ்வார். ஆரா-தெவிட்டாத. அரி-விஷ்ணு.]

## உயர்ந்த சம்பத்து

லட்சுமி கடாட்சத்தாலே பெருஞ்செல்வம் உண்டாகிற தென்றால், ஸாக்ஷாத் மஹா லட்சுமியோடு கூடிய விஷ்ணுவுக்கு வந்த யோகங்களைச் சொல்லவா வேண்டும்? 'பெரிய மனிதர் களின் பேரைப் பார்த்தால், 'அடடா, இத்தனை பட்டங்களா?' என்று அதிசயிக்கிறோம். 'சில ராஜக்களின் பேர்களும் பட்டங் களும் பத்திரிகைகளில் எவ்வளவு இடத்தை அடைத்து விடுகின்றன!' என்று ஆச்சரியப்பட்டது உண்டு. லட்சுமிதேவி கடைக்கண்ணால் பார்த்த லவலேசமான பார்வைக்குத்தான் எவ்வளவு மதிப்பு!

எனவே, திருமாலுக்குக் கிடைத்திருக்கும் பட்டப் பெயர்கள் ஆயிரமென்றால், ஆச்சரியம் இல்லை. 'ஆயிர'த்திற்கு இங்கே ஆயிரம்தான் என்ற பொருள் இல்லை; அனந்தம்; கணித சங்கேதம் அற்றது என்று பொருள். பெரிய பெரிய பட்டங்களையும் தானே ஒருவன் சூட்டிக்கொண்டால், மதிப்புண்டா? கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டால்தானே பெருமை? விஷ்ணுவின் அழகான பட்டப் பெயர்களெல்லாம் **வேதம்** என்ற ஆதிபுராதனமான சாஸனத்திலே பிரசுரம் ஆகிவிட்டனவாம். இவை பொருளற்ற வெறும் பட்டங்களும் அல்ல; சக்தி மயமான ஆயிரம் புஜங்கள் தாங்கி இருக்கின்றன இந்தப் பட்டங்களை!

சக்தி, விஜயலட்சுமியின் விழிக் கோணங்களில் இருந்தே உலகங்களிலெல்லாம் பொழிந்து, ராஜராஜாக்களையும் சர்வாதிகாரி களையும் தோற்றுவிக்கிற தென்றால், அந்த லட்சுமியை மார்பிலேயே தரித்துக்கொண்டிருக்கும் விஷ்ணுவின் சர்வ சக்தியைக் குறித்துக் கேட்பானேன்! எனவே அபரிமிதமாக அற்புதமாக இருக்கிற மகா

சக்திக்கு அறிகுறியாக ஆயிரம் கிரீடங்கள் அலங்கரிக்கின்றன வாம் மகாவிஷ்ணுவின் ஆயிரம் முகங்களையும்.

அந்த ஜாஜ்வல்யமான கிரீடங்களைப் பரிமளிக்கச் செய்யும் குளிர்ந்த பச்சைப் பசுந்துழாய் மாலைகள்மீதுதான் அவனுக்கு எவ்வளவு பிரியம்! அந்த முடிமாலைகளும் அவள் அருளால் கிடைத்த பாக்கியந்தான். ஆனால் அதே அருளால் இவையெல்லா வற்றுக்கும் மேலாக-அதிர்ஷ்ட சிகரமாக-ஒன்று கிடைத்திருக் கிறதாம். 'அப்படியா? அது என்ன? உண்மையாகவா? அந்த ஆயிரம் பட்டங்களுக்கும் கிரீடங்களுக்கும் மாலைகளுக்கும் மேலாகாவா?' என்றுதானேகேட்கிறீர்கள். ஆம்; அதுதான் நம் மாழ்வார் கவி என்ற தெவிட்டாத அமிர்தம்; ஒன்ரு, இரண்டா? அதுவும் ஆயிரம் என்கிருர் சடகோபர் அந்தாதி ஆசிரியர்.

இந்தக் கவிமாலை, கிரீடமாலைகளைக் காட்டிலும் இனியதாம், மகா ரசிகரான இந்த மகாவிஷ்ணுவுக்கு. பெருஞ்செல்வர்களுக்கு மேலும் மேலும் புதிய புதிய பொருள்கள் சேர்ந்துகொண் டிருப்பது போல், மகாலட்சுமியை அடைந்து பெயர், புஜம், கிரீடம் முதலிய வற்றை ஆயிரம் ஆயிரமாகப் பெற்ற ஸ்ரீமானுக்கும் முடிவான யோகமாகத் திருவாய்மொழி ஆயிரமும் கிடைத்துவிட்டனவாம். இப்படிப்பட்ட ஸ்தோத்திரப் பாடல்களிலிருந்து, வைஷ்ணவர்கள் நம்மாழ்வார் பிரபந்தத்தை எவ்வளவு உயர்ந்த சம்பத்தாக மதிக்கிருர்கள் என்பதை ஊகித்துக்கொள்ளலாம்.

## இருதய கானம்

(வைஷ்ணவர்களின் இசைச் செல்வம்.)

இவ்விதமாக மதித்தவர்களில் **நஞ்சீயர்** என்ற வைஷ்ணவ ஆசிரியர் திருவாய்மொழிப் பாசுரங்களை இசையோடு உருக்கமாய்ப் பாடுவாரென்றும், அவருடைய குருவான **பட்டர்**, தம்மை மறந்து கேட்டுக்கொண்டே இருப்பாரென்றும், கோவில்களில் பிரபந்தம் பாடும் தொண்டு செய்யக்கூடிய **அரையர்களில்** ஒருவரான **திருநறையூர் அரையர்** என்பவர் இசையோடும் நடிப்புத் திறமை

யோடும் இந்தப் பாசுரங்களை அநுபவித்துப் பாடக் கேட்பதில் நஞ்சீயருக்கு விசேஷ விருப்பம் உண்டென்றும் திருவாய்மொழியின் வியாக்கியானங்கள் மூலமாக அறிகிறோம்.

ஒருநாள் ராமாநுஜரின் சீடர்களில் ஒருவரான எம்பார்,

**மரங்க ளும்இரங் கும்வ கை,மணி**
**வண்ண! ஓ! என்று கூவுமால்!**

*[இரங்கும் வகை-இரங்கும்படி. கூவும்-அழைப்பான்.]*

என்ற ஆழ்வார் வாக்கிற்கு வியாக்கியானம் செய்துகொண் டிருக்கும் போது, கவித்வ உணர்ச்சி பெருத ஒருவர், "மரங்களும் இரங்கக் கூடுமோ?" என்று கேட்டாராம். அதற்கு எம்பார், "(மரங்களைக் காட்டிலும் மோசமான) மனப்பாறைகளும் இன்று இந்தப் பாடல் களைக் கேட்டு நெகிழும்போது, ஆழ்வார் வாக்கைக் கேட்ட மரங்கள் இரங்கியதில் ஆச்சரியம் என்ன?" என்று பொருள்படப் பதில் சொன்னாராம்.

**'செல்வ நாரணன்**
**என்றசொல் கேட்டலும்,**
**மல்கும் கண்பனி;**
**நாடுவன்; மாயமே!'**

*[மல்கும்-பெருகும். பனி-(இங்கே) நீர். நாடுவன்-தேடுவேன். மாயம்-ஆச்சரியம்.]*

என்பது போன்ற அநுபவம் பொதிந்த—அன்பு மயமான வாக்கைக் கேட்டு உருகாத பக்தியுள்ளமும் உண்டோ?

கடவுளைச் 'செல்வநாரணன்' என்று எவ்வளவு அருமையாக – எவ்வளவு செல்வமாக- அழைக்கிறார் நம்மாழ்வார்! ஆம்: அவனைக் காட்டிலும் செல்வன் உண்டா? அந்தப் பெயரைக் கேட்டதும் இவரை அறியாமலே கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழி கின்றனவாம். நெஞ்சும், 'எங்கே அவன்?' என்று தேடுகிறதாம்.

இதுவும் அவன், 'மாயம்' தான் என்கிறார். அவனுடைய ஆச்சரிய சக்திதான் இத்தகைய அநுபவங்களுக்கெல்லாம் காரணம்

என்பது கருத்து. இப்படி வியாக்கியானம் செய்து இந்தப் பாடல்களை அநுபவித்தவர்களுடைய உணர்வும் உயிரும் ஆனந்த அதிசயத்தால் உருகியது இயல்புதானே?

வைஷ்ணவ ஆசிரியர்கள் வடமொழி வேதங்கள், உபநிஷதங்கள் முதலியவற்றில் நிபுணர்களாக இருந்தார்கள். எனினும் அவர்கள்,

'தோன்ரு உபநிட தப்பொருள்
தோன்றல்உற் ரூர்தமக் கும்சான் ரும்இவை

[தோன்ரு-(இங்கே) தோன்றுவதற்கு அரிய. தோன்றல் உற்ரூர்-தோன்றப் பெற்றவர்கள். சான்று-சாட்சி.]
என்று திருவாய்மொழிப் பாசுரங்களை மதித்தார்கள்.

உபநிஷத மகாவாக்கியங்களின் பொருளை அறிவைக் கொண்டு அறிந்துகொள்வதே கஷ்டம். அப்படி அறிந்துகொண்டாலும் சந்தேகங்கள் ஏற்படக்கூடுமாம். எனவே, இதயத்தை உருக்கும் ஆழ்வார் பாசுரங்களைச் சாட்சியாகக் கொண்டுதான் நிச்சய புத்தியும் அநுபவஞானமும் ஏற்பட்டுத் தெளிவு பிறக்க வேண்டுமாம்.

"துகில் வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன்"—அதாவது, நல்ல ஆடை போன்ற சுத்தமான தண்ணீரையுடைய தாமிரபருணி யாற்றின் தலைவன்—என்று நம்மாழ்வார் தம்மைத் தாமே சொல்லிக்கொள்ளுகிருர்; அப்படியே தெளிந்து சுத்தமாயிருக்கிற தாம் இவருடைய உள்ளமும் வாக்கும்.

ஆழ்வார்மீதும் இவ்வளவு பக்திக் காதல்கொண்டவர்களில் சிலர், 'தேவ பாஷையிலுள்ள எழுதாத மறை என்று சொல்லப்படும்- எங்கள் வேதத்திற்கு ஒப்பும் உண்டோ?' என்று விவகரித்த அக்காலத்து வைதிகர்களைப் பார்த்து,

சாதிக்கு மோபர தத்துவத்
தைச்?சம யத்திருக்கைச்

சேதிக்கு மோ?ஒன்று சிந்திக்கு
மோ?அதனைத்தெரியப்
போதிக்கு மோ?எங்கும் ஓங்கிப்
பொதுநிற்கும் மெய்யைப் பொய்யைச்
சோதிக்கு மோ,உங்கள் வேதம்எம்
கோன்தமிழ்ச் சொல்லெனவே?

*[சாதிக்குமோ - நிலைநாட்டுமோ? பரதத்துவம் - மேலான உண்மைப் பொருள். திருக்கு-மாறுபாடு. சேதிக்குமோ–கண்டிக்குமோ? கோன்-தலைவன்.]*

என்று எதிர்வாதம் செய்யத் தொடங்கினர்கள்.

'கடவுள் உண்மையை நிலைநிறுத்துவதிலும், மாறுபாடான கொள்கைகளைக் கண்டிப்பதிலும், ஒன்றை ஆய்ந்து விளங்கப் போதிப்பதிலும், எங்கும் ஓங்கி எல்லாருக்கும் பொதுவாய் நிற்கிற சத்தியத்தையும் அதற்கு மாறுன பொய்யையும் சோதனை செய்து பார்ப்பதிலும், உங்கள் வேதம் எங்கள் தலைவரான நம்மாழ்வாருடைய இருதய கானமான தமிழ்ப்பிரபந்தம்போல் தெளிவாயிருக்கிறதா?' என்று இவ்விதமாக வாதித்தவர்களே நாளடைவில் தென்கலையார் என்று பெயர்பெற்றுர்கள் எனலாம்.

## கவிச்செல்வரா? ஞானச்செல்வரா?

வடகலையாரும் தென்கலையாரைப்போல் நம்மாழ்வார் பிரபந்தம் சிறந்த வேதசாரத்தை வெளியிடுகிறதென்றே கருதினர்கள். வைஷ்ணவர்கள் எல்லோரும் திருவாய்மொழியைத் தமிழ்வேதமென்றே சிறப்பித்துப் பேசினர்கள். 'வாய்மொழி' என்ற பதம் வேதம் என்ற பொருளில் நம்மாழ்வாருக்கு முன்னமே—சங்க காலத்திலேயே வழங்கி வந்தது. எனவே, திருவாய்மொழி என்று சொல்லப்படும் நம்மாழ்வார் பாடல்களைப் பக்தர்கள் தமிழ்வேதமென்று மதித்தார்கள் என்பதற்குச் சந்தேகமே இல்லை.

கடவுளேயே இதயத்திலிருக்கும் முதன்மையான குரு என்று கருதிய வைஷ்ணவர்கள், நம்மாழ்வாரே தெய்வ குருவைத் தமது பிரபந்த வாயிலாகத் தெளிவாய்க் காட்டுகிறுரென்று கருதி இவரை அவருடைய பிரதிநிதியாகப் பூலோகத்தில் தோன்றிய பரமாசாரியார் என்று நம்புகிருர்கள். இத்தகைய பக்திதான், 'பண்ணும் தமிழும் தவம் செய்தன' இந்தப் பாடல்களைப் பெறுவதற்காக, என்றெல்லாம் மதிப்பிடத் தொடங்கியது.

'பண்ணுளாய்! கவி தன்னுளாய்! பக்தியின் உளாய்!' என்று நம்மாழ்வாரும் கடவுளை அழைப்பதோடு அவனே நமக்குள்ளிருந்து பாடினுன் என்றும் நம்புகிருர். 'வண்டுகள் தேனுண்டு பிரீதிக்குப் போக்குவிட்டு முரன்றது, இசையாய் விழுந்தாற்போல, இவரும் பகவதநுபவத்தால் பிறந்த மகிழ்ச்சிக்குப் போக்கு விட்டது கவியாயிற்று.' என்பது வியாக்கியானம்.

கவித்வசக்தி நம்மாழ்வாரிடத்திலும் ஓரளவு உண்டு என்பதை ஒப்புக்கொள்ளலாம். உதாரணமாக,

'பால்வாய்ப் பிறைப்பிள்ளை
ஒக்கலைக் கொண்டு பகல்இழந்த
மேல்பால் திசைப்பெண்
புலம்புறும் மாலை (திருவிருத்தம்)

[பிறைப்பிள்ளை – பிறைச்சந்திரனுகிய குழந்தை. ஒக்கலைக் கொண்டு–ஒக்கல் அல்லது இடுப்பில் வைத்துக்கொண்டு. மேல் பால்–மேற்குப் பக்கம். புலம்புறும்–வருந்தி அழும்.]

என்று காதலனைப் பிரிந்த காதலி மாலைப்பொழுதைக் குறிப்பிடுவதாக வரும் செய்யுட் பகுதியைப் பாருங்கள். அந்தி வானத்திலே தோன்றிய, அமிர்த கிரணத்தோடு கூடிய இளம் பிறையைப் பால் மாருத வாயையுடைய இளம் குழந்தையாக வருணிப்பதும், அந்தக் குழந்தையை ஒக்கலில் வைத்துக்கொண்டு மேற்குத் திக்கு என்ற பெண், பகலாகிய கணவனை இழந்து புலம்புகிருள் என்று வருணிப்பதும், காதலியின் மனநிலைக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றன!

அப்போது பட்சிகளின் ஒலியைக் கேட்டாலும் கடல் பொங்குகிற ஓசையைக் கேட்டாலும் போதுமாம், அதையே அந்தத் திசைப் பெண்ணின் புலம்பலென்று மயங்குவதற்கு. கவிதைக்குரிய மனோபாவத்தைக் காட்டும் வேறொரு உதாரணமாக,

**'தெளிவிசும்பு கடிதோடித் தீவளைத்து மின்இலகும்**
**ஒளி முகில்காள்!'**

*[தெளி விசும்பு–தெளிவான ஆகாசம். கடிது-விரைவாக மின்-மின்னல். இலகும்-விளங்குகிற. முகில்காள்–மேகங்களே.]*
என்ற மேக வருணனையைப் பாருங்கள்.

தெளிந்த வானத்தை விரைவாக ஓடி வந்து இருட்டாக்கி விடுகின்றன மேகங்களென்றும், பிறகு அந்த இருட்டுக்கு வெளிச்சம் வேணுமென்று கொள்ளி வட்டம் போலவே தீயை வளைத்து மின்னல் விளக்காகச் செய்துகொண்டு திரிகின்றன வென்றும் எண்ணுகிற காதலி, விளக்கும் வேகமும் இருப்பதால் அந்த மேகங்களையே தூது விடலாமென்று தீர்மானிக்கிறாளாம்.

'கடல் மண் எல்லாம் விலையோ? என்று மிளிரும் கண்' என்று காதலியின் கண்களை வருணிப்பதும் கவிதைதான். ஆனால்,

**'கோலமே! தாமரைக் கண்ணதோர் அஞ்சன**
**நீலமே! நின்(று)என(து) ஆவியை ஈர்கின்ற சீலமே!'**

*[கோலமே-அழகே. கண்ணதோர்-கண்களையுடையதான ஓர் ஈர்கின்ற-இழுத்து அறுக்கிற.]*

**'முடிச்சோதி யாய்உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?**
**அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?'**

*[அலர்ந்ததுவோ—(இங்கே) பரந்து மலர்ந்ததோ.)*
என்றெல்லாம் கடவுளை வருணிக்கும்போதுதான் இவருடைய கவித்வ சக்தியும் மலர்ச்சி பெறுகிறதென்று சொல்லவேண்டும். எனினும் கவித்வ சக்தியையும் வென்றுவிடுகின்றன இவருடைய கொள்கைகளின் அழகு. கவிச்செல்வரென்று சொல்லுவதைக்

காட்டிலும் தீர்க்கதரிசியான பக்த சிரேஷ்டர் என்றும், வேத வேதாந்த சாரத்தைஉணர்ந்த ஞானதேசிகர் என்றும் சொல்வதே இவருக்குப் பெருமை.

திருவாய்மொழி முதலாவது பாட்டின் முதலாவது அடியே ஸ்ரீசங்கராசாரியரின் அத்வைதத்தைக் கண்டித்து ஸ்ரீபாஷ்யம் செய்யும்படி ராமாநுஜரைத் தூண்டியதென்று சொல்லுகிருர்கள். இந்த அடி, 'உயர்வற உயர்நலம் உடையவன்' என்று தொடங்கு கிறது. இதற்குமேல் உயர்வில்லை என்று சொல்லும்படி உயர்ந் திருக்கின்றனவாம் ஈசுவரனிடம் கல்யாண குணங்களெல்லாம்; பிரம்மம் அழகிய குணங்கள் எல்லாவற்றையும் உடையது என்பது ஆழ்வார் கொள்கை.

இந்தக் கொள்கையை அநுசரித்துத்தான் வைஷ்ணவ ஆசாரியர்கள், 'பிரம்மம் குணம் இல்லாதது' என்றும், 'உலகமெல் லாம் பொய்' என்றும் சொல்லும் மாயாவாதத்தை ஆட்சேபிக் கிருர்கள். இவர்கள்,

'உடல்மிசை உயிர்எனக் கரந்(து)எங்கும் பரந்துளன்'

[கரந்து—மறைந்து]

அதாவது, உடலிலுள்ள உயிர்போல் பரமாத்மா உலகமெல்லாம் பரந்து வியாபித்திருக்கிறது என்ற வாக்கைத் தங்கள் கொள்கை களுக்கெல்லாம் அடிப்படையானதொரு சூத்திரமாகக் கொள்ளு கிருர்கள் என்பதை வாசகர்கள் மறக்க லாகாது.

கடவுளாகிய உயிர் இயற்கையாகிய உடல் மூலமாக உயிர்களுக்கெல்லாம் நலம் செய்கிறதென்பதும் புலனுகும். உடலைக்கொண்டே புலனுகாத உயிருண்மையை உணருவது போல், உடலாகிய இயற்கையைக் கொண்டே உயிராகிய கடவுள் உண்மையை உணரலாம் என்பதும் இந்தச் சூத்திரத்தின் புதை பொருள்தான். உடம்பு உயிருக்கு அடிமை செய்வதிலிருந்து, ஆத்மாவுக்குக் கடவுளோடுள்ள இயற்கை உறவு, 'தாஸன்' என்ற உறவுதான் என்பதும், இதனுல் கைங்கரியமே புருஷார்த்தம் என்பதும், ஊகிக்கப்படும்.

மேலும், 'உண்மைத்துறவு உள்ளத்துறவுதான்; காட்டுக்கு ஓடுவதன்று' என்பதும், இந்த உள்ளத் துறவின் பொருள் 'நான், எனது' என்ற பற்றைவிட்டு, 'எல்லாம் அவன் அருள்' என்று நம்பி, ஈசுவர சரணுகதி செய்வதுதான் என்பதும் ஊகிக்கப் படுகின்றன. இத்தகைய ஈசுவரன் தாயாகவும் தந்தையாகவும் இருக்கிருன். தாய்க்கு மன்னிக்கும் சுபாவம் அதிகமானதால் அருள்வடிவமான லட்சுமியை முன்னிட்டு விஷ்ணுவைச் சரணம் அடையவேண்டும் என்று வைஷ்ணவர்கள் சொல்லுகிருர்கள்.

## சோலையும் புதையலும்

இப்படிப்பட்ட கொள்கைகளெல்லாம், பொதுவாக ஆழ்வார் களின் பிரபந்தங்களையும், சிறப்பாக நம்மாழ்வார் திருவாய் மொழியையும் ஆதாரமாகக் கொண்டு நாதமுனிகள் காலம் தொடங்கி ராமாநுஜர் காலம்வரைக்கும் பிரசாரம் செய்யப்பட்டன. ராமாநுஜர் காலத்திலிருந்து வியாக்கியானங்கள் நூல் வடிவில் எழுதப்பட்டு வந்தன. ஆழ்வார்களுடைய உபதேச ரத்தினங் களி லெல்லாம் சிரேஷ்டமானவை திருவாய்மொழியில் காணப் படுகின்றன என்பதும், வியாக்கியானங்களோடு கூடிய திருவாய் மொழியே, 'பகவத் விஷயம்' என்று சிறப்பித்துச் சொல்லப்படும் பிரமாண நூல் என்பதும் வைஷ்ணவர் கொள்கை.

நம்மாழ்வார், 'திருவளர் சோலை' என்று ஒரு திருப்பதியை வருணித்திருக்கிருர். 'அழகு வளரும் சோலை' என்பது இதன் பொருள். திருவாய்மொழியையும் வியாக்கியானங்களையும்கூட நாம், 'திருவளர் சோலை' யென்றே சொல்லிவிடலாம், 'வைஷ்ணவன் (வைஷ்ணவச் செல்வம்) வளரும் சோலை' என்ற பொருளில்.

இந்தச் சோலையை நாம் அநுபவிப்பதற்குக் காரணமான நம்மாழ்வாரைத் தமிழர்,

'வேதமொரு நான்கினையும் மிக்கதமிழ் நாலடியால்
ஓதி உரைத் தேகருணை ஓங்கும்கை'

—(திருக்கை வழக்கம்)

என்று போற்றினர்கள். வைஷ்ணவர்களோ இவரை,

> தேன்அ ருமகிழ்த் தொடையலும் மவுலியும்
> திருக்கிளர் குழைக்காதும்,
> கண்அ ருமலர்த் திருமுகச் சோதியும்
> கயிரவத் துவர்வாயும்,
> மோன மாகிய வடிவமும் மார்பமும்,
> முத்திரைத் திருக்கையும்
> ஞான தேசிகன் சரணதா மரையும், என்
> நயனம்விட் டகலாவே!''

[அரு — அருத. தொடையல் — மாலே. மவுலி — கிரீடம். திரு—அழகு. கிளர்—விளங்கும். குழை—காதில் அணியும் அணி. கான்—வாசனே. கயிரவம்—ஆம்பல். துவர்—சிவப்பு. மார்பம்—நெஞ்சு. தேசிகன்—குரு. சரணத்தாமரை—அடிகளாகிய தாமரை. நயனம்—கண்கள்.]

என்ற பக்தருடைய மனநிலேயோடு பார்க்கிருர்கள்.

மகிழம்பூ மாலேயும் கிரீடம்போல விளங்கும் கொண்டையும் முகமாகிய ஜோதியும், மோனத்தில் இருக்கும் வடிவமும் ஞான முத்திரையோடு கூடிய கையும் ஆகர்ஷிக்கின்றனவாம். அந்தக் காதுகள் குறைகளேக் கேட்கத் தயாராக இருக்கின்றன என்பதும், வாய் யோக ஷேமம் வினவத் துடிக்கிறது என்பதும், நெஞ்சிலே கருணே சமுத்திரம்போல் அலே எறிகிறது என்பதும் குறிப்பு.

'ஞான சௌந்தரியமே உருவெடுத்து வந்ததுபோல் இருக்கும் இந்தத் தேசிக வடிவம் எப்போதும் உள்ளத்தில் இருக்கிறது' என்றுகூடச் சொல்லவில்லே; 'கண்ணே விட்டு விலகாது' என்கிருர், 'கண்ணன் என் கண்ணிலே இருக்கிருன்!' என்று கூறும் நம்மாழ்வாரைப்போலே இத்தகைய பக்திக் கண்ணேடு பார்த்தவர்கள் திருவாய்மொழி என்ற திருவளர் சோலேயில் அபரிமிதமான ஞானப் புதையலேக் கண்டெடுத்து, அதற்கு ஸ்ரீவைஷ்ணவம் என்றே பெயரிட்டார்கள்.

# 15. ஆழ்வார்களும் வடஇந்தியாவும்

'உன் குலமென்ன?'

'பாகவத குலம்.'

'கோத்திரம் எது?'

'ராமாநுஜ கோத்திரம்'

'ஸூத்ரம்?'

* 'சடகோப ஸூத்ரம்.'

'வேதம்?'

'தமிழ் வேதம்.'

'புருஷன் யார்?'

'புருஷோத்தமன்.'

'தாய் தந்தையர்?'

'அவனேயே தாயாகவும் தந்தையாகவும் நம்பியிருக்கிறேன்.'

'பந்துக்கள்?'

'ஆத்ம பந்துக்களான பாகவதர்கள்.'

'தொழிலென்ன?'

'பாகவத கைங்கரியம்'

'அதனால் என்ன பிரயோஜனம்?'

'அதுவே பிரயோஜனம்.'

---

* சடகோபர்—நம்மாழ்வார்.

'உன் பிரார்த்தனை என்ன?'

'கைங்கரியப் பிரார்த்தனை.'

* இந்தச் சம்பாஷணை சின்னியம்மாளென்ற ஒரு ஸ்திரீக்கும் மணவாள மாமுனிகளின் சீடர் ஒருவருக்கும் இடையே நிகழ்ந்ததாகச் சொல்லுகிறார்கள். கி. பி. 14ஆவது நூற்றாண்டிலே ஸ்ரீவைஷ்ணவத்தின் நிலை இது.

தேசிகர், பிள்ளை லோகாசாரியர் காலத்திற்குப் பின் வடகலை, தென்கலை என்ற கலாபேதங்கள் சிறு வித்தியாசங்களைப் பெரிதாக்கிக்கொண்டு சச்சரவு செய்யத் தொடங்கிய போதிலும் மணவாள மாமுனிகளின் மேதாவிலாசத்தால் அன்பும் அருளும் கைங்கர்ய விருப்பமும் சகோதர தர்மமும் பொருந்திய பரம சாத்விக மார்க்கமான ஆழ்வார் – ஆசாரியர்களின் சித்தாந்தம் பொதுவாகச் சரியான நிலைமையில்தான் இருந்தது. இந்தக் காலத்திலே தான்—அதாவது பதினாலாம் நூற்றாண்டின் இறுதியிலே—ராமானந்தர் என்ற பெரியார் தென்னாட்டிலிருந்து வடஇந்தியாவில் வைஷ்ணவப் பிரசாரம் செய்யப் போனார்.

## வடக்கு நோக்கிய வைஷ்ணவம்

கி. பி. 11–ஆவது நூற்றாண்டிலேயே ராமாநுஜருடைய அகில இந்தியப் பிரசாரம் தமிழ் வேத ஸாரமான கொள்கைகளை வட நாட்டுப் பண்டிதர்களுக்கும் ஒருவாறு தெரிவித்துவிட்டது. கி.பி. 13–ஆவது நூற்றாண்டின் இறுதியிலும் 14–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இருந்த தேசிகரால் திருவாய்மொழியின் ஸாரமும் தாத்பரியமும் வடமொழியில் செய்யப்பட்டன. ஏறக்குறைய இதே காலத்தில் பிள்ளை லோகாசாரியர் இயற்றிய ரகஸ்ய கிரந்தங்களில் ஒன்றான அர்த்த பஞ்சகத்தின் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலும் வடஇந்தியாவில் பிரசித்தி பெற்றது.

* இது **'சின்னியம்மாள் ரகஸ்யம்'** என்ற பெயரோடும் சிற்சில மாறுதலோடும் மணவாள மாமுனிகளின் சீடரான முதலாவது வானமாமலைஜீயர் வைபவத்திலே சேர்க்கப்பட்டிருக்கிறது.

இந்த நூல்களின் மூலமாகவும் பாகவத தர்மம் பரவுவதற்குரிய விதை வடநாட்டில் விழுந்திருக்கவேண்டும். எனினும் ராமானந்தரால்தான் இந்த இயக்கம் வடஇந்தியாவிலே நன்ருகப் பரவத் தொடங்கியது. பொதுவாக, இவர் ராமாநுஜ கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்று எல்லாரும் ஒப்புக்கொள்கிருர்கள். இவர் *மணவாள மாமுனிகளின் சீடராக இருக்கவேண்டுமென்றும், அவரிடம் 'கைங்கர்யப் பிரார்த்தனே' செய்துகொண்டே வடக்கு நோக்கியவரென்றும் ஊகிக்கலாம்.

ராமானந்தர், கிராமவாசிகள் பேசும் ஹிந்தியைக் கற்றுக் கொண்டு அந்தப் பாஷையிலேயே உபதேசித்துப் பல ஜாதியாரையும் வித்தியாசம் இல்லாமல் பாகவத குலம் ஆக்கிக்கொண்டார். இவர் சீடர்களில் முக்கியமானவர் பன்னிருவர். தாழ்ந்த வகுப்பினரும் உண்டு. முகமதியரும் உண்டு. இவர் கடவுளுடைய அருளை விசேஷமாக வற்புறுத்தியதால், அந்த அருள் நெறியிலே ஜாதீய ஸமரஸத்திற்கும்—இந்து முஸ்லிம் ஒற்றுமைங்குக்கூட வழியிருக்கிறதென்று கண்டுபிடித்தார்.

இந்தியாவில் சமயப் பிரசாரம் செய்த மகா மேதாவிகளில் ராமானந்தரும் ஒருவர் என்பது திரு. ஸி. எப். ஆண்ட்ரூஸின் அபிப்பிராயம். ஹிந்திபாஷையில் கவி பாடும் ஆற்றலேயும் ராமானந்தர் ஒருவாறு பெற்றிருந்தார் என்று தெரிகிறது. இவருடைய ஞான பரம்பரையில் வந்த வடநாட்டுப் பெரியோர்களும் ஆழ்வார் பாசுரங்களேப்போல் எளிய நடையில் உருக்கமாக இசை நயத்தோடு பக்திப் பாடல்கள் பாடிஞர்கள். இந்த இதய கானங்களிலே பக்தி வளம் முக்கியம் என்ருலும், ஆழ்வார்களின் இயக்கம் தென்னுட்டின் கலேச்செல்வத்தையும் வளர்த்ததுபோல் இந்த வடநாட்டியக்கமும் வடநாட்டின் கலேவளத்தையும் அபிவிருத்தி செய்தது.

* மணவாள மாமுனிகளின் சீடர்களில் ஒருவரான முதலாவது வானமாமலே ஜீயரின் சீடர் ராமானந்தர் என்பதற்கு ஆதாரம் இருப்பதாகக் காலஞ்சென்ற வானமாமலே ஜீயர் என்னிடம் நேரில் சொன்னது உண்டு.

## அல்லாவுக்கும் ராமனுக்கும் குழந்தை

இவருடைய இயக்கத்திலிருந்து நேரடியாகத் தோன்றியவர்கள்தான் கபீர்தாஸர், குருநானக், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர், மீராபாய், துளசிதாஸர் முதலான மேதாவிகளெல்லாம். இவர்கள் அன்புநெறியோடு சகோதர தர்மத்தையும் விசேஷமாக வற்புறுத்தினார்கள். பக்தர்களுடைய ஜாதியை விசாரிப்பது மூடத்தனமென்ற ஆழ்வார் ஆசாரியர்களின் கொள்கையைக் கபீர்தாஸரும் பாடியிருக்கிறார்; ஆனால் இந்தக் கொள்கை வட நாட்டில் வேரூன்றியதைப்போல் தென்னாட்டில் வேரூன்றி விட விடவில்லை.

இந்தக் கபீர்தாசர் ராமானந்தரின் முக்கிய சீடர்; மகம்மதியர்; தம்மை 'ராமனுக்கும் அல்லாவுக்கும் குழந்தை' என்று சொல்லிக்கொண்டவர். ராமானந்தரின் அருள்நெறியைத் தழுவி இவரும் ஸர்வ ஜாதிய சமரஸத்திற்கு உழைத்ததோடு இந்து-முஸ்லிம்களை ஒன்று சேர்க்கவும் முயன்றார். இவர் பாடல்களில் பல வடஇந்தியாவில் பிரபலமாயிருக்கின்றன. இந்தப் பாடல்களில் நூறு, கவி ரவீந்திரநாத் தாகுரால் இங்கிலீஷில் மொழிபெயர்க்கப்பட்டு உலகப் பிரசித்தம் ஆகிவிட்டன.

கபீர்தாஸரின் பாட்டொன்றில், கடவுள் தொண்டனைப் பார்த்து, 'நீ என்னை எங்கே தேடுகிறாய்? இதோ பக்கத்தில் தானே இருக்கிறேன்! நான் சடங்குகளிலும் இல்லை; யோகத்திலும் இல்லை; துறவிலும் இல்லை; நீ உண்மையாக நாடினால் என்னை உடனே காண்பாய்!' என்று கூறியதாக வருகிறது. கடவுள் மூச்சுக்காற்றுக்கும் மூச்சுக்காற்றென்று இந்தப் பாட்டு முடிகின்றது. ராமானந்தர் பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும், கபீர்தாஸர் பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதிலும் காலம் சென்றிருக்கலாமென்று ஊகிக்கிறார்கள்.

## சீக்கிய குரு பரம்பரை

சீக்கிய மத ஸ்தாபகரான குருநானக் என்பவரும் கபீர்தாஸரின் சீடர்களுள் ஒருவர்தாம். இவர் பதினைந்தாம்

நூற்றுண்டின் பிற்பகுதியிலும் பதினும் நூற்றுண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தார். பிற்காலத்தில் சீக்கியர்களுக்கும் முகமதியர்களுக்கும் தீராப் பகை ஏற்பட்டபோதிலும் இந்து மதத்தையும் இஸ்லாம் மதத்தையும் ஒற்றுமைப்படுத்தக் கபீரைப்போல் குருநானக்கும் முயன்ருர்.

ஜாதிபேதம் அவசியம் இல்லையென்பதும், உண்மையான பக்தி இருந்தால்தான் தீர்த்தயாத்திரை முதலியவற்ருல் பிரயோஜனம் உண்டு என்பதும், படாடோபமான பூஜைகளால் பயனில்லை என்பதும் துறவு தேவையில்லை என்பதும் இவர் அபிப்பிராயம். 'கடவுளைத் தேடிக் காட்டுக்குப் போவானேன்? நான் அவனை வீட்டிலேயே கண்டுகொண்டேன்' என்கிருர். 'கடவுள் எல்லாருக்கும் தாய் தந்தை; ஏழைகளுக்கு நண்பன்; கருணைக்கடல், அழகன், புருஷோத்தமன்' என்கிருர்.

இவர் இந்தியாவெங்கும் யாத்திரை செய்ததாகவும் மெக்காவுக்குக்கூடப் போனதாகவும் சொல்லுகிருர்கள். இவரைக் குறித்து வழங்கும் கதைகளில் ஒன்று திருமழிசையாழ்வார் கதையின் ஒரு பகுதியை ஒத்திருக்கிறது. 'தேருங்கால் தேவன் ஒருவனே' என்றும், 'அன்பிலன்றி ஆழியானை யாவர் காணவல்லரே?' என்றும் அந்த ஆழ்வார் உபதேசிப்பதையும் ஒத்திருக்கிறது இவருடைய முக்கியமான உபதேசம். 'என் காதலன் என் கையைப் பிடித்து என்னைத் தன் ராணியாக்கிக் கொண்டான்!' என்று இவர் கூறுவதும் ஆழ்வார்களின் நாயக—நாயகி பாவத்தை ஞாபகப்படுத்துகிறது.

உலகம் கடவுளுடைய லீலையென்பதும், கடவுளுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் வித்தியாசம் இல்லை யென்பதும், பக்தர்களோடு கலந்து கடவுளின் புகழைப் பாடவேண்டும் என்பதும் சீக்கியர் கொள்கை. 'மனிதர் கடவுளை நோக்கித் திரும்பும் நேரமே மங்களமான நேரம்' என்று குருநானக் ஜோசியர்களை நோக்கிச் சொன்னுராம். இது, 'பக்தி பண்ணுவதற்குத் தேசகால நியமம் இல்லை; இடறினவன், "அம்மே!" என்பதற்கு நேரம்

பார்க்கவேணுமா?' என்ற ஸ்ரீவைஷ்ணவக் கொள்கையை ஞாப கப்படுத்துகிறது.

பகவானுடைய நாமத்தை அன்போடு பாடுவது மோட்ச மார்க்கம் என்கிறார் குருநானக். இது.

பாடீர் அவன் நாமம்
வீடே பெறலாமே
(வீடே—மோட்சமே)

என்ற, நம்மாழ்வார் வாக்கை ஞாபகப்படுத்துகிறது. வாசுதேவன் ஹரி, கோவிந்தன், ராமன் என்ற நாலு விஷ்ணு நாமங்களி லிருந்தும், 'வாஹ் குரு' என்று ஒரு புதிய நாமத்தைச் சீக்கியக் குருமார் உண்டுபண்ணி அதைப் பக்தியோடு உச்சரித்துத் தியானிப்பது கடவுளை அணுகுவதற்கு நல்ல வழியென்று உப தேசிக்கிறார்கள்.

'ஓ தெய்வமே! கோபாலா! மகிமையுள்ள கோவிந்தா! நான் உன் அடிகளைச் சரணமடைகிறேன்' என்றும், 'ஆத்மாவின் தேனாகிய * முராரியே!' என்றும் குரு அர்ச்சுனர் பாடுகிறார். 'உன்னுடைய தொண்டர்களுடைய அடிப்பொடியை வணங்கு கிறேன்' என்று இதே குரு பாடியிருப்பது, ஸ்ரீவைஷ்ணவர்களின் பாகவத அபிமானத்தையும் பாகவத கைங்கரியத்தையும் ஞாபகப் படுத்துகிறது.

குரு அர்ச்சுனர்தாம் கிரந்தஸாகிப் என்ற சீக்கிய வேதத்தைத் தொகுத்தவர். இதில் பாதி இவர் பாடல்களாகவே நிறைந்திருக்கிறது. 'குருவுக்குக் கைங்கர்யம் செய்கிறவன் வழியை அடைகிறான்' என்று நம்பும் சீக்கியர்கள் வைஷ்ணவர் களைப்போல் குருவைத் தியானிப்பதும் நல்ல வழியென்று சொல்லு கிறார்கள். சீக்கியர் என்றாலே சீடர் என்று பொருள் அல்லவா?

ராமதாஸர், ஹரிகோவிந்தர், ஹரிராய், ஹரிகிருஷ்ணர், குரு கோவிந்தர் என்ற சீக்கியக் குருமார்களின் பெயர்களும் விஷ்ணு

* முராரி—முரன் என்ற அசுரனை வென்ற கிருஷ்ணன்.

நாமங்கள் தாமே. துறவை வெறுத்ததுபோல் இவர்கள் போகத்தையும் வெறுத்துக் கொள்கைக்காகச் செய்த பெருந் தியாகங்கள் கூரேசன் முதலான ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களின் தியாகங்களுக்குக் கொஞ்சமும் குறைந்தன அல்ல.

கடைசி ஆசாரியரான குரு கோவிந்தரோ வீரத்தை மதத்தின் விசேஷ அம்சமாக்கிக் கடவுளின் போர்வீரர்களை நமது நாட்டின் சிறந்த போர்வீரர்களாகவும் பரிணமிக்கச் செய்துவிட்டார். கத்தியின் புகழைப் பாடும் இவர், தம் பாசுரம் ஒன்றில், 'நான் சக்கரம் தரிப்பவனை வணங்குகிறேன்' என்ற ஓர் அடி காணப்படுகிறது. 'நம்பிக்கையுள்ள ஐந்து சீக்கியர் சேர்ந்த இடத்தில் குரு கோவிந்தர் தோன்றுவார்!' என்ற சீக்கியர் நம்பிக்கையும், 'மூன்று விசுவாசமுள்ள பாகவதர்கள் சேர்ந்த இடத்தில் அவர்களுக்கிடையே பகவான் தோன்றுகிறுர்' என்ற முதலாழ்வார்களின் கதையை ஞாபகப்படுத்துகிறது.

சீக்கியக் குருமாரும் தேச பாஷையிலே பிரசாரம் செய்தார்கள். சீக்கிய வேதத்தில் ராமானந்தர், கபீர், ஜயதேவர் முதலானவர்களின் பாடல்களும் காணப்படுகின்றன. ராமானந்தா, கபீர், நானக் ஆகியவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் பொதுவாகக் கடவுளை ராமநாமத்தால் அழைத்தார்கள். ராமானந்தர் சீடர்களில் சிலர் விக்கிரக ஆராதனையும் செய்து வந்தார்கள். கபீரும் நானக்கும் மகமதிய மதத்தின் கொள்கையைப் பின்பற்றி விக்கிரகங்களையும் அவதாரங்களையும் ஒப்புக்கொள்ள வில்லை.

## வங்காளத்தில் பக்திவெள்ளம்

பாஞ்சாலத்தில் குருநானக் இந்து மகமதிய மதங்களைச் சமரசப்படுத்த முயன்று வந்த காலத்திலே, ஸ்ரீகிருஷ்ணசைதன்யர் வங்காளத்திலே வைஷ்ணவப் பிரசாரம் செய்து வந்தார். ராமானுஜரிடத்தில் தென்னிந்திய ஜனங்களுக்கு எவ்வளவு பக்தி உண்டோ அவ்வளவு பக்தி உண்டு வங்காளிகளுக்குச் சைதன்யரிடத்திலே. இவரும் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களைப்போல்

தர்க்க சாஸ்திர நிபுணராகவும் பக்த சிரேஷ்டராகவும் ஒருங்கே விளங்கினர்.

அன்புநெறியே இன்பநெறி யென்றும் கிருஷ்ணநாம சங்கீர்த்தனமே பேரின்பம் என்றும் உபதேசித்தார். பெரியாழ்வார், நம்மாழ்வார் முதலானவர்கள் கிருஷ்ணபக்தியில் விசேஷமாக ஈடுபட்டார்கள் என்றல், கிருஷ்ணபக்திதான் கிருஷ்ண சைதன்யருடைய முழுவைஷ்ணவமும் என்று சொல்லிவிடலாம்.

நீலவானம், நீலமேகம், நீலமலர் முதலான இயற்கை அழகுகளெல்லாம் ஆழ்வார்களைப்போல் இவரையும் பகவதநுபவத்தில் ஆழ்த்திவிட்டன. கிருஷ்ண சைதன்யரும் நாயக-நாயகி பாவத்தை ஒப்புக்கொண்டு ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு, ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் உள்ள தொடர்பு என்பர். இவரும் ஜாதிவித்தியாசம் பாராமல் ஏழைகளுக்கு உழைத்தார்.

தொண்டரடிப்பொடி யாழ்வாரைப்போல், பக்தனை சண்டாளன் பண்டிதனை பிராமணனுக்கும் மேல் என்று சித்தாந்தம் செய்தார் இவர். ராமானந்தர், கபீர் முதலானவர்களைப்போல் மகமதியர்களையும் தமது மதத்தில் சேர்த்துக்கொண்டார். பேர் அறிவோடும் பேரன்போடும் பெரும் பணிவோடும் கூடிய இவர் வாழ்க்கையும் கவித்வ உணர்ச்சியோடு வெளியிட்ட இவர் உபதேசங்களும் வங்காளத்தின் இதயத்தை வசீகரித்துவிட்டன.

சைதன்யரின் வைஷ்ணவம் இன்று உலகப் பிரசித்தி பெற்றிருக்கிறது. இவர் தென்னிந்தியாவிலும் யாத்திரை செய்ததாகச் சொல்லுகிருர்கள். பாஷை வித்தியாசம் எவ்வளவோ அதிகமாக இருந்தபோதிலும் மனப்பண்பிலே வங்காளிகள் தமிழர்களை ஒருவாறு ஒத்திருக்கிருர்கள் என்பர் திரு. ஸி. எப். ஆண்ட்ருஸ்.

## வட இந்தியாவின் 'ஆண்டாள்'

ராமானந்தரின் சிடர்களில் ஸாது ரவிதாஸர் என்பவரும் ஒருவர்; இவர் கபீருடைய நண்பர்; தோல் பதனிடும் தீண்டாத

வகுப்பைச் சேர்ந்தவர். தமது இஷ்ட தெய்வத்திற்குத் தோலினுலேயே ஒரு விக்கிரகம் செய்துகொண்டாராம். இவர் பாடல்களில் சிலவும் சீக்கிய வேதத்தில் இடம் பெற்றிருக்கின்றன. இவருடைய சிஷ்யைதான் பிரசித்தி பெற்ற சித்தூர் ராணியான மீராபாய்.

ரவிதாஸர் ராமபக்தராக இருந்தும், மீராபாய் கிருஷ்ணபக்தி உடையவளாக இருந்தாள். மேற்கு ஹிந்துஸ்தானத்தில் கிருஷ்ண பக்தி இயக்கத்தைப் பரப்பியவள் இவள். ஆண்டாளைப்போல் கிருஷ்ணனையே புருஷனுகக் கருதினுள். அவளைப்போல் இவளும் காதலைக் கண்ணீர் விட்டு வளர்த்தேன் என்கிருள். அவளைப் போல் இவளும் கவி; பக்திக் காதலால் இழைக்கப்பட்ட உருக்கமான இசைப்பாடல்களைப் பாடியிருக்கிருள். ஹிந்தியில் கவி பாடிய பெண்மணிகளில் இவளே மிகச் சிறந்தவள் என்று சொல்லுகிருர்கள்.

ஒரு சமயம் மீரா தன் இருதயத்தைக் கவர்ந்த நாதன் தாமசப்படுத்துகிருன் என்று வருந்துகிருள். ஒரு சமயம், 'மேகங்கள் அங்குமிங்கும் ஓடுகின்றன; ஆனுல் அவை ஹரியைக் குறித்த செய்தி ஒன்றும் கொண்டுவரவில்லை' என்று புகார் செய்கிருள். இவளைச் சூழ்ந்திருக்கும் இருட்டும் தனிமையும் துன்பமும், 'ஹரியின் காலடிச் சத்தத்தை நான் கேட்கிறேன்!' என்று திடீரென்று கூறுவதும் ஆண்டாளின் அநுபவங்களை ஞாபகப்படுத்துகின்றன.

இன்னும் ஏதாவது சந்தேகம் இருந்தால் பின்வரும் மீராபாய் பாட்டையும் கேளுங்கள் : 'அம்மா, கனவில் ஜகதீசன் என்னை மணக்கக் கண்டேன்......என் கைகளிலும் கால்களிலும் மஞ்சள் பூசி என்னைக் குளிப்பாட்டினுர்கள்......தோரணம் கட்டியிருந்தது. புரோகிதரும் வந்தார். பூர்வஜன்ம புண்ணியத்தால் மீராவுக்கு கிரிதரன் (கிருஷ்ணன்) கணவனுகக் கிடைத்துவிட்டான்!'

மீராபாயின் பாடல்கள் வட இந்தியா எங்கும் பாடப்படுகின்றன. இவள் குஜராத்தி பாஷையிலும் பாடியிருக்கிருள். இவளுடைய பாடல்களில் ஒன்றும் ஒரு காலத்தில் சீக்கிய

வேதத்தில் சேர்க்கப்பட் டிருந்ததென்று தெரிகிறது. இவளுக்கு விக்கிரக வழிபாட்டிலும் விசேஷ நம்பிக்கை உண்டு. இவள் காலத்திலே பிரசித்தி பெற்ற பக்த கவியான துளஸிதாஸரும் வாழ்ந்தாரென்றும் மீராபாய் தன்னைப் புருஷனுடைய உறவினர் உபத்திரவிப்பதாகத் துளசிதாஸருக்கு எழுதினளென்றும், அந்தக் கடிதத்திற்கு அவர் பதில் எழுதினரென்றும் ஒரு கதை வழங்குகிறது. அதில் பிரகலாதன் தந்தையையும், விபீஷணன் சகோதரனை ராவணனையும், பரதன் தாயையும், மகாபலி குருவையும், கோபிகா ஸ்திரிகள் புருஷர்களையும் துறந்தார்களென்றும், ராமனோடு உறவுள்ளவரே தமது உண்மையான அன்பரென்றும் துளசிதாஸர் எழுதியிருந்தாராம்.

## ஹிந்தி ராமாயண ஆசிரியர்

உண்மையில் துளசிதாஸர் மீராபாய்க்குச் சுமார் ஒரு நூற்றுண்டுக்குப் பின் இருந்தவரென்று ஆராய்ச்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள். இவரும் ரவிதாஸரைப்போல் ராமபக்தர். எனினும் மீராபாயின் பக்திமதத்திற்கும் துளசிதாசரின் பக்திமதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவர் ஹிந்தி பாஷையில் பாடியிருக்கும் ராமாயணம் அந்தப் பாஷைக்கே என்றும் அழியாத உயிரை அளித்துவிட்டது.

இவர் காலத்திலேதான் ஆழ்வார் திருநகரிக்கு அருகேயுள்ள ஸ்ரீவைகுண்டத்திலே தோன்றிய குமரகுருபர சுவாமிகள் என்ற சிவநேசச் செல்வர் ஹிந்துஸ்தானி பாஷையை நன்ருகக் கற்றுக் கொண்டு வடஇந்தியாவில் சைவப் பிரசாரம் செய்து வந்தார். அவர் தமது காசிமடத்தில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்வது உண்டென்றும், அக்காலத்தில் அவரோடு பழகிய துளசிதாஸர் தம்முடைய ராமாயணத்தில் கம்பர் கருத்துக்களை அமைத்திருக்கிருர் என்றும் சில பண்டிதர்கள் சொல்லுகிருர்கள். கம்பராமாயணத்திலும் ஆழ்வார் கருத்துக்களைக் காணலாம் என்பதையும் ஆழ்வார்களின் சித்தாந்தம் அந்தக் கவிச்சக்கரவர்த்தியையும் வசீகரித்து அவருடைய பக்தி உள்ளத்தையும் உருவாக்கிய

தென்பதையும் நாம் இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## முடிவுரை

ஆழ்வார்களின் பக்திச்செல்வம் ராமாநுஜர், ராமானந்தர் இவர்கள் மூலமாக விநியோகிக்கப்பட்டு இந்தியாவெங்கும் சிற்சில வேறுபாடுகளுடன் பரவியிருக்கிறது. வடஇந்தியா வேதோபநிஷதங்களையும் கீதையையும் அளித்து நமது நாகரிகத்திற்கும் சன்மார்க்கத்திற்கும் அடிப்படையான சமயக் கோட்பாடுகளை உதவிய தென்றால், அத்தகைய இந்துதர்மத்திற்குப் புத்துயிர் கொடுத்தது, தமிழ் நாட்டிலே ஆழ்வார்கள் தோற்றுவித்த இயக்கந்தான் என்று சொல்லலாம். இந்தப் பக்திஇயக்கத்திற்குச் சைவ நாயன்மார்களும் ஒருவாறு காரணராவர். இந்த இயக்கத்தினிடையே சங்கரர், ராமாநுஜர், மத்வர் முதலான பேராசிரியர்களும் தென் இந்தியாவில் தோன்றினுர்கள்.

பிரபந்த சாரமான அன்புநெறியும் அருள்நெறியும் கைங்கரியநெறியும் சகோதர தர்மமும் சாத்விக தர்மமும் மறுபடியும் உயர்ந்த லட்சியத்தோடும் சமரச நோக்கத்தோடும் பிரசாரம் செய்யப்பட்டால், இக்காலத்திலும் அவை சாதிச் செருக்கு, வகுப்பு வெறி இவைகளையும் சூனியவாதங்களையும் வென்று புதிய இந்தியாவையும், சிறப்பாகத் தமிழகத்தையும்,

நீதியால் வந்ததொரு
நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு
நெறிஅறியான்

என்று கவிச்சக்கரவர்த்தி குறிப்பிடுகிருரே, அந்தப் பெருநெறியிலே செலுத்தக்கூடும்.

# இருளூடு வந்த குரல்

**(பின்னுரை)**

'ஏன் இந்த ஓட்டம் ஓடுகிருய் ? அல்லும் பகலும் ஓடுகிருயே எங்கே ? சொல்லு ?'

'உன்னை அணுக வேண்டாம் என்றுதான் அகன்று போகிறேன். எத்தனை வளைவுகள், திருப்பங்கள், கோணங்கள், கோணல்கள், குறுக்குப் பாதைகள், முள்ளுக்காடுகள், மேடு பள்ளங்கள் வழியாகப் போகிறேன் பார்!'

* * *

சுற்றிச் சுற்றிச் சுழன்று போகிறது நாகரிகம். சில சமயங்களில் வழி தெரியவில்லை; அழுகை வருகிறது.

போகப்போக வசதி கிடைக்கிறது. அழுகண்ணீர் ஆனந்தக் கண்ணீர் ஆகிறது. அழுகுரல் எப்படி எவர் காதில் விழுந்ததோ ? வழிகாட்டியின் குரல் கேட்கிறது; உருவம் தெரியவில்லை. கண்ணீர் மறைக்கிறது, அழுகண்ணீருந்தான்; ஆனந்தக் கண்ணீருந்தான்!

உழைத்து உழைத்துக் களைத்துக் களைத்து, மீண்டும் உழைத்து உழைத்து எத்தனையோ விபத்துக்களுக்கும் பிழைக ளுக்கும் பிழைத்துப் பிழைத்து, முன்னே முன்னே போகிறது நாகரிகம். சற்றுப் பின்வாங்குவது முன்னே பாய்வதற்குத்தானே?

நம்பிக்கைச் சிறகு கட்டி மேலே பறக்கிறது ஒரு சமயம்; அவநம்பிக்கைக் குழியில் விழுந்து அல்லற்படுகிறது ஒரு சமயம்.

அச்சம், கவலை, அறியாமை, பொறாமை, போட்டி, பூசல், போர் முதலான எத்தனை அல்லல்களை, இடையூறுகளை, வஞ்சக் குழிகளைத் தாண்டி வந்திருக்கிறது! ஆர்ப்பாட்டங்களில் அட்டகாசங் களில் பிரலாபங்களில் அலறல்களில் குமுறல்களில் வழிகாட்டி யின் குரல் காதில் விழுவதில்லை.

அபூர்வமாக, அந்தக் காலடிச் சத்தங்கூடக் கேட்கிறது. அவசரப்படாமல் நிதானமாகக் கம்பீரமாக அடிவைக்கும் சத்தம். 'இது செம்மைப் பெருநெறி; உன் பாதையை இப்படியே அமைத்து வா' என்ற குரலும் கேட்கிறது. ஆனால், 'அது மெய்ம்மைப் பெரு வார்த்தை' என்று தெரிந்துகொள்வது எப்படி ?

'குரலும் காலடியும் கற்பனையோ?' என்று இடையிடையே தோன்றுகிறது. 'வழிகாட்டி வழிகாட்டி யல்ல; ஏதோ நம் கனவு காட்டுவதுதான்!' என்றும் படுகிறது. ஆனால் கனவின் உண்மை தெரிவதுதான் எப்படி ? ஆரவாரம் செய்துகொண்டு, 'வல்லான் வகுத்ததே வழி' என்று நடக்கிறது நாகரிகம்.

நல்லார்-பொல்லார் போராட்டங்களையும் சீராட்டங்களையும் கண்டு செல்லுகிறது. அறம் வெல்லக் காண்கிறது; 'அறமிலா மறவர், முடிசூடவும் காண்கிறது. முடிகள் உருண்டு பேரரசுகள் புரண்டு போவதையும் கண்டு போகிறது. காடு நாடாவதையும், நாடு காடாவதையும் காண்கிறது.........'இப்படிப் பல்லாண்டு. பல்லாண்டு, பல்லாயிரத் தாண்டு!'

* * *

இன்றைய ஞானம் விஞ்ஞான நாகரிகம்; அணுக்குண்டு யுகம். எனினும் கலியுகந்தான். 'கலிதனைக் கடக்கப் பாய்ந்து' மரணபயம் முதலான பயங்களையெல்லாம் அடியிட்டுத் துவைப் போம்' என்ற நம்பிக்கையையும் இழந்துவரும் கலியுகம். 'கலியும் கெடும் கண்டு கொண்மின்!' என்ற வாக்கையும் காதில் போட்டுக்கொள்ளாமல் விராதனைப்போல் மண் அதிர,விண் அதிர நடையாடும் கலிகாலம்.

ஆனல் வழிகாட்டும் குரலோ வாக்கோ தேவையில்லையா? தேவையை உணர்ந்துதான் பகுத்தறிவு முன்வந்து, 'விஞ்ஞானத்திற்குள்ளேதான் மெய்ஞ்ஞானம் எல்லாம்; எஞ்சி நிற்பதெல்லாம் அஞ்ஞானந்தான்! வா வா, நான் வழிகாட்டுகிறேன்' என்று மடி பிடித்து இழுக்கிறது. 'நம்பத் தகாததை நம்பாதே' என்று சொல்லிக்கொண்டே நம்புவதற்கு உரியதையும் புறக்கணித்த வண்ணம் நாகரிகத்தை இழுத்துச் செல்லுகிறது.

'அது என்ன, அப்பால் ஓர் அரவம் கேட்கிறதே, ஏதோ ஒரு குழல் இசைப்பதுபோல!' என்ருல், 'அதெல்லாம் மூடநம்பிக்கை தான்; எனக்கு அப்பாலும் ஒன்றும் இல்லை; இப்பாலும் ஒன்றும் இல்லை' என்கிறது பகுத்தறிவு. குரல் ஒலித்தாலும், குழல் இசைத்தாலும்-கண்ணன் குழலிசையே கல்லுருகப் புல்லுருக இசைத்தாலும்,-அணுக்குண்டுயுகத்தின் ஆரவாரத்திலே அது தெளிவாகத் காதில் விழுவது சாத்தியமா?

இந்த விடுதலை யுகத்திலே எல்லாருக்கும் விடுதலை; எல்லா வகைக் கட்டுகளிலிருந்தும் பயங்களிலிருந்தும் விடுதலை வேண்டியது தானே? 'அந்தக் குரல் குறித்து அஞ்சாதே' என்று அபயம் தருகிறது தன்மானத் தனி வீரம்.

'ஓஹோ, தெய்வ பயத்திலிருந்தும் விடுதலையா? விடுதலையினின்றும் விடுதலைகூடக் கிடைத்துவிடுமோ!' என்று அஞ்சுகிறது நாகரிகம்.

தெய்வ பயம் இல்லாவிட்டால் பயமே தெய்வம் ஆவிடுகிறது. அடடா, எத்தனை புதுமைத் தெய்வங்கள்! அணுக்குண்டுப் பயம் பரஸ்பர பயம், வருங்காலம் பற்றிய பயம் - பொருள், போகம், வேகம் என்னும் மும்மூர்த்திகளிடம் பயபக்தி-இன்னும் புதிய புதிய பயங்கள், பக்திகள்! 'மத நம்பிக்கையை ஒழித்து அவ நம்பிக்கைக்கு இரையாகவா நான்? சொர்க்க நரகங்களை மறுத்து இம்மையிலேயே கவலையென்னும் நரகப் படுகுழியில் விழுந்து கிடக்கவா?' என்று பெருமூச்சு விடுகிறது நாகரிகம்.

ஆகாசத்தை நோக்கி அழத் தோன்றுகிறது; தொழத் தோன்றுகிறது,

அலப்பாய் ஆகா சத்தை நோக்கி
அழுவன், தொழுவனே!

*[அலப்பாய்-மனக்கலக்கமாய்.]*
என்ற நம்மாழ்வாரின் வாக்கிற்கு இணங்க.

* * *

ஆனால், 'அந்த அழுகையும் தொழுகையும் பலவீனம். அழாதே, தொழாதே; அடி, பிடி, உடை, உதை! போராடு, முன்னேறு!' - ஜடமாயாவாதம். 'வானம் பார்த்து வழிநடந்தால் பூமியில் இடறி விழுவாய்; கைகால்களை முறித்துக்கொள்வாய்!' என்று பரிகசிக்கிறது பகுத்தறிவு.

'மண்ணை நோக்கி நோக்கிக் களைப்புற்றதும், விண்ணை நோக்கி ஆறுதல் பெற உரிமையில்லையா?' என்று கேட்கிறது நாகரிகம். 'விண்ணு? அது வெறும் பாழ்; சுத்த சூனியம்; முடிவில்லாத வஞ்சவெளி!' என்கிறது தன்மானத் தனி வீரம்.

'அந்த ஆழ்வார் பார்த்த ஆகாசத்தையும் விஞ்ஞானம் உற்றுப் பார்த்துவிட்டது! 'இல்லை' என்பது ஒரு மூலையிலிருந்து ஒரு மூலைக்கு மின்வெட்டைக் கல்வெட் டாக்கியது போன்ற எழுத்துகளில் எழுதி வைத்திருக்கிறதே! அவருக்குத்தான் தெரியவில்லை; உனக்கும் இன்னம் புரியவில்லையா?' என்று கேட்கிறது பகுத்தறிவு. 'வாழ்க்கை களைத்துக் கசந்து போகிறதே; சுவையில்லையே!' என்று ஏங்குகிறது நாகரிகம்.

'ஆண்டான்-அடிமை வாழ்விலா நீ சுவை கண்டாய்? ஈசுவரமயமாகியிருந்த உலகம் யந்திர மயமாகி வருகிறதே. போதாதா? ஒரு பொத்தானை அமுக்கித் தேவைகளைத் திருப்தி செய்துகொண்டு தேவ வாழ்க்கையாகிய போக வாழ்க்கையை இங்கேயே வாழலாமே!' என்று எக்களிக்கிறது தன்மானப் பகுத்தறிவு. 'ஆண்டவனுக்கு அடிமை செய்ய மறுக்கும் மனிதன், தான்

படைத்துவிடும் எந்திரத்திற்கு அடிமையாகிறனே!' என்று குமுறு கிறது நாகரிகம்.

'மதத்திலே பிறந்து மதத்திலே வளர்ந்து, மதத்திலே இயங்கி மதத்திலே மயங்கி, மதத்திலே மாண்டுபோவது அறிவுடைமைக்கு அழகா?' என்று கோஷிக்கிறது பகுத்தறியும் வீரம்.

எந்திரம் இன்னும் மனிதசிருஷ்டியைச் செய்துவிடவில்லை. எனினும் எந்திரம் ஊட்டுகிறது; மனிதனை உலகமெங்கும் ஓட்டு கிறது. எந்திரத்தால் வெல்லுகிறன், கொல்லுகிறன், கொல்லப் படுகிறன். எந்திரம் மனிதனுக்குத் தெய்வமுடி சூட்டுகிறது; மனிதனே, 'அடியேன் எந்திரதாஸன்! எந்திரமே சக்தி; எந்திரமே தெய்வம்!' என்று பக்தியுடன் போற்றுகிறன். இத்தகைய பக்தனை எந்திரமே ஆட்டிவைக்கிறது; வாட்டி வதைக்கிறது, புதைக்கிறது அல்லது தகனம் செய்துவிடுகிறது.

'இதைக்காட்டிலும் ஒரு பேராபத்தும் விரைகின்றதோ?' என்று அஞ்சுகிறது நாகரிகம்.' இயற்கையோடு இசைந்து நிலம், கடல், வானம் ஆகியவற்றுடன் ஒன்றுபட்டு வாழத்தக்க மனித உள்ளம் எந்திரத்தோடு எந்திரமாகிச் செயற்கைப் பொருள்களுடன் ஒன்றிப் போய்விடுமோ?' இந்தக் கேள்விக்கும் பதில் சொல்லுகிறது ஜடமாய பகுத்தறிவு.

'அத்தகைய இயற்கை வாதமோ, தத்துவ வாதமோ செல்லாக்காசு, இன்றைய ஜனநாயக யுகத்திலே. 'எந்திரம்தானே ஸ்ரீமான் பொதுஜனத்திற்கு நாயக உரிமை தந்திருக்கிறது?' என்று வாதிக்கிறது. 'இந்த எந்திரயுகத்தில் ஜனநாயகம் பண நாயகத்திற்கு அடிமைப்படுகிறது அமெரிக்காவிலே; சர்வாதிகாரத்திற்குச் சலாமிடுகிறது ரஷ்யாவிலே' என்று சுட்டிக்காட்டுகிறது நாகரிகம்.

இந்த எந்திர நாகரிகத்திலே உண்மைச் சுதந்திரந்தான் இருக்கமுடியுமா? 'எந்திரத்திறனே கைத்திறன்; எந்திர நிபுணனே பக்தன். உல்லாச யாத்திரையே தீர்த்தயாத்திரை!'

என்று கருதப்படும் இப்புதுமைக் கலியுகத்திலே தொழிலிலும் சுவையில்லை, பொழுது போக்கிலும் இன்பமில்லை. 'டப்பா உணவு, டப்பா கீதம், டப்பா சிந்தனைகள்' என்று இப்படியே நாகரிகம் போகிற போக்கில், உள்ளபடி உண்மை உணர்ச்சிக்கோ அழகுணர்ச்சிக்கோ இடமெங்கே?

நன்று தீது நாடலேன்;
தின்று தீய தேடினேன்

என்ற விராதவாழ்க்கைக்கும் நவநாகரிக வாழ்க்கைக்கும் ஸாராம்சத்தில் வேற்றுமை தென்படுகிறதா?

இப்படி எல்லாம் நீள நினைந்து நாகரிகம் தனக்குத் தானே ஒரு கேள்வி போட்டுக்கொண்டதும், பகுத்தறிவு திகைத்து நிற்கிறது. நாகரிகம் தொடர்ந்து, 'நான் இன்று ஜனநாயக நாகரிகந்தான்; ஆனால்க்ஷேமமாக, ஆரோக்கியமாக இருக்கிறேனா?' என்று மறுபடியும் தன்னைத்தானே உரக்கக் கேட்டுக்கொள்கிறது. பகுத்தறிவு திடுக்கிட்டுப் போகிறது.

* * *

வெளிப்பார்வைக்குத் தோற்றம் பிரமாதமாக இருக்கிறது. ஆடம்பர ஆடைக்கும், படாடோப அணிகளுக்கும் குறைவில்லை. ஆனால் இன்றைய நாகரிகத்தின் இதயத்திலேயே நோய் தொத்திக்கொண் டிருக்கிறது. 'வாழ்க்கை வாழத்தான்' என்று மார் தட்டுகிறோம். ஆனால் பரந்த பரபரப்பான வாழ்க்கைதானே வாழ்கிறோம்; ஆழ்ந்த, அமைதியான, ஆன்ம சுக வாழ்க்கை இல்லையே!

உண்ணுகிறோம்; உழைக்கிறோம்; பூசவிடுகிறோம்; கூச்சல் போடுகிறோம்; உறங்குகிறோம்; உறங்கி விழித்தபின் மீண்டும் ஓடுகிறோம், சாடுகிறோம்; 'முன்னேறுகிறோம்' என்று ஒருவரை ஒருவர் மிதித்துத் தள்ளுகிறோம். கூனி-மனப்பான்மையுடன், நாம் வாழ்வதற்கு வேண்டாதார், 'வீழ்க!' என்கிறோம்.

என்ன ஆரவாரம்! என்ன ஆவேசம்! என்ன ஆடம்பரம்! என்ன அதிகார வைபவம்! 'இந்தக் கதையின் பொருள்தான் இன்னதென்று புலப்படவில்லை' என்று கதறுகிறது நாகரிகம்; அறிவு பதறுகிறது, 'இதிகாச புராணங்கள் கனவிலும் காணாத ஒரு வகை அசுர நாகரிகத்தைத்தான் நாம் உருவாக்க உதவுகிறோமோ?' என்று.

'இந்த நோய்க்கு மருந்தும் உண்டோ?' ஆஸ்திகப் போர்வை போர்த்துச் சிந்தையிலும் செயலிலும் ஆண்டவனை மறுக்கும் ஆஷாடபூதித்தனமும் நாஸ்திகத்திற் கல்லவா படைத்துணையாகி நிற்கிறது? இந்த ஆஸ்திகம் இந்த நாஸ்திகத்துடன் மோதுவது இருளை இருள் புடைப்பதுதானே!

இத்தகைய இருளிலும் குரல் ஒலிக்கிறது. 'என்னைவிட்டு விலகிப் போய்க்கொண்டேயிருந்தால், இப்படியேதான் அனர்த்த பரம்பரை நீண்டுகொண்டே போகும்' என்று. இந்தக் குரலைத் தான், 'இந்த உலகின் இருள் நீங்கி வந்துதித்து அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த' ஆழ்வார்–நாயன்மார்களின் அருட்குரலாகிய நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும் தேவாரத்திலும் கேட்கிறோம். இறைவன் குரலை மணிவாசகப் பெருமானது அருள்வாக்காகிய திருவாசகத்திலும் கேட்கிறோம்.

* * *

பக்திமதம் தமிழகத்தில் விசேஷமாக ஸ்ரீவைஷ்ணவம் என்ற பெயராலும் சைவம் என்ற பெயராலும் வழங்கப்படுகிறது. ஸ்ரீவைஷ்ணவத்தை நமது நாட்டில் நன்கு பரப்பி நிலைபெறச் செய்த பன்னிரண்டு ஆழ்வார்களுள் தலைவர் நம்மாழ்வார் என்பது பிரசித்தம். இவரை ஸ்ரீவைஷ்ணவர்கள் பரம ஆசாரியன் என்று போற்றுவது வெளிப்படை.

ஸ்ரீவைஷ்ணவம் ஸாராம்சத்தில் நம்மாழ்வாரின் சம்பிரதாயமே என்பர். சம்பிரதாயம் என்றால், 'நலமான (குலதனமாகிய) உபதேசம்.' 'நல்ல உபதேசத்திலே' உபதேசிப்பவன் உபதேசம்

பெறுபவனுடைய பேறு ஒன்றையே பயனாகக் கருதித் தனது கருணை ஒன்றினாலேயே உபதேசிக்க வேண்டும்' என்பர். நலமான உபதேசங்களை யெல்லாம் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் நம்மாழ்வார் பாசுரங்களில் காணலாமென்பது வைஷ்ணவர் கொள்கை.

திருவாய்மொழியைக்கொண்டே 'தெளியாத மறைநிலங்கள் (வேதாந்தப் பொருள்களை யெல்லாம்) தெளிந்தவர் களாய்' ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்கள் தங்கள் வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் பக்திமத ஸாரமாகிய பிரபத்தி யென்ற சரணாகதிக் கொள்கையை நாடெங்கும் பரப்பினார்கள். நம்மாழ்வாரின் நல்லிசையை–ஜீவநாதத்தை–இமயத்தில் மோதிக் குமரி வரை ஒலிக்கச் செய்தனர்.

உலக மக்கள் தம்முள் வேற்றுமையின்றிக் கலந்து வாழ்வதற்குரிய அன்பையும் அருளையும் வளர்த்துவிடும் சக்தி இன்றும் நமது பக்திமதத்தில் நீறுபூத்த நெருப்பைப்போல் காணப்படுகிறது என்பதில் ஐயமில்லை.

இருளூடு வந்த குரல் இன்றைய உலகத்திற்கும் வழிகாட்டத் தக்க குரல்தான்.

முற்றும்.



## ஆழ்வார்களும்

நம்மாழ்வார், ராமானுஜர், பெரியவாச்சான்பிள்ளை, திருமலைப்பிள்ளை, பிள்ளை லோகார்ய ஜீயர் முதலிய பல வைஷ்ணவ ஆசாரியர்களையும், வைஷ்ண சமயத்தையும் சம்பிரதாயத்தையும் பரப்புவதற்காக மகாத் தியாகங்கள் செய்த பக்தர்களையும் பற்றிய செய்திகளையும் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் விசேஷமாக அமைந்த செய்திகளையும் வெகு அழகாகவும் நெஞ்சை அள்ளும் முறையிலும் எழுதியிருக்கிறார் ஆசிரியர்.

வைஷ்ண சம்பிரதாயத்தைப்பற்றியும் வைஷ்ணவ ஆசாரியர்களைப் பற்றியும் கணிசமான அறிவு பெற விரும்புவோர் எல்லோரும் படித்து அநுபவிக்கவேண்டிய புத்தகம்.

## பாடும் பக்த மணிகள்

**தொண்டக்குலமே தொழுகுலம்** 2-50

குலம் இல்லாதவர்களுக்கும் ராஜகுலம் தருவது பக்தி என்ற உண்மையைத் திருமழிசை யாழ்வார், திருப்பாணாழ்வார் என்ற இருபெருந் தொண்டர்கள் வாயிலாகப் புலப்படுத்துவது இந்நூல்.

**மூவர் ஏற்றிய மொழிவிளக்கு** 2-00

முதலாழ்வார்கள் மூவரும் உண்மையைத் தேடி, யாத்திரை செய்து, கடைசியாக ஓர் இடத்தில் சந்தித்து, நடுநிசியில் தமிழ் விளக்கு ஏற்றிய வரலாற்றைத் தெரிவிக்கும் அருமையான நூல்.

**அடி சூடிய அரசு** 2-00

ராஜரிஷியான குலசேகராழ்வாரின் வாழ்க்கைச் சரித்திரத்தையும் குணசித்திரத்தையும் இந்நூலில் கண்டுகொள்ளலாம். அன்று மலைநாட்டில் பெய்த பக்தி மழையை இன்றைத் தமிழர்களும் தங்கள் வாழ்க்கையை வளமுறச் செய்வதற்குப் பயன் படுத்திக்கொள்ளலாம்.

**துயில் எழுப்பிய தொண்டர்** 2-00

தொண்டரடிப்பொடி என்னும் பக்த மணியின் கதை, பக்திக்கதையாகத் தொடங்கி, இடையே காதலாகி, முடிவில் பக்திப் பெருங் காதலரின் கதையாக விளைந்த சுவையான வரலாற்றைத் தெரிவிக்கிறது.

**பகவானை வளர்த்த பக்தர்** 2-00

'நம் தமிழ்நாட்டிலே கண்ணன் பிறந்தான்! அந்தக் குழந்தைப் பெருமானை வளர்த்து விட்டவரும் இவரே!' என்று சொல்லும்படி அமைந்திருக்கின்றன பெரியாழ்வார் பாசுரங்கள். இவரையும் இவர் கண்ட ஜகன்மோகன பாலகோபாலனையும் கண்டுகொள்வதற்குத் துணைசெய்வது இந்நூல்.